ANNAMALAI UNIVERSITY TAMIL SERIES.

# பெரும்பாணாற்றுப் படை

## ஆராய்ச்சியும் - உரையும்.



---

பாஷா கவிசேகர மகாவித்வான்
ரா. இராகவையங்கார்
எழுதியது.






அண்ணாமலைநகர்

1949

ANNAMALAI UNIVERSITY TAMIL SERIES.

# பெரும்பாணாற்றுப் படை

## ஆராய்ச்சியும் - உரையும்.



---

பாஷா கவிசேகர மகாவித்வான்
ரா. இராகவையங்கார்
எழுதியது.




அண்ணாமலைநகர்
1949

# பதிப்புரை.

இளந்திரையன் வரலாறும் பெரும்பாணாற்றுப் படை உரையும், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துத் தமிழ் ஆராய்ச்சிப் பகுதியில் மகாவித்வான் பாஷா கவிசேகரர் ரா. இராகவையங்காரும் அவர்க்குதவியாக யானும் இருந்து பணியாற்றிய போது எழுதப்பட்டவை. இதுகாறும் தொண்டையர் நாவலந் தீவிற்குப் புறம்பான நாட்டினர் என்றும், சோழனுக்கும் நாக கன்னிகைக்கும் பிறந்து தொண்டைக் கொடி சூட்டப் பெற்றுத் திரையாற் கரைக் கண் ஒதுக்கப்பட்டவன் ஆதலின் திரையன் என்ற பெயர் எய்தியதென்றும், பலரும் கருதிவந்தனர். இக் கொள்கைகளை மறுத்துத் துரோணர்க்கும் க்ருதாசி என்ற சுரமகட்கும் பிறந்தவன் அசுவத்தாமன் என்றும், அசுவத்தாமனுக்கும், மதனி என்ற அரமகட்கும் தோன்றியவன் பல்லவன் என்றும், போத்து என்பது பல்லவர்குரிய இடபக் கொடியையே குறிக்கும் என்றும், தொண்டை என்பது குடிப் பெயர் என்றும், பல்லவப் பெயர்க்கு முன்பே தொண்டையன் என்ற பெயர் உண்டாகி யிருக்கவேண்டும் என்றும், துரோணம் என்ற பதமே தொண்டை என மருவிற்றென்றும், பல்லவகுலம் கடல்கெழு செல்வி வழியாகவந்த துரோணன்மரபென்றும் தக்க ஆதாரங்கள் காட்டி இக்கட்டுரைகள் எழுதப் பட்டன. இவை ஆராய்ச்சி அறிஞர்க்கு ஓர் அரிய விருந்தாகும் என்பதற் கையமின்று. இவற்றை வெளியிடுவதற்கு அநுமதி அளித்த அண்ணாமலைப் பல்கலைக் கழக ஸிண்டிக்கேட்டாருக்கும் விரைவில் அச்சியற்றித்தந்த சிதம்பரம் பாண்டியன் அச்சகத்தாருக்கும் எமது நன்றி உரித்து.

அண்ணாமலைநகர்,
19—9—49.

E. S. வரதராஜய்யர், B. A.,
ஸீனியர் லெக்சரர்.

# தொண்டைமானிளந்திரையன்.

இவன் சங்க மருவிய பத்துப் பாட்டுள் பெரும்பாணாற்றுப் படைத் தலைவன். கடியலூர் உருத்திரங் கண்ணனாராற் பாடப் பெற்றவன். இவனைப்பற்றி இப் பாட்டிற் கிடைக்கும் செய்திகள் பின் வருமாறு:—

> "இருநிலங் கடந்த திருமறு மார்பின்
> முந்நீர் வண்ணன் பிறங்கடை யந்நீர்த்
> திரைதரு மரபி னுரவோ னும்பல்
> மலர்தலை யுலகத்து மன்னுயிர் காக்கு
> முரசு முழங்கு தானை மூவருள்ளு
> மிலங்குநீர்ப் பரப்பின் வளைமீக் கூறும்
> வலம்புரி யன்ன வசைநீங்கு சிறப்பி
> னல்லது கடிந்த வறம்புரி செங்கோற்
> பல்வேற் றிரையன்" (பெரும்பாண். 29—37)
> "கொண்டி யுண்டித் தொண்டையோர் மருக"
> (பெரும்பாண். 454)
> "நீர்ப்பெயற் றெல்லை போகி" (ஷ. 319)
> "கச்சி யோனே கைவண் டோன்றல்" (ஷ. 420)
> "செந்தீப் பேணிய முனிவர் வெண்கோட்டுக்
> களிறுதரு விறகின் வேட்கு
> மொளிறிலங்கு கருவிய மலைகிழ வோனே. (ஷ. 498-500)

இவற்றிற்கு "அகன்ற இடத்தையுடைய உலகத்தில் நிலைபெற்ற உயிர்களைப் புரக்கும் முரசு முழங்குகின்ற நாற்படையினையுமுடைய சேர சோழ பாண்டியர் என்னு மூவரிலும், கடலிடத்துப் பிறந்த சங்கின் மேலாக உலகங் கூறும் வலம்புரிச் சங்கையொத்த குற்றம் நீங்கும் தலைமையினையும் மறத்தைப் போக்கின அறத்தை விரும்பின செங்கோலையுமுடைய, பெரிய நிலத்தை

யளந்த திருவாகிய மறுவை யணிந்த மார்பினையுடைய கடல்போலு நிறத்தை உடையவன் பின்னிடத்தோனாகிய சோழன் குடிப்பிற் பிறந்தோன் என்றும், அக் கடலின் திரை கொண்டுவந்து ஏறவிட்டமையாற் பல வேற்படையினையுடைய திரையனென்னும் பெயரை உடையவன் என்றும், பகைப் புலத்துக் கொள்ளையாகிய உணவினையுடைய தொண்டையைச் சூடினோருடைய குடியிலுள்ளவனே என்றும், நீர்ப் பெயற்றென்னும் ஊரினெல்லையிலே போய் என்றும், கைவளப்பத்தையுடைய தலைவன் தன் பரிசிலை விரும்பித் தன்பாற் சென்றோர்க்குப் பாதுகாவலாகிய காஞ்சிபுரத்தே இருக்கின்றான் எனவும், சிவந்த தீயைக் கைவிடாமற் காத்துப் போந்த இருடிகள் வெள்ளிய கொம்பினையுடைய களிறு முறித்துக்கொண்டு வந்த சமிதையாலே வேள்வியைச் செய்யும் விளங்குகின்ற அருவிகளையுடைய மலையை யாளும் உரிமையை யுடையோன்" எனவும் வரைந்தனர் நச்சினார்க்கினியர்.

இவற்றால் இப் பாட்டுடைத் தலைவன் குல முதல்வன் திருமால்வழி வந்தவன் எனவும், இக் குலத்தில் இவனுக்கு முன்னோனொருவன் கடற் றிரைதரு மரபினுண்டாயினன் எனவும், அவன் குலத்தில் இவன் திரையன் எனத் தன் குலப் பெயர் பூண்டனன் எனவும், சிறந்த வீரர்களாகிய இவன் முன்னையோர் தொண்டையர் எனப் பெயர் சிறப்பரெனவும், இவனுக்கு நீர்ப்பேர் என்னும் ஊரும், திருமால் சயனங்கொண்ட திருக்கோயிலையுடைய கச்சியும், முனிவர் களிறுதரு விறகின் வேட்கும் தெய்வத் தன்மை பொருந்தியதோர் மலையும் உண்டெனவும் அறிந்துகொள்ளலாம். இங்கு இவன் முன்னையோராகக் கூறப்பட்ட தொண்டையர் என்னும் பெயர் தமிழிற் பழங்காலத்தே "பல்லவர்" எனப்பட்ட ஒருவகை யரசர்க்கன்றிப் பிறர்க்கு வழங்கக் காண்கிலேன். கள்வர்

கோமானுகிய புல்லி என்னும் வள்ளலொருவன் இவ் வேங்கட நாட்டை யுடையனுகிய காலத்தும் அவனைப் பழம்புலவர் தொண்டையன் என்னும் பெயராற் கூறினு ரில்லை. நச்சினுர்க்கினியர் தொல்காப்பியம் அகத் திணையியல் 54-ம் சூத்திரவுரைக்கண் எடுத்துக்காட்டிய

"முலைபொழி நீம்பான் மன்சேறு படுப்ப
மலர்தலை யுலக மோம்பு மென்ப
பாபிலைத் தொண்டைப் பல்லவ னுணையின்
வெட்பிந் நாயந்து வில்லே ருழவர்
பொருந்தா வடுகர் முனைச்சுரங்
கடந்து கொண்ட பல்லா நிரையே"

என்னும் மேற்கோட் பாடலில் "தொண்டைப் பல்லவன்" என வழங்கியுள்ளது காணலாம். ஆண்டுத் தொண்டையென்பது நாட்டின் பெயரோ, குடியின் பெயரோ என ஆராயப் புகின், வடவேங்கடந் தென் குமரியாயிடைத் தமிழ்கூறு நல்லுலகத்தைச் செந்தமிழ் நாடு கொடுந்தமிழ் நாடெனப் பகுத்த பழங்காலத்தே தொண்டை நாடென்னும் பெயரான் ஓர் நாடு பகுப்புண் டிருந்ததென்பதற்கு மேற்கோள் இடையாமை அறியப் படும். செந்தமிழ்நாட்டை வைத்துச் சூழ்ந்துள்ளனவாகக் கூறப்பட்ட பன்னிரு கொடுந் தமிழ்நாட்டுப் பகுப்பில் இப் பெயரில்லாமை நன்கறிந்தது இந் நாட்டுப் பின்ன ருண்டாகிய சாசனப் பகுதிகள் பலவும் அப் பன்னிரு கொடுந் தமிழ் நாட்டுட்பட்ட அருவாநாட்டையும் அருவா வட தலையையும் தொண்டைநாட்டுட் சேர்த் தோதுத லானே பழங்காலத்து அருவா, அருவா வடதலையென வழங்கிய நிலக்கூறு பின்னெருகாலத்தே யாதாமொரு காரணத்தால் தொண்டைநாடெனப்பட்டது என்பதே பொருந்தியதாகும். தொல்காப்பியனுர் வடவேங்கடந் தென்குமரியாயிடைத் தமிழ் நிலத்தை

"வன்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு"

என்று செய்யுளியலிற் கூறி, அதற்கு நன்கியையவே "போந்தை வேம்பே ஆர்" என்று சேரர் பாண்டியர் சோழர் என்னும் தமிழ் மூவேந்தர் மாலையையே எடுத்து விளக்கிச் செல்லுதலான் அவர் காலத்து இத்தமிழ் நாடு மலையமானடு, பாண்டிநாடு, சோணடு எனப் பாகுபாடு பெற்று வழங்கியதன்றித் தொண்டைமானடு என்று ஒன்று பகுக்கப்பட்டு நான்கு நாடாயினதில்லை யென்பது தெளியலாகும். இதனுற் றொண்டை யென்பது பழைய காலத்தே நாட்டின் பெயராகாமலே இருந்தது. அருவா, அருவா வடதலையுட் குடியேறிய தொண்டையர் என்னும் ஒரு குடியினரால் ஆளப்பட்ட காரணத்தால் அவர் குடிப் பெயர்தந்து வழங்கப்பட்டதாதல் தெரியலாம்.

---

அர்வரு - குதிரை என்ப. பன்றிநாடு என்றாற் போலப் பரிமாநாடு என்று கொள்ளலாகும். அருவாளர் குதிரைவீரர் என நினைதல் தகும். இவர் அரசன் முசிரி நாட்டுப்பிதுண்டம் என்னும் ஊரினன். அவராஜன் என்று ஹத்திகும்பாவிலுள்ள காரவேலாசாசனத்தா லறியப்படுவான். அவராஜன் என்பது அர்வராஜன் என்பதன் மரூவாகும். இவ்வரசனிருந்த பிதுண்ட நகரத்தையழித்துக் கழுதை யேர் பூட்டிக் காரவேலா உழுதனன் என்ப. குதிரை யரசன் ஊரைக் கழுதை யேரால் உழுதனன் என்ற நயங்கண்டுணர்க. இவற்றால் அருவாவடதலைப் பரப்பு ஒருவாறு உணரலாம். முசிலி நாடும் பிதுண்டநகரமும் டாலமி, பெரிப்ளஸ் என்னும் மேற்றிசை யாத்திரிகர் இருவரானும் கூறப்பட்டனவாம். இனிப் பல்லவன் அசுவத்தாமன் வழியினன் ஆதலின் அப் பரம்பரையினர் அருவா என்று கூறப்பட்டாரோ என்று கூறுவதற்கு மிடனுண்டு.

இக் கருத்திற் கியையவே சேரன், பாண்டியன், சோழன் என்னும் அரசர் பெயரான் அவ்வந்நாடுகள் வழங்கப்பட்டவாறு கண்டு கொள்க. இவ்வாறே தொண்டையர் என்னும் குடியிற் ரோற்றமுடைய ஓரரசனாகிய தொண்டைமானால் ஆளப்பட்ட காரணத்தாலே தொண்டைமானாடு தொண்டை நாடாயிற்றென்பதே இயைபுடைத்தாம். தண்டகன் நாடு என்பது தொண்டை நாடாயிற்றென்பாரும் உண்டு. சங்ககாலத்துத் தொண்டைமான் பெயர் எட்டுத் தொகை நூல்களுட் கேட்கப் படுதலான் இக்குடியரசர் தொல்காப்பியக் காலத்திற்கும் இடைப்பட்டதோர் காலத்தே இந்நாடாட்சி பெற்றவராதல் ஒருதலையாம். இங்ஙனமாகவும் நச்சினார்க்கினியர் தொல்காப்பியச் செய்யுளியலில்,

> "வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பி
> னாற்பெய ரெல்லை யகத்து"

என்பதனுரையில் "நாற்பெய ரெல்லை யென்பது" நான்கு மண்டிலம் என்றுகொண்டு பண்டைத் தமிழ் வேந்தர் நாட்டொடு தொண்டை நாட்டையுங் கூட்டிக் கொண்டார். அஃது ஆசிரியர் கருத்தாயின் "மூவர் தண் பொழில் வரைப்பின்" என்று புகலமாட்டாரெனக. நல்லறிவுடைய தொல் பேராசிரியர்க்கு நான் மண்டிலங் கூறுதல் உடன்பாடன்மை யுணர்ந்து கொள்க. அவர் பெரும்பாணாற்றுப் படைத் தலைவனாகிய தொண்டைமானைக் குறுநில மன்னனெனத் துணிதல் தொல்காப்பிய மரபியல்,

"வில்லும் வேலும்" என்னுஞ் சூத்திர உரையுள் "மன்பெரு மரபினேனோர்" எனப்படுவார் அரசு பெறு மரபிற் குறுநில மன்னரெனக் கொள்க; அவை பெரும் பாணாற்றுள்ளும் பிறவற்றுள்ளுங் காணலாம்" என

உரைத்ததனுல் அறியப்படும். முன்னும் புறத்திணை யியலுள் மூவர் மாலையுமே கூறுதல் காண்க. (தொல். புறத். 5) சங்க நூல்களுள் யாண்டும் "முரசு முழங்கு தானை மூவர்" என்பதன்றி நால்வர் என வாராமையுங் கண்டுகொள்க. இங்ஙனமாயினும் இத் தொண்டையர் ஒழுக்கத்தாலும் அறிவாலும் அறம்வளர் செங்கோலா லும் படை வன்மையாலும் வேதவழக் கொடுபடுதலா னும், தமிழ் மூவேந்தரொடு வேற்றுமையின்றி ஒரு படிப் பட்டவராக இருந்த சிறப்பான், இவரையும் நல்லிசைப் புலவர் நூல் தொடுத்து வாழ்த்துவாராயினர் என்று துணியலாம். இவ்வுண்மை இத்தொண்டைப் பல்லவர் சாசனங்களில் காணப்படும் அறத் துறைகளாலும் தமிழ்ப் பழம் பாடல்களாலும் நன்குணர்க. இவ்வொழுக்க வொற்றுமையே இவர்க்கு மகட்கொடுத்தலும் இவர் பால் மகட் கோடலுமாகிய தொடர்பை மூவேந்தருடைய ராயினுர் என்பதற்குக் காரணமாகும். இத் தொண்டை யரை இந் நாவலந் தண் பொழிற்குப் புறம்பான நாட்டா ரென்று கருதினுரும் உண்டு. அங்ஙனமாயின் இவர் வைதிக ஒழுக்கத்தவராதலும், இவர்பான் மூவேந்தர் மகட்கோடல் முதலிய புரிதலும் எளிதிலாகா என்க. இவர் இக்குலத்தவர் எனத் துணிதற்கு இவர் பெயரான் உள்ள பழைய சாசனப் பகுதிகளே மிகவும் துணையாவன: அவை மயிடவோலு (Mayidavolu) ஹிர ஹட கள்ளி (Hiragada halli) தண்டன்தோட்டம், வயலூர் வேலூர்ப்பாளையம், பாகூர், கூரம், உதயேந்திரம், காசக் குடி, சிராப்பள்ளிக் குன்று என்னுமிடங்களிற் கிடைத் தவை இவ்வாராய்ச்சிக்குச் சிறந்தனவாகும். இவற்றுட் பலவகையிலும் ஒத்துள்ள வரலாறு.

உலகு முதல்வனுன திருமால் இக்குடித் தலைவன் என்பதும், இத் திருமாற்குப் பிரமனும் அவனுக்கு ஆங்

ிரஸனும், அவனுக்குப் பிருகஸ்பதியும், அவனுக்கு ஸம்யுவும், அவனுக்குப் பாரத்வாஜனும் உண்டாயினர் என்பதும், அப்பாரத்வாஜருக்குத் துரோணனும் அவனுக்கு அச்வத்தாமனும், அவனுக்குப் பல்லவனும் உண்டாக அப்பல்லவனடியாக இக்குடி பெயர் பெற்று வந்ததென்பதும் ஆம், இத்தொண்டைமான் என்னும் பெயர் சோழன் ஒருவன் நாககன்னியைப் புணர்ந்து பெற்ற குழவிக்குத் தொண்டைக்குடியைச் சுற்றிக் கடலில் விட அக் கட்ற்றிரை கொணர்ந்து தந்ததனால், அவனை இளந்திரையன் என முதன்முதல் வழங்கப்பெற்றதென்பாரும் உண்டு. (பெரும்பாண். நச்சினர் உரை 31-ம் வரி) அஃது இளந்திரையனையே பாடிய பெரும்பாணாற்றில் அவனைக் "கொண்டி யுண்டித் தொண்டையோர் மருக" எனவும் "திரைதரு மரபி னுரவோனும்பல்" எனவும் பாடுதலான் இச் செய்திகள் இளந்திரையற் குரியன வாகாமையும் அவன் முன்னையோர்க்கே உரியன ஆதலும் இனிது துணியப்படுதலான் முரணுதல் காண்க.

இவற்றால், "திரைதரு மரபு" ஒன்று இவ் விளந்திரையற்கு முன்னரே இக்குடியில் வழக்கு உண்டென்றும் அம் மரபிற் றோன்றிய பழையர் தொண்டையர் எனப் பெயர் சிறந்தனரென்றும் நன்கறியலாகும். இதனால் நச்சினார்க்கினியர் கூறிய தொண்டைக்கொடி சுற்றிய செய்தியால் தொண்டையர் எனப்பட்டனர் என்பது மிகவும் ஐயத்திற்கிடனாகவுள்ளது காண்க.

இனி இவர் பிராகிருதத்தில் எழுதிய சாசனங்களில் இவரைப் பலவர் என்றெழுதியிருத்தல் காணலாம். (மயிடவோலுச் செப்பேடுகள் பார்க்க). இதனாற் பல்லவ என்று வட்மொழியில் வழங்குவதே பலவ என்று பாகத

வழக்குப்பெற்றதென்று துணியலாம். இது பாகத வழக்கென்பது டுப்ராயில் துரையவர்கள் எழுதிய "தக்ஷிண பூர்வ சரிதம்" என்னும் ஆங்கில நூலிற் (பக். 55, 56) கண்டுகொள்க. இப் பாகத வழக்கே இப் பெரும் பாணாற்றுப் படையில் உருத்திரங்கண்ணனார் இத் திரையனை,

"இழுமென் புள்ளி வீண்டு கிளைத்தொழுதிக்
கொழுமென் சினைய கோளி யுள்ளும்
பழமீக் கூறும் பலாஅப் போலப்
புலவுக் கடலுடுத்த வானஞ் சூடிய
மலர்தலை யுலகத் துள்ளும் பலர்தொழ
ஒன்னா ருலைவிடத் தார்த்துக்
கச்சியோனே கைவண் டோன்றல்"

எனப்படு மரத்திலுயர்ந்த பலவோடு உவமித்துப் பாடத் தூண்டியதென்பது ஏற்புடைத்தேயாம். பலா என்பது பலவு என வழங்கப்படுவது,

"செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி"

என்பதனாலறிக. குறுந்தொகையுள் இவ்வாசிரியரே.

"நெடுநீ ரம்ப லடைப்புறத் தன்ன
கொடுமென் சிறைய கூருகிர்ப் பறவை
யகலிலைப் பலவின் சாரன் முன்னிப்
பகலுறை முதுமரம் புலம்பப் போகும்
சிறுபுன் மாலை" (352)

எனப் பாடுதலாற் பொருளுண்மை யுணர்க. "பழுமர முள்ளூர்ப் பழுத்தற்றால்" என்னுங் குறளும் "பழுமரம் போற் பல்லார் பயன்றுய்ப்ப" என்னும் நாலடியும் இண்டைக்கு நினைக. இவர் திரையனைப் "பலவன்" என்று உலகிலுள்ளார் பாகதத்தில் வழங்குதல் கண்டு அதற்

கேற்பப் புள்ளின் இண்டுகிளைத் தொகுதியைச் சினைகளி னுடைய பலவுபோலப் பலர் சார்ந்து வழிபட விழவு மேம்பட்ட மூதூராகிய கச்சியின்கண் உள்ளனன் என்று பாடினரென்று கொள்க. இது ''நோக்கு'' என்னுஞ் செய்யுளுறுப்பால் அமைந்ததென்று தெளிக. இங்ஙனங் கொள்ளாது பலா அப்போல மேம்பட்ட மூதூர் என்று கச்சியையே கருதின் கச்சி ''நான்மறை யொருவற் பயந்த பல்லிதழ்த் தாமரைப் பொகுட்டிற் காண்வரத் தோன்றி மேம்பட்ட மூதூர்'' என்று மிகவும் உயர்ந்ததோர் உவமையாற் சிறப்பிக்கப்பட்டதன் பின்னர் அதனிற் ருழ்ந்த பலா அப்போல மேம்பட்ட மூதூர் என்று கூறப் படுவது பொருந்தாதென்க. இதனுற் ருமரைப் பொகுட்டையொத்த மூதூராகிய கச்சியில் கோளியுள் ளும் பழமீக் கூறும் பலாப்போல வுள்ளான் என்பதே கருத்தாகக் கொள்க. ஊர்க்குத் தாமரைப் பொகுட்டும் அதன்கணுள்ள அரசற்குப் பழுமரமாகிய பலாவும் உவமையாய்ச் சிறத்தல் கண்டுகொள்க.

இனி, ''தொண்டையர் என்பது இக் குடிக்கு இயை புடைய பெயராமாறு எங்ஙனமெனிற் கூறுவேன். இக் குடியினர் சாசனங்களிற் பலவிடத்தும் தம்மை ''நவ கண்டமும்'' உடையவராகக் கூறுதல் காணலாம். தமிழில் ''தொண்டு'' என்பது ஒன்பதுக்குப் பெயர் என்பது,

''தொண்டு தலையிட்ட பத்துக் குறை'' (பொருள் 413)

என்னுந் தொல்காப்பியச் சூத்திர முதலாகத் தெரிந்த தாம். இதனுல் தொண்டையென்பது ஒன்பது கண்டத் திற்கும் பொதுமையிற் கூறும் பெயராகும். அவ்

வொன்பது கண்டமும் உடையார் தொண்டையராதற்குத் தடையில்லையென்க. இவர் ஒன்பது கண்டமுடையராகத் தமமைச் சிறப்பித்துக்கொண்டமை மேற்காட்டிய பாகூர் நிருபதுங்கன் பட்டயத்தில் வருந் தொடரால் உய்த்தறிக.

இதுகாறும் இப்பல்லவர் குடியைப்பற்றி ஆராய்ந்த சரித்திரக்காரர் பலரும் இவரை இந் நாவலந்திவில் இன்ன பழங்குடியினரென்று கூறுதற் கியலாமல் இவர்க் கரசு கிடைத்தது இடையில் நாக அரச குலத்தில் மணத்தலான் உண்டாயதாகுமென்று எழுதி யொழிந் தார். (டுப்ராயில் துரையவர்கள் எழுதிய பல்லவர் வரலாறு பார்க்க). இக் குடியினர் அந்தணராய், மாவீர ராய் அரசெய்திய வைதிக ஒழுக்கினர் என்றும் இவர் தம் சாசனங்களிற் கூறிக்கொண்டன பலவும் பாரத நூலான் ஆதரிக்கப்படுவன என்றும் நன்கறிந்துகொள்க. இப் பெரும்பாணாற்றில்,

''ஈரைம் பதின்மரும் பொருது களத்தவியப்
பேரமர்க் கடந்த கொடிஞ்சி நெடுந்தேர்
ஆராச் செருவி னைவர் போல
அடங்காத் தானையோ டுடன்றுமேல் வந்த
ஒன்னாத் தெவ்வ ருலைவிடத் தார்த்துக்
கச்சி யோனே கைவண் டோன்றல்''

என்பனவும் இக்கருத்துக்கே துணையாதல் காண்க. இதன்கண் ஒன்னா உலைவிடத் தார்த்து ஐவர் போலக் கச்சியின்கணுள்ளான் என்று கூறுதலினும் ஐவர்போல அடங்காத் தானையோ டுடன்று மேல்வந்த ஒன்னாத் தெவ்வர் உலைந்த விடத்து ஆர்த்துக் கச்சியோன் என் பதே சிறந்ததாகும். இங்ஙனங் கொள்ளாக்கால் இவன் ஒருவன் ஐவர்போல் ஆர்த்துக் கச்சியின்கணுள்ளான்

என்று கூறவேண்டும். அசுவத்தாமாவால் உபபாண்டவ ரிறந்தவுடன் அவன்மேலெழ நினைந்த ஐவரும் போர் புரியமாட்டாது உலைந்தவிடத்து அவ் வசுவத்தாமன் ஆர்த்ததைக் குறிப்பது என்பது நன்கு பொருந்தும். ஐவர் இவன் குலத்து முன்னோனாகிய அசுவத்தாமாமேல் உடன்று மேல்வந்து பின் உலைவிடத்து அவ் வசுவத் தாமன் ஆர்த்தாற்போலப் பலர் இவனை உடன்று மேல் வந் துலைந்தவிடத்து ஆர்த்துக் கச்சியின்கணுள்ளான் எனக் கொள்ளற்கு இவ்வடிகள் இனிது துணையாதல் காண்க. இண்டு ஐவர் என்றது தமிழ்வேந்தர் மூவரை யும் அவர்க்குத் துணையாய கங்கர் சளுக்கியர் ஆகிய இருவரையும் எனின் நன்கு பொருந்தும், இது இவர் சாசனங்களில் அசுவத்தாமாவைக் கூறிய விடத்து (பாகூர்ப் பட்டயம் பார்க்க) யாருடைய வீரத்திற்குக் கர்ணனும் அர்ஜுனனும் அஞ்சி ஆயுதம் எடுக்க வில்லையோ அத்தகைய பெருவீரனை அசுவத்தாமன் வழியில் எனக் கூறியதற்கு இயைபுடையதாதல் உணர்க. இங்ஙனங் கூருது பல்லவம் என்பது தளிர், அரும்பு என்று கொண்டு அது தொண்டைக் கொடியின் தளிரைக் குறிப்பதென்றும், அக் கொடியே இவர்க்கு அடையாள மென்றுங் கூறினருண்டு. அவ்வாறு சங்க நூல்களில் வழக்கின்மையான் அவர் கூற்றுப் பொருந்தாதென்க. அவர் இப் பல்லவரை பிற்காலச் சாசனங்கள் போத் தரையர் என்றது பற்றிப் பல்லவமும் போத்தும் (கிளை யும்) பெரும்பாலும் ஒரு பொருள் பற்றியன என்று தாமே கொண்டு அவ்வாறு துணிவர். அவர் போத்து என்பது எருதின் பெயரென்றும் அதைத் தங் கொடியி னுடைய அரையர் போத்தரையரெனப்பட்டன ரென்றும் அவர் சாசனங்கட் கியையக்கொள்ள வறியார். வடமொழி யிற் ப்ரோஷ்டம் என்பது எருதிற்குப் பெயராதலும் நோக்கிக்கொள்க. தொல்காப்பியனார்,

"போத்துங் கண்டியுங் கடுவனும் பிறவும்
யாத்த வான்பாற் பெயரென மொழிப" (மரபியல் 2)

என்று கூறிப்

"பெற்ற மெருமை புலிமரை புல்வாய்
மற்றிவை யெல்லாம் போத்தெனப் படுமே" (ஷை 41.)

என உரைத்தது கொண்டு தெளிக. இங்ஙனமன்றி ப்லவம் (வங்கம்) என்பது பல்லவமாயிற்றென்றும் அதற்கியையப் போதம் (வங்கம்) என்பது போத்தாயிற்றென்றும், இதனாற் கடலில் வங்கத்தில் வந்தவர் என்றுங் கூறுதல் திரையர் என்னும் பெயர் மாத்திரையிற் பொருந்துமேனும் "அங்நீர்த் திரைதரு மரபு" என்புழி இவர் குலத்தை அம் மரபாக்கியதற்கும் இவர் சாசன வரலாற்றுக்கும் இயைபுடையதாகுமா என்று வினுவியறிக.

இப் பெரும்பாணுற்றில் இவ் விளந்திரையன் கோயின் முற்றத்தை வருணித்த விடத்துப்

"பல்வேறு வகையிற் பணிந்த மன்னர்
இமயவ ருறையுஞ் சிமயச் செவ்வரை
வெண்டிரை கிழித்த விளங்குசுடர் நெடுங்கோட்டுப்
பொன்கொழித் திழிதரும் போக்கருங் கங்கைப்
பெருநீர் போகு மிரியன் மாக்கள்
ஒருமரப் பாணியிற் றூங்கி யாங்குத்
தொய்யா வெறுக்கையொடு துவன்றுபு குழீஇச்
செவ்வி பார்க்குஞ் செழுநகர் முற்றத்து"

எனப்பாடுதல் காணலாம். இதன் கண் கங்கைக் கரையிற் கெட்டோடு மக்கள் அக் கங்கையைக் கடத்தற்குப் போந்து முற்பட ஏறினரைக் கொண்டு சென்ற ஒரு தோணி மீண்டுவரும் வரை அற்றம் பார்த்து அக்

கரையிற் றூங்கினாற் போலப் பணிந்த மன்னர் பலதிறை யோடு குழுமி நின்று செவ்விபார்த்துத் தூங்கு முற்றம் என்றது காண்க. இஃது இத் தொண்டையர் பண்டு வதிந்த நாட்டுச் செய்தியையே உவமையாகக் கூறுவ தென்பது நன்கு துணியலாம். சொல்வாருங் கேட்பாரும் நன்கறிந்த தொன்றே உவமைக் கெடுத்துக்கொள்ள வேண்டுவது. இஃதன்றிக் கங்கை நாட்டுப்பலர் குடியினர் கெட்டோடிய அபாயமும் உண்டு என்பதை இது குறிக்கா திராது. "இரியன் மாக்கள்" என்றதனால் இவ்வுண்மை யுணர்க. இனி இந்நூலுள்

"புலவர் பூண்கட னாற்றிப் பகைவர்
கடிமதி லெறிந்து குடுமி கொள்ளும்
வென்றி யல்லது வினையுடம் படினும்
ஒன்றல் செல்லாப் புலவு வாட்டடக்கைக்
கோண்டி யுண்டித் தொண்டையோர்"

என்றதும் இவர் குடிச்சரித்திரத்திற் கேற்புடைத் தாகும். துரோணரான் ஏவப்பட்ட பீமார்ச்சுனர் துரு பதனைத் தோற்பித்து அவனைப் பிடித்துத் துரோணர் முன்னிறுத்தியபோது அவன் இவர்க்குப் பணிந்தொழு குதலை உடன்பட்டபோதும், அவன் முடியைக் கொள் ளும் வென்றியல்லது ஒன்றல் செல்லாது அவன் முடி யைக்கொண்டு அதனாற் பெருஞ் செல்வராய்ப் போகந் துய்த்தலையுடையர் தொண்டையர் என்று கூறுதற்கு இவ்வடிகள் துணையாதல் உய்த்துணர்க. இதன் கண் "புலவர்பூண் கடனாற்றி" என்றது புலமையாளர் தம் உயிர்க்கு அணிபோற் பூணத்தக்க கடப்பாட்டை இனிது செய்து எ. று. இதனாற் கல்விப் பெருமித முடையார் எவ்வரசர்க்கும் வணங்காராய் நின்று வணங்காமுடி மன்ன ரையும் தமக்கு வணங்குவிக்கும் பேராற்றல் குறித்தன ராவர். இதனைத் துரோணருடன் பயின்றவனாகியும்,

2606



துருபதமகாராசன் அரசெய்தியபோது அவனைத் தோழ னென்று கூறுதற்கு மில்லாத செருக்குடனிருந்தது கண்டு அவனை அற்றம் பார்த்துப் பிணிப்பித்து அவனது நாட்டிற் பாதியைக்கொண்ட பாரதக் கதை நோக்கியறிக. பகைவர் குடுமிகொண்டு புலவர் பூண் கடனாற்றி என்றுற் போரில் வென்றுகொண்ட பெருஞ் செல்வத் தைப் புலவர் முகந்துகொள்ள அருளிய கொடைமை குறித்து என்னலாம். அங்ஙனமன்றிப் "புலவர் பூண் கடனாற்றிக் குடுமிகொள்ளும் வென்றி" என்றதனால் யான் கூறுவதியைதல் காண்க. இவர் வதியும் ஊரை,

> "நீனிற வுருவி னெடியோன் கொப்பூழ்
> நான்முக வொருவற் பயந்த நல்லிதழ்த்
> தாமரைப் பொகுட்டிற் காண்வரத் தோன்றி"

என வருணிப்பதும் இவர் பிரஹ்மகுலம் என்பதைத் தழிஇயுரைத்ததாகும் கச்சிநீனிற வொருவன் கொப் பூழ்த்தாமரைப் பொகுட்டாகக் கூறி அதன் கண் வீற்றி ருப்பவன் நான்முக வொருவன் என்றதனால் ஊரும் அரச னும் குறித்தல் காண்க. புலவர் பூண்கடன் கல்விப் பெருமிதம் எ. று.

> "கல்வி தறுக ணிசைமை கொடையெனச்
> சொல்லப்பட்ட பெருமித நான்கே" (தொல். மெய்ப்பாட் 9)

என்புழி இதனை எல்லாப் பெருமிதத்தினு முன் வைத்தல் காண்க. இனி இக்குடியினர் பிறந்த குலத்திற் கேற்ப அந்தணர் இல்லத்துச் சிறப்புக் கூறுதலும் (அடிகள் 297 - 310 வரை)

> "கேள்வி யந்தண ரருங்கட னிறுத்த
> வேள்வித் தூணம்"

கூறுதலும்

"மந்தி சீக்கு மாதுஞ்சு முன்றிற்
செந்தீப் பேணிய முனிவர்வெண் கோட்டுக்
களிறுதரு விறகின் வேட்கும்"

மலையுடைமை கூறுதலுங்காண்க. ஈண்டு இவ்வாறு தெய்வத்தன்மை யுடையதாகக் கூறப்பட்ட மலை வேங் கடமே என்பது,

"வென்வேற் றிரையன் வேங்கட நெடுவரை" (அகம். 85)

எனவும்

"வினைநவில் யானை விறற்போர்த் தொண்டையர்
இனமழை தவழு மேற்றரு நெடுங்கோட்
டோங்கு வெள்ளருவி வேங்கடத் தும்பர்" (அகம். 213)

எனவும், வருவனவற்றால் அறியலாம்.

"வடவேங்கட நாடுடை மன்னர்பிரான்"

எனத் தெள்ளாற்றெறிந்த நந்தி பல்லவன் பாடல் பெறுதல் நந்திக்கலம்பகத்திற் காண்க. திருவேங்கடத்து நிலங்கடந்த நெடுமுடி யண்ணல் தொண்டையன் ஒரு வற்குச் சங்காழி நல்கினன் என்ற கதையும் உண்டாதலான் இவர்க்கு அம்மலையிற் றிருக்கோயில் கொண்ட திருமாலிடத்துள்ள பத்திமை இனிதுணரலாம். அதற் கேற்பவே இத்திரையனுரும் கச்சிவெஃகா என்னுந் திருப்பதியிற் பள்ளிகொண்ட பெருமானை,

"... ... ... நீடுகுலைக்
காந்தளஞ் சிலம்பிற் களிறுபடிந் தாங்குப்
பாம்பணைப் பள்ளி யமர்ந்தோ னாங்கண்
... ... ...
அருந்திறற் கடவுள் வாழ்த்திச் சிறிதுநுங்
கருங்கோட் டின்னிய மியக்கினிர் கழிமின்"

என்பதனுற் கூறி வாழ்த்திக் கழியச் சொல்லுதல் காண்க. இவர் "இருநிலங் கடந்த திருமறு மார்பின் முந் நீர் வண்ணன்" என முன்னர்க் கூறியதும் திருவேங்கடத் திருமாலையுள் வைத்தெனின நன்கு பொருந்தும். அதனை நிலங் கடந்த நெடுமுடி யண்ணல் வரை என்பது வேதத் திற் கண்டது.

சடகோபரும்

"நான்பரப்பி நிலந் தாவிய வண்ணலைப்
பாடிய பத்து"

என்று திருவேங்கடப் பதிகத்துக் கூறினர். கலி கன்றியாரும் "அன்று ஞால மளந்த பிரான்பாற் சென்று சேர் திருவேங் கடமலை" என்ருர். நச்சினர்க் கினியர் "நிலங் கடந்த நெடுமுடி யண்ணல் வரைப்பு" என்ருர்.

இவற்ருனுணர்க.

இப் பல்லவர்க்குரிய இத் தொண்டை நாடு சளுக்கிய வேந்தராற் கொள்ளப்பட்டதென்றும் அவரை வென்று சோழர் . இம் மலையை யுடையராயினர் என்றும் கொள் ளற்கேற்ற பழம் பாடல் உண்டு. தொண்டையர் வேங்கடம் ஆண்டபோது செந்தமிழ் நாடாண்ட பாண்டி யற்கு முதலில் அடங்கியிருந்தனர் என்பது

"வடவயின் வேங்கடந் தந்த
வெண்கோட் டியானை மறப்போர்ப் பாண்டியர்" (அகம்27)

என வந்துழிப் பழைய உரைகாரர் வேங்கடம் ஆளும் அரசர் திறையாகப் பாண்டியற்குத் தந்த யானை எனக் கொள்ளுதலான் அறியலாம். இப்பல்லவரை வென்று

சளுக்கியர் வேங்கடமுடையவராதலும் அவ்வரை வென்று வளவர் கச்சியையும் வேங்கடத்தையும் உடையராதலும்,

> ''பலியுருவிற் கேலாத படைமழுவாள் வலனேந்தி''
> (தொல். சொல். 146. பேராசிரியருரை).

என்னும் பாட்டில்

> ''விழிவலத்தா னுருவழிந்தோன் வேடங்கண் டுணர்வழியாக்
> கலிகெழு கடற்கச்சிக் கமழிளந்தே மாவி
> னெழிநளிரு முலைச்சுவட் டுடன்பிறப்ப வுலவுங்கால்'' எனவும்

> ''எல்வளை மகளி ரிடுபலி நசைஇ
> பல்சுடை நிரிதருஞ் செல்வநிற் பரவுதும்
> கோடியணி யேனம் பொடியணிந்து கிடப்ப
> வடதிசை வாகை சூடித் தென்றிசை
> வென்றி வாய்த்த வன்குள் விடலை, வளவன்
> இமிழிசை வேங்கடம் போலத் தமிழகத்து
> நாவலொடு பெயரிய ஞாலங்
> காவல் போற்றி வாழிய நெடிதே'

எனவும் வருவனவற்ருல் உய்த்துணரலாகும். இவற்றுட் கச்சியிற் றேமாவி னிழலமர்ந்த சிவபிரானை வாழ்த்திப் பரவுதும், வளவன் வேங்கடம் போல நெடிது வாழ்தற் பொருட்டு எனக் கூறுதலான் உணரப்படும். மேற்குறித்த மேற்கோளிற் கொடியணி யேனம் பொடியணிந்து கிடப்ப வடதிசை வாகை சூடி என்றதனல் சளுக்கியருடைய பன்றிக்கொடி தரைப்புழுதி படிந்து கிடத்தல் கூறியது கொண்டு வளவன் சளுக்கியரை வென்றது புலப்படுதல் காணலாம். இவ் வளவற்குக் கச்சியும் வேங்கடமும் உரியனவாய காலம் சளுக்கியரை வென்றதன்பின் என்பது பொருந்தும்.

''வட்வர் வாட'' வென்ற வென்றி இவ் வுருத்திரங் கண்ணனுரே பட்டினப் பாலையுட் டிருமா வளவற்குக் கூறலான் இவ் வளவன் கிள்ளிவளவன் என்று கொள்ளு

தல் தகும். இண்டுப் பல்லவர் கொடியாகிய எருது கூறுது பன்றிக்கொடி கூறிய:தனுல், இவ் வளவன் பன்றிக் கொடியுடைய சளுக்கியரை வென்று வேங்கட நாடுடையனுதல் துணியப்பட்டதென்க. இவ் வளவனே யும் இந்நூற் றிரையனையும் பாடியவர் ஒரு புலவரே யாதலால் அவர் பெரும்பாணுற்றுப்படை பாடியபோது திரையன் கச்சியுடையனு யிருந்தானென்றும், அவர் பின்னே கிள்ளி வளவனைப் பட்டினப் பாலையிற் பாடிய போது தொண்டை நாட்டுத் தலைமை சளுக்கியர் கைய தாயினதை வளவன் வென்றனன் என்றும் கருதுதல் ஏற்குமென்க. இவ் வளவரினின்று பல்லவர் பழையபடி யும் வென்று தம் தொண்டை நாட்டைக் கைப்பற்றினா என்று துணிக. இதுவே சரித்திர முறைக் கியைவ கும்தா. நூல்நய முறைமையான் ஆராயின் பெரும்பா ணுற்றினும் பட்டினப் பாலை பெரிதும் நயமிக்கதாகத் தோன்றல் நோக்கப்படுதலான் இப் புலவர் பெரும் பாணுறு பாடி அதனினும் நயம்பட்ட தொன்றைப் பின்னர்ப் பாடினர் என்பதே பொருந்திற்ருகும்.

இனிப் பெரும்பாணுற்றில்

''அந்நீர்த் திரைதரு மரபி னுரவோ னும்பல்''

என்ற அடியில், அந்நீர்த் திரைதரு மரபும் அம் மரபில் ஒருரவோனும் அவ்வுரவோன் வழித் தோன்றிய வனும் கூறப்படுதல் நன்கு அறியலாம். இதன்கண் அந்நீரென்றது கடலைக் குறித்ததாம். முன்னரே ''முந்நீர் வண்ணன் பிறங்கடை'' யென்று கூறிப் பின்னர் அந்நீ ரென்றது அம் முந்நீரைச் சுட்டியதாதல் எளிதில் அறியத்தகும்.

இதனுல் ''அந்நீர்த் திரைதரு மரபு'' என்பது கட லலை தரப்பட்ட குலம் என்றதாகும். இவ்வாறு ஓர்

குலம் இந் நாவலந்தீவில் வழங்கப்படுதல் "அப்ஸரஸ்" (கடலான் உண்டாக்கப்பட்ட தேவ கணிகையர் என்பது பொருள்). குலவழக்கால் அறியலாம். இவருண்டான வரலாறு வான்மிகம் பாலகாண்டம் 46.ஆம் ஸர்க்கத்து 34-முதல் 37-வரையிலுள்ள சுலோகங்களிற் காண்க. இத் திரைதரு மரபின் உரவோன் என்றது இப் பல்லவ சாசனங்கள் பலவற்றிற் றங்குல் முன்னோன் வரிசையிற் காணப்பட்ட துரோணனையும், அவ்வழியில் அசுவத் தாமன் மகனாகிய பல்லவனையும் குறிப்பது என்று துணியப்படுவது. இவன் பிறப்பு வரலாறு மகாபாரதம் ஆதி பர்வத்தில் பாரத்வாஜ முனிவர் கங்கையினீரில் "க்ருதாசி" என்னும் அப்ஸரஸைக் கண்டு மோகிக்க அதனாற் றுரோணர் உண்டானார் என்று தெளியக் கூறுதலான் அறியப்படுவது. இத் துரோணர் கங்கைக்கு வடக்கண்ணும் தெற்கண்ணும் இராஜ்யமுடைய துருபத வேந்தனைத் தன்னால் வில்வித்தை பயில்விக்கப்பெற்ற பிமார்ஜுனரைக் கொண்டு வென்று அவன் கங்கை வட நாட்டைத் தமதாக்கி "அஹிச்சத்திரம்" என்னும் நகரி லிருந்து அரசாண்டனர் என்பது அவ் வாதிபர்வத்தே நன்கறியப்பட்டதாகும். (மகாபாரதம் தமிழ் மொழி பெயர்ப்பு. ஆதிபர்வம் 557-ம் பக்கம் பார்க்க).

இதனாற் கடற் றிரைதரு மரபின் வில் வலியான் மேம்பட்ட துரோணர் பரத்வாஜர்க்குண்டானாரென்றும், அவர் தம்வலியாலும் துணைவலியாலும் கங்கை நதி பாயும் உத்தர பாஞ்சாலத்தை அஹிச்சத்திர புரத்திலிருந்து அரசு செலுத்தினார் என்றும், அது துருபத தேயமாகி யிருந்து துரோண தேயமாகி மாறிற்றென்றும் நன்கறிய லாகும். இத் துரோணனுக்கு மகன் அசுவத்தாமன் எனப்படுவான். இவன் சிவ னமிசமும் யமன் அமிசமுக்

பெற்றுப் பிறந்தவன் என்பது மகா பாரதத்திற்கண்டது. இதனால் போர் வன்மையை மிகுத்துக் கூறியதாகும். பல்லவர் பட்டயங்களிற் காணப்படும் நந்தியும் கணிச்சியும் ஆகிய இலாஞ்சனைகள் அசுவத்தாமா உண்டாவதற்குக் காரணமாகிய சிவபிரானுக்கும் யமனுக்கும் உரியனவாம். இயைபு நோக்கிப் பொறிக்கப்பட்டன என்று துணியத் தகும். யமனுக்குக் கணிச்சி யுண்டென்பது

> "கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திற லொருவன்
> பிணிக்குங் காலை யிரங்குவிர் மாதோ" (புறம். 195)

என்பதனு லறியலாம். இவ் வசுவத்தாமாவின் மகன் பல்லவன் என்பது பல்லவ சாசனங்கள் பலவற்றினுங் கண்டது. அமராவதியில் ஒரு தூணிற் பொறித்த பல்லவ ச்சாசனப் பகுதியில் (No.32.Vol. I) அசுவத்தாமன் மதனி என்னும் அப்ஸரஸ்ஸை மணக்க அவள் அசோக மரத்தின் பல்லவங்கட்கிடை மகவினை யீன்றபோது அம் மகவைப் பல்லவத் தொட்டிலிற் கண்டு, பல்லவன் என்று அசுவத்தாமன் பெயரிட, அக்குழவி பல்லவன் என வழங்கப்பட்டதென்று கூறுதலானும் பல்லவன் திரைதரு மரபின் உண்டாதல் அறியலாம். இவற்றாற் பல்லவர் தம்மைப் பாரத்வாஜ கோத்திரத்தினர் என்று கூறிக்கொண்டே ராஜ பரம்பரையின ராகவுங் கூறுதற்குக் காரணம் இனிது தெளியலாம். பாரத்வாஜ கோத்திரத்துத் தோன்றி அஹிச்சத்ர நாடாண்டதனுல் இரு குலப் பெயரும் புனைந்தனராவர். பிற்கால சாசனங்கள் இவரைப் பிரம க்ஷத்திரிய குலமென்று கூறுவது கேட்டுணர்க. இப் பல்லவர் சாசனங்களில் இவர் பரம்பரையினர் பலர்க்கும் இறப்ப முன்வைத்துள்ள விமலனுக்கு அடுத்து வந்துள்ள கோங்கணிகன் என்னும் பெயர் கட்டற் திரையின் வழியினன் என்பதை வலியுறுத்துவது

---

மகா பாரதம். ஆதி பர்வம்.

தெரியலாம். அணிகன் - அர்ணிகன், கொங்கு அணிகன் - கடற்சேர்ப்பில் நீரலையிற்றோன்றிய மரபினன் என்பதாம். அர்ணிகன் என்பதே அணிகன் எனமரீஇயினதாகும். அர்ணம் - அலைநீர். மலேயா நாட்டில் இப்பல்லவ மரபினரென்று துணியப்பட்ட அரசர் சாசனங்களில் "கொண்குலகர்" என்றும் கவுரவார்ணத்யுதி எனவும் வரும் பெயர்களும் இக்கருத்தையே வலியுறுத்தும். கொண் துங்கன் என்பது கடலிற்றோன்றிய சிறப்பினன் என்னும் பொருளதாம். கொண் என்பது கடற்குப் பெயரென்பது கடற்கானத்தைக் கொண்கானம் என்பதனால் உணரலாம். கொண்கன் கடற் சேர்ப்பன் ஆதலும் தெரிக.

இருக்கு வேதத்தில் அர்ண என்பவன் ஓர் பழங்குடித் தலைவனாகக் கேட்கப்படுகின்றான். அவ்வழியினன் அர்ணிகன் எனினும் அமையும். அணிகன் என்னும் பெயர் வழக்கு இக்குடியினரிடம் நெடுங்காலத்துக்குப் பின்னும் வழங்கியதென்பது செயங்கொண்டார்,

"மறிந் தோடி யெவ்வரசுஞ் சரியவென்று
வருமணிகப் பல்லவர் கோன்"

எனப்பாடுதலான் அறியலாகும். அணிகப் பல்லவர்-அர்ணிகப் பல்லவர் எ. று. கடலில் வந்த மகள் மரபிற் பல்லவத்திலின்றதனாற் பெயர் பெற்ற குடிமையுடையர் என்க. இந்த அர்ணிகன் என்னும் பெயரே தமிழில் திரையன் என மொழி பெயர்த்து வழங்கப்பட்டதென்று நினைத்தல் தகும். செயங்கொண்டார் தாழிசையில் "அணிகைப் பல்லவர்கோன்" என்று பாடங்கொண்டாலும் அர்ணிகை அணிகை யென்று வந்ததாகக் கருதி நீரில் வந்தவன் வழியினன் பல்லவர்கோன் என்று பொருள் கூறிச் செல்க. இக்குல வரலாறு தெரியப்

படாமையால் அணிக்கைப் பல்லவ ரென்றும் அனுக்கப் பல்லவ ரென்றும் பாடம் சிதைத்து வழங்கப்பட்டு அதுவே சாசனங்களிலும் எழுதி வெட்டப்பட்டதோ என்று நினைத்தற்கு இடனுண்டு. அணிகப் பல்லவரைக் குடிப்பெயர் மறைந்து சோழர்க்கு அடங்கிய நிலையில் அனுக்கப் பல்லவரென அவர் செயற்கேற்ப மாற்றி வழங்குவது எளிதேயாமென்க.

இதற்கேற்பவே தெள்ளாறெறிந்த நந்தி பல்லவனைப் பாடிய கலம்பகத்தில்,

"நந்திவீர வணிகனைப் போய்" (47)

என்பதனால் அணிகன் என்று வழங்குதல் காண லாம். ஈண்டு வணிகன் என்று கொள்ளாமைக்கு வீர விசேடண மிட்டாரெனத் தெளியலாம். இங்கு "வீரவணி யனைப் போய்" என்று பாடங்கொண்டு இந் நந்தி பல்லவனை *"வன்னியன்" என்று வழங்கினர் என்பாரும் உண்டு. வன்னியன் - வனமாகிய நீரில் வந்தவன் என்று பொருளாதலான் அஃது அர்ணிகன் என்னும் பெயர்ப் பொருளின் வேருகாமை குறிக் கொள்க. இதுவே பொருள் என்பது "சொரிமுத்து வன்னியன்" எனனும் பெயர் வழக்கானுணரலாம். சொரிமுத்து வனம் கடல் என்பது தெள்ளிது. சொரிமுத்து வன்னிக்குப் பொருந் தாமல் வனம் ஆகிய நீர்க்கே பொருந்துதல் உய்த் துணர்க.

இனி இப் பல்லவரை நீரின் வந்த வன்யர் எனக் கொள்ளாது நெருப்பாகிய வன்னியினின்று வந்தவ ரென்று கூறுவாருமுண்டு.

அது,

*. வந்யன் - வனத்தில் வந்தவன்.

"நங்கள் கோத் தொண்டை வேந்த
ரும வேன் மன்னர்க் கெல்லாம்
தங்கள்கோன் கங்கைநாடன்
சந்திர குலப்ரகாசன்" (நந்திக் கலம்பகம். 49)

என அவனைச் சந்திரகுல விளக்காகக் கூறுவதோடு பகைத்தல் உணர்க. தொண்டையர் சூரியகுலச் சோழர் குடியினர் என்பதும் பொருந்தாமை இதனானே துணியலாம். நந்தி பல்லவனை இக்கலம்பகம் உடையார் "கங்கை நாடன்" என்று பாடுதலான் இவன் முன்னோர் கங்கைக் கரை நாட்டினராதல் தெளியப்படும். இப் பல்லவ முன்னோன் துரோணன் என்பதும் அவன் வடகங்கை உத்தர பாஞ்சாலத்தை யாண்டவன் என்பதும் மகா பாரதத்தாற் றெரியப் படுதலால் அதற்கியையக் "கங்கை நாடன்" என்று பாடங்கொள்வதே சிறந்ததாகும். ஈண்டு அங்க நாடன் எனப் பாடங்கொள்வாரும் உண்டு. சிந்தாமணியுட் பல்லவதேயம் கங்கைக் கரைக்கு மூன்று காததூரத்துள்ள தென்று பதுமையார் இலம்பகத்துட் கூறினர்.

"படுமழைப் பருவம் பொய்யாப் பல்லவதேய மென்னும்
நடமலர்க் குவளைப்பட்டந் தழுவிய யானர் நன்னாட்
டிடை நெறி"

என்புழி நோக்கிக் கொள்க. க்ங்கைக் கரைக்கு இரு காததூரத்துப் பிசாசபுரம் உள்ள தென்றும் அதற்கு ஒருகாத தூரத்துப் பல்லவதேய முள்ளதென்றும் கூறுதல் கண்டுகொள்க. இது கங்கை வடகரையிலாண்ட துரோணர் வழியினர் பின்னே கங்கையைக் கடந்து தெறகண் வதிந்து வாழ்ந்ததைக் குறிப்பது காண்க. இப் பல்லவருள் மூத்தவன் மரபினர் தென்னாட்டகத்தும். இளையன் மரபினர், துவராபதி, மலையம், யவத்வீபம், முதலியதென்கீழ் நாட்டும் புக்குத்தம் அரசு நிலையிட்டனரென்று நினையலாம். இப்பல்லவருள் இளையவன் மரபி

னர் மலையநாட்டில் வாழ்ந்த இடம் காடஹம் எனப் படுவது. இதனால் இப்பல்லவர் காடவர் என்று பெயர் பெற்றனராவர். தமிழ்நாடு புக்க பல்லவரைக் காடவர்க்கு முன்றோன்றல் என்பது நந்திக்கலம்பகத்துட் கண்டது. (29) மலைய நாட்டுக் காடவரும் திரைதரு மரபை மறவாமற் போற்றுதல் அவ்வரசர் ''கௌரவார்ணத்யுதி'' (Jasb Letters Vol, I. 1935) என்று தம்மை வழங்கலானறியலாம். பெருநீரிற் றோன்றிய ஒளி என்பது இச் சாசனத் தொடரின் பொருளாம். பெருந் திரையொளி யெனினு மமையும். ஈண்டும் அர்ண்ண சப்தமே வழங்கிக் காட்டுதலால் இவ் வுண்மை நன் குணரலாம். இம் மலையநாட் டரசர் பெயருள் ''கொண் துங்கா'' என்பதும் ஒன்றாகும். இதுவும் கடலிற் றோன்றிய துங்கா என்று பொருளாதல் காண்க. கொண் கானம் கடற்காடு என்னும் பொருளதாதல் காண்க. கொண்கானங் கிழான் என்பது தொன்னூல் வழக்கு. கொண்கன் என்னும் பெயர்க்குக் கடற் சேர்ப்பன் என்னும் பொருணோக்கியறிக.

இதற் கியையவே அமராவதி ஸ்தூப சாசனம், ஸிம்மவர்மன் பாகிரதியைக் கடந்து கோதாவரியைக் கடந்து கிருஷ்ணவேணியைக் கடந்து தானிய கடகம் (Dronakotta) என்னுமிடத்து, பவத்விஷணுன வீதரா கனைத் தரிசித்தான் எனக் கூறுதல் கண்டுகொள்க. இதன்கண் பாகிரதியைக் கடந்து என்றதனால் இவன் முன்னோர், கங்கை வட்கரையிலிருந்தது நன்கு புலனும். இது பாரதக் கதையொடு மியைதல் காண்க. இதனால் இப் பல்லவகுலம் கடல்கெழு செல்வி யடியாக வந்த துரோணர் மரபாதல் நன்கு தெளிக.

இப் பல்லவர் சாசன வரலாற்றோடு பொருந்தவே இவ் விளந்திரையனைப் பாடிய பழம் பாட்டில்,

"மாக்கட லார்ப்பரூஉம்--கடுமான் றிரையனை
யான் பயந்தே னென்னுஞ் செருக்கு"

என்றதனுல் இக் குடித்தோற்றம் முதன்முதல் கடலிடத்ததாதல் துணியப்படும். அத் தோற்றம் அப்ஸர ஸினின்று இக் குடி தோன்றிற்றென்னும், பாரத வரலாற்றிற்கும் சாசன வரலாற்றிற்கும் இனிதியைந்து விளங்குதல் கண்டுகொள்க. இவ் வுண்மையை இவ் வுருத்திரங் கண்ணனுர்,

"முரசு முழங்கு தானை மூவருள்ளும்
இலங்குநீர்ப் பரப்பின் வளைமீக் கூறும்
வலம்புரி யன்ன வசைநீங்கு சிறப்பின்
அல்லது கடிந்த வறம்புரி செங்கோற்
பல்வேற் றிரையன்"

என்பவற்றுல் இனிது விளக்கினுர். இலங்கு நீர்ப் பரப்பு—கடல் எ.று. இதன்கண் உண்டான வளைகள் (சங்குகள்) போல்வர் இக் கடனீரின் வந்த குடியினர்- அக் குடியினராகிய சங்கங்களினு மேம்படுத்துப் புகழப் பட்ட வசை நீங்கு சிறப்பினையுடைய வலம்புரியை ஒப்பவன் இத் திரையன் என்று விளக்கியது கண்டு தெளிக. வலம்புரி அருமையிற் றேன்றியதற்கும் வசை நீங்கு சிறப்பு மூவரின் மேம்படுதற்குங் கொள்க. உரை காரர் "மூவருள்ளும்" என்பதற்கு மூவரினும் என்றது காண்க. மூவர் உள்ளுஞ் சிறப்பு மூன்று பேரரசரும் தமக்கில்லையே என்று நினையுஞ் சிறப்பு எனினுமமையும். நீர்ப்பரப்பின் வலம்புரியை உவமித்தது "கடல் யான் பயந்தேன்" என்று செருக்குவதாகக் கூறியதனோடு இனிதியைந்து பொருள் சிறத்தல் காண்க. இவற்றிற் கெல்லா மியையவே மகேந்திர பல்லவன் சிராப்பள்ளிக் குன்றிற் பொறித்த சாசனப் பகுதியில் அவன் தன் விருதுப் பெயர்களினிடையே "குவத்ரோணன்" எனக்

கூறிக்கொள்ளுதல் கேட்கப்படுவது. நீரர மகளிர் இயல்பு பெருங்கதையின்,

> "மறுவி றெண்ணீ ராழ்கய முனிந்து
> நறுமென் குவளை நாண்மலர் பிடித்து
> நேரிறைப் பணைத்தோள் விசிப் போந்த
> நீரர மகளிவ ணீர்மையு மதுவோ" (4, 17, 37—40)

என வருதலானு மறிக. தக்க யாகப் பரணி

> "வாரிதி ... ... சிகர சிகர வருவி நீரர
> மகளிர்" (30)

என்பதற்கு, மந்தர பர்வதத்துத் திருவினுற் கடற்றிவலையிற் புறப்பட்ட அருவி நீரினின்று தோன்றிய தெய்வப் பெண்கள்" என உரைகாரர் கூறி இங்ஙனம் உற்பவித்தார் என்றது "வங்கிச சுத்தம்" சொன்னவாறு என விளக்கியதையும் நோக்கிக்கொள்க. இந் நூலிற் றிரைதரு மரபென்றதும் வங்கிச சுத்தஞ் சொன்னதாகக் கொள்க.

இனிக் "குவத்ரோணன்" என்ற சொற்கண் துவம் என்பது நீரிற் பிறப்பதற்குப் பெயர். இதனுல் நீரிற் பிறந்த துரோண குலத்தவன் என அவன் தன்குடிப் பிறப்புப் பெயரைப் புனைந்தது தெரியலாம். இவ்வாறு கூறுவது தன் குடி முதல்வன் கர்ப்பவாசமறியாதவன் என்பது கருதிப்போலும். துரோணர் பரத்வாஜருக்குக் கருப்பாசயத்திற் றங்காமற் பிறந்தார் என்பது பாரதம். (ஆதி பர். பக். 250). இப் பல்லவர் துரோணகுல வீரர் என்பதற்கியைய இவ்வாசிரியர் இந்நூலுள் இத் திரையனை "வாடாத் தும்பை வயவர் பெருமகன்" என்கின்ருர். இதன்கண் வாடாத் தும்பை வயவர் என்பது 'வாடா வஞ்சி" கருவூராதல்போலவும் (புறம் 39) "வாடாவள்ளி" (பெரும்பாண். 370) என்பது ஓர் கூத்திற்காவது போலவும் துரோண குல வீரரை உணர்த்துவது என்று

கொள்க. தும்பைக்குத் துரோணம் என்பதும் பெயராதல் பிங்கல நிகண்டில்,

"தும்பையும் பதக்கும் துரோண மாகும்" (பிங். 3660)

என்னுஞ் சூத்திரத்தானறியலாம். இங்குக் கூறும் தும்பை செடியன்று என்பதற்கு வாடா என்று விசேஷித்துக் காட்டினர் என்க. நச்சினர்க்கினியர் "வாடாவள்ளி" என்பது வாடுங் கொடியினையுடைய வள்ளியல்லாத வள்ளிக் கூத்து"

எனப் பெரும்பாணாற்றிற் பொருள் கூறுதல் காண்க. இவ்வாறு பொருள் உணர்த்தல் தமிழ் வழக்கே என்பது "துவ்வாநறவு" (நறவு என்னும் ஊர்) (பதிற்று. 60), பரிவேட் பஞ்சா அயிரை" (அயிரை என்னும் மலை) (ஷை. 21). "ஊராதேந்திய குதிரை" (குதிரைமலை. புறம். 158) "மிதியற் செருப்பு" (பதிற். 21), "இரும்பு புனைந்தியற்ருப் பெரும்பெயர்த் தோட்டி" (புறம். 150) என வருவன கொண்டுணர்க. நறவு—ஓரூர்; அயிரை—ஓர் மலை; குதிரை — ஒரு மலை; செருப்பு — ஒரு மலை; தோட்டி—ஒரு மலை; (இஃது அங்குசகிரி என்பது; ஓசூர்ப் பற்றில் உள்ளது) என அறிதல்போல ஈண்டுத் தும்பை துரோண குலம் என்று கொள்க. தும்பை வயவர் துரோண வீரர். இக் கடற் பிறப்பிற்கியையவே இப் பல்லவர் திருக்கடன்மல்லையிற் றங்குல முதல்வனை இறைவனுக்குச் சலசயனக் கோயிலாக்கி அதற்கு நீர்ப் பாயலெனப் பெயரிட்டு வழங்கியது இந் நூலான் உய்த்துணரப்படுதல் நோக்குக. "நீர்ப்பாயற்றெல்லை போகி" என வருதல் காண்க. நீர்ப்பாயற்று — சல சயனத்தையுடைய பட்டினம். எ. று. இதனை மாற்றித் தலசயனமாக்கியது பிற்காலத்தென்று கொள்க. நீரரமகளாகிய கிருதாசியின் மகனான துரோணனைத் தீயிற் பிறந்த திருஷ்டத்துய்மன் கொன்ருன் என்னும் பாரத கதையும்

இப் பல்லவர்க்குள்ள நீர்த் தொடர்பை நன்கு விளக்கு தல் காண்க. நீர்க்குடிக்கும் தீக்குடிக்கும்* உள்ள பகைமை காட்டுவ திஃதென்க.

இவற்றிற்கேற்ப இந் நூலுள் பல்லரசரும் இவனை அடைதலைக் கூறியவிடத்துக்,

"கல்வி முருகி கடற்படர்த் தாங்கு"

என்பதனால் இவனைக் கடலோடு ஒப்புக் கூறுதலும், இவன் ஒளியை மிகுத்துக் கூறிய் இடத்துக்

"குரைகடல் வரைப்பின் முந்நீர் நாப்பண்
பகல்செய் மண்டிலம் பாரித் தாங்கு"

என்பதனாற் கடலிற் பிறந்த ஞாயிற்றிற்கு ஒப்பக் கூறுதலும் வந்தன என்று இயைபுபட நினைத்தல் தகும்.

இனி இத் திரையனைத் "தொண்டையர் மருக" என்றதனால் இவன் பிறந்த குடி தொண்டையர் குடி யெனப்படுதல் அறியலாம். நச்சினார்க்கினியர் தொல் காப்பிய எழுத்ததிகார இறுதியில் (தொல். எழுத். 483), தொண்டைமானாடு தொண்டைநாடு என மரீஇயிற் றெனக் கொள்ளுதலின் முதற்கண் தொண்டை என்பது குடிப் பெயராகவிருந்து அப்பால் அக்குடியின் ஆட்சியுட் பட்டதனால் நாட்டிற்குப் பெயராயிற்றென்று துணிதற்கு அவருரை இடந்தருவது காண்க. இம்முறை சேரநாடு, பாண்டிநாடு, சோணாடு என்பனவற்றிற்கும் ஒத்தல் நோக்கிக்கொள்க. இதனாற் றொண்டகம் என்னும் நாட் டின் பெயர் தொண்டையென்று மரீஇயிற்றென்று

---

* பாரஸிகர் தீ வழிபடுவோரும், நீர் வழிபடுவோரும் ஆகி இருவரும் தம்முட் பகைமைகொண்டது மேனாட்டுச் சரிதங்களிற் கண்டது. (Herodotus)

கூறுதல் அவர்க் குடன்பாடன்மை தெரியலாம். இவ் வுருத்திரங் கண்ணனாரும்,

"உரவுவாட் டடக்கைத் தொண்டையோர்"

என்றதனாற் பெருவீரக் குடிப்பெயராகவே கருதல் காண்க. நந்திக் கலம்பகத்திற் பல்லிடத்தும் நந்தி பல்லவற்குக் கோவையாகிய தொண்டை மாலையே கூறுதலான் அம்மாலையா லிக்குடி இப்பெயர் பெற்றதாமெனின் அது அந்நூலுட் டொண்டையோன் தொண்டை (66) என்றதனால், தொண்டைக் குடியினன் தொண்டைமாலை என்று கொள்ள வைத்ததனோடு மாறுபடுதல் கண்டு உண்மை தெளிக. தொண்டைமாலை யுடையோனுடைய தொண்டைமாலை யெனக் கூறற்காகாமை தெளிக. இப் பல்லவர் பண்டுவதிந்த நாடு கங்கைக்கரைக்கு அடுத்தது என்று தெரிதலால் இவர் தென்னாட்டுப் போந்ததன் பின்னரே குடிப்பெயர் பெற்றனர் என்பது பொருந்தாதாம். சிந்தாமணிப் பதுமையார் இலம்பகத்துப் பல்லவதேயம் கங்கைக் கரைக்கு மூன்று காதத் துள்ளதாகக் கூறப்பட்டுள்ளது. (சிந். 350). பல்லவ வேந்தன் "தொண்டைப் பல்லவன்" எனப்படுதல் நச்சினார்க் கினியர் அகத்திணைச் சூத்திர மேற்கோட் பாடலான் அறிய வந்தது. இப்பல்லவர் தமிழ்நாட்டில் இடையிற் புக்கவர் என்பது நந்திக் கலம்பகத்தில்,

"தங்கோல் வளைத்ததிகழ் சேரர் சோழர்
தமிழ் மன்னர் நின்ற நிலைமேல்
வெங்கோ னிமிர்ந்த வரையுஞ் சிவந்த
விறனந்தி" (42)

என்பதனான் அறியலாம். இதனால் இவர்க்கு இத் தொண்டையர் என்னும் பெயர் தென்னாட்டுப் போந்தபின் உண்டாயிற்றெனத் துணிதற் கில்லையாம். தொண்டைப் பல்லவன் என்பதனாற் பல்லவன் என்னும் பெயர்

உண்டாதற்கு முன்னே தொண்டையன் என்னும் பெயர் உண்டாயிருக்க வேண்டுமென்று நினைப்பது உசிதமே யாகும். பல்லவ சாசனங்களின்படி நோக்கின் பல்லவன் என்பவன் துரோணனுக்குப் பேரனுவன். (அமராவதித் தூண் கல்வெட்டு No. 32 பார்க்க). துரோணன் துருபதனுடைய கங்கைக்கரையில் உள்ள உத்தரபாஞ்சாலத்தை அஹிச் சத்திரம் என்று பெயரிட்டுத் துரோண தேய மாக்கியது, பாரதம் ஆதிபர்வத்தும், துரோண பர்வத்தும் கண்டது. இத் துரோணர் வழியினர் துரோணஜர் எனப்பட்டு அவரே தொண்டையர் என வழங்கப் பெற்றனர் என்று உய்த்துணரலாகும். இஃது இவர் சாசன வரலாற்றிற் கியைவதேயாம். "தொண்டையோன் தொண்டை" என நந்திக் கலம்பகத்திற் றொண்டை மாலையின் வேருகக் குடிப்பெயராகக் கூறிய தொண்டையன் என்பதற்கும் இஃதியைதல் காண்க. "கொண்டியுண்டித் தொண்டையோர் மருக" எனப் பெரும்பாணாற்றிலும் குடிப்பெயராகவே கொள்ளக் கிடத்தலுங் கண்டுணர்க. பாரதப் பழைய வுரைகாரர் துரோணர் பிறந்த "துரோணியை" மலைக் குகை யென்று கூறுவர். (ஆதிபர்வம் 64-ஆம் அத்.) பல்லவர் மலைகளிற் குகை தோண்டுதற்கு இஃது இயைபுடையதாகும். இதனுனும் இக்குடித் தலைவன் துரோணன் ஆதல் உணரலாம். பல்லவர் மலைக் குகையுடையர் (பாரதம். பீஷ்ம. 9) என்ற நூல் வழக்குங் காண்க. இவர் கிருஷ்ணவேணி நதிக்கரையில் வதிந்த போது தம்மூரை த்ரோணிகோட்டை யென்று பெயரிட்டது பின்னர்த் தரணிகோட்டை யென மாறிற்றென்று நினையலாம். இவர் சாசனங்களிற் காணப்படும்,

---

"தோண மந்தைப் பாரத்வாசச் சதுர்வேதிந்"

(S. I. I. 532) என்னுந் தொடரும் இக் கருத்தை வலியுறுத்தும்.

இவற்றிற்கேற்பவே வடநாட்டு வழக்குற்ற மைதிலி மொழியில் "துரோண" என்னும்பதம் "தொண்ட" என மருவுவது உண்டென்பது துரோண காகம் தொண்ட காகம் என்று வருதலான் அறியப்படுவது. துரோணம் என்பது காக்கைக்குப் பெயரென்பது,

*"பிம்புட் பறவையும் வில்லுங் காக்கை*
*தும்பையும் பதக்குந் துரோணமாகும்" (பிங்கலம். 3300)*

என வருதலானறியலாம்.

இனி பரத்வாஜருக்குத் தம் தரும பத்தினியிடம் உண்டானவர் அக்னிவேசயர் எனப்படுவர். அந்த ருஷிக்கே க்ருதாசி யென்னும் நீரர மகளிடம் உண்டாயினவர் துரோணர். அக்னிவேச்யரும் துரோணரும் ஒரு தந்தை மக்கள் ஆதலால் இவர்கள் சகோதரர் ஆவர். இவ்வுண்மை மகா பாரதத்தில் (ஆதிபர். 140-ஆம் அத்யாயம்) பாரத்வாஜர் அந்த ஆக்னேயாஸ்திரத்தை அக்னிவேச்யருக்குக் கொடுத்தார்; அந்த அக்னிவேச்ய முனிவர் பரத்வாஜ புத்திரரும் தமக்குச் சகோதரருமாக இருக்கும் துரோணருக்குத் தமக்குக் கிடைத்த ஆக்னேயாஸ்திரத்தைக் கொடுத்தார்." என வருதலானறியலாம். மகா பாரதம் பீஷ்ம பர்வம் 50-ஆம் அத்தியாயத்தில் இப் பரத்வாஜ முனிவர் வழியினராகிய இருதிறத்தாரையும்,

"அக்னிவேச்யரும் துஹுண்டரும்" என்று குறித்தல் காணலாம். இதன்கண் அக்னிவேசஸ்து, ஹுண்டாஸ்ச என்று பிரிப்பதும் உண்டு. அக்னிவேச்யர் துரோணர் என்று கூறப்படவேண்டியவரே. ஈண்டு அக்னிவேச்யர் துஹுண்டர் எனப்பட்டனர் என ஊகித்தலாகும். துரோண குலத்தவர் நெடுங்காலத்திற்கு முன்னே அவ் வடநாட்டிலே துஹுண்ட குலத்தவரென

வழக்குப் பெற்றனர் என்று நினையலாகும். துரோணஜா என்பது துஹ¬ண்ட் என மாறிப் பின்னும் மைதிலி மொழியில் தொண்ட் எனத் திரிந்ததென்று கொள்ள லாம். துரோணஜா என்பதே தொண்டையர் எனத் தமிழ் வழக்குப் பெற்றதாதல் இதனுலறிக. அக்னிவேச்யரையும் துஹ¬ண்டரையும் சேரக் கூறுதல் அவ் விரு திறத்தரும் ஒரு தந்தை மரபில் ஸஹோதர வழியின ராதல் பற்றி என்று எளிதிலுணரலாகும். இவ்வுண்மை யினுலன்றே நந்திக் கலம்பகத்தில் “தொண்டையன் தொண்டை” என வந்ததெனத் துணிக. தொண்டைக் குலத்தவன் தொண்டைமாலையென்பது அதன் பொரு ளாகும். பரத்வாஜருக்கு க்ருதாசி என்னும் நீரரமகளிரி னின்றுண்டாகிய துரோணரும், கௌதமருக்கு ஜாலவதீ என்னும் நீரரமகளினின்றுண்டாகிய கிருபியும் சேர்ந்து அச்வத்தாமாவைப் பெற்ருர் என்பது மஹாபாரதமாத லின் (ஆதிபர்வம். 140-ஆம். அத்யாயம்) இத் துரோண மரபு நீரைதரு மரபாதல் கண்டுகோள்க. அம் மரபில் அச்வத் தாமாவிற்கு மதனி என்னும் நீரரமகளிடத்தில் உண்டா யினவன் பல்லவன் என்று அமராவதிச் சாசனங் கூறுத லானும் இக் குடி, திரைதரு மகளிர் மரபேயாதல் ஐய மறத் துணியலாம்.

இவற்ருற் பல்லவன் தன் தாய் வழியாலும் தந்தை வழியாலும் திரைமகளிர் மரபினனுதல் உணர்க. இனி இத் திரைதரு மரபினன் அர்ணன், அர்ணி, அர்ணிகன் என்று வழங்கப்படுவர் என்று முன்னரே விளக்கினேன். அர்ண்ண என்பது நீர்க்கும் அலைக்கும் பெயராகும். இத் திரைதரு மரபினர் இப்பெயரானே கிறிஸ்து பிறந்த முதல் நூற்ருண்டிலும் இருத்தல் தாலமி என்னும் மேற்றிசை யாத்திரிகர் எழுதிய பூகோள நூலில் அருவர்ணியருடைய ஊராகப் பிதுண்ட் நகரைக்

கூறுதலான் உணரலாம். அரு அர்ணி என்பது அரு நாட்டினராகிய அர்ண குலத்தவன் என்று பொருளாகும். அருநாடு—அருவன் நாடாம். அரு என்பது நீரட்டை யின் பெயரென்பது உரையாசிரியர் "இருமிலர் திண்டா" (தொல். புறத். 16) என்புழி அரு என்பது நீருட்கிடக்கும் அட்டையெனக் கூறியதனுல் அறியப்பட்டது. அருவரன்—நீரட்டைபோல நீரின்வந்த ஆண்மகன் எனவும், அருவாளர் அவ்வட்டைபோல நீரின் வந்த மக்கள் என்வும் கொள்ளலாம். இவ் வருவாளர் இத் தென்னுட் டிற் குடியேற்றப் பட்டவர் என்பது நச்சினுர்க்கினியர் கருத்து. அவர் அகத்தியர் தென்னுடு போதுகின்றவர் துவராபதிப் போந்து நிலங்கடந்த நெடுமுடியண்ணல் வழிக்கண் அரசர் பதினெண்மரையும் பதினெண் குடி வேளிர் உள்ளிட்டாரையும் அருவாளரையும் கொண்டு போந்து காடு கெடுத்து நாடாக்கி (தொல். எழுத். பாயிர வுரை) எனக் கூறுதலானறிக. வேளிர் நெருப்பில் வந்தவரும் அருவாளர் நீரில் வந்தவரும் ஆவர். இப் பிதுண்ட நகரத்தை அவராஜனுடையதாகக் காரவேலா சாசனம் கூறுவது. அருவ ராஜா என்பது அவராஜா என மரீஇயது போலும், இதைப் பூவராஜா என்று படிப்பதும் உண்டு. பூர்வராஜா—முன்னை வேந்தன். இக் காரவேலாவின் காலம் கி. மு. 157 என்பர். இந்தப் பிதுண்ட நகரம் பிறருக்கு அச்சஞ் செய்யும் துஹுண்டர் ராற் பெயர் பெற்றதாம் என்று நினையலாம். இவர் கிருஷ்ணவேணி நதிக்கரையிலுள்ள தானிய கடகத்தும், கச்சியிலும், ஆட்சி செலுத்தினராவர். இவர் வடநாட்டுக் கொண்ட துஹுண்டகுலப் பெயரை ஊருக்கும் தமக்கும் கொண்டு வழங்கியது புலனுகும்.

---

‡ அர்வாக் கணவாய் (Aruva Valley) இமயமலை யில் பதரிநாதர் கோயிலை அடுத்துள்ளது.

நிற்க இவர்க்குத் தொண்டைமாலை யேற்பட்டது அசுவத்தாமன் மதனி என்னுங் கடல்கெழு செல்வியை விழைய அவள் அவனுக்குண்டாகிய மகவை அசோக மரத்தடியிற் பல்லவப் பாயலி லினுதலான் அக் காலந் தொட்டு ஆம் என்று நினைத்தலும் தகும். அசோக மரத்திற் படர்ந்த பிம்ப பல்லவங்களை (தொண்டைப் பாசிலையை) அக் குழவிக்குப் பாயலாக்கி அதன்கண் வளரவிட்டாளென்று கொள்ளலாம். அதுதொட்டு அப் பல்லவனும் அவன் வழியினரும் அத் தொண்டையை மாலையாகப் போற்றிக்கொள்ளலாயினர் என்க. இஃது ஆதொண்டை யன்றென்பது கோவையேய் நந்தி என்பத னானும்,

"செங்கோன் மாயன் தொண்டையங் கனிபோற் சிவந்து"

என்பதனானும்

"அவனி நாரணன் றேட்கு லாமது
மலர்ந் தொண்டை வாய்ச்சியர்"

என்பதனாலும் நன்கறிக. இத் தளிரிற் பல்லவன் வளர்ந்தனன் என்பது,

"பல்லவர் கோனந்தி மல்லை யன்றிக்
கூருளிவ ளிளங்கொங்கை யவன்வளர்
தொன்டையல்லா
ரூரு திவள் திருமேனி" (நந்திக். 40)

எனக் கூறுதலா னுணரலாம். "பாசிலைத் தொண்டைப் பல்லவன்" (தொல். அகத். 54) என்னும் மேற் கோட் டொடர்க்கும், பசிய இலைகளையுடைய தொண்டையந் தளிரில் வளர்ந்த பல்லவன் என்று பொருள் கூறுதல் பொருந்திற்றும். நந்திக்கலம்பகத்துப்,

"பதியின் வளர்ந்த நறுந்தொண்டை
யங்கோனந்தி பல்லவர்க்கு" (45)

என்புழி உறைவிடம்போல வளர் நறுந்தொண்டை எனக் கூறலாவதன்றி வேறுகாமை நோக்கிக்கொள்க. அமராவதி ஸ்தூப சாசனத்தும்(No. 32. S.I.I. Vol.I.)

''பல்லவ போகாஸ் நரனெ ஸயாநம்''
பிநாஸ ᵒதம் பல்லவ இத்யவாநி''

தளிர்த் திரளாகிய பாயலிற் (தொட்டிலிற்) கிடந்த மகவினைத் தந்தை பல்லவன் என்றழைத்தனன்; என்றதன்றி இன்ன பல்லவம் என்று உரையாமையுங் காண்க. இதன் உண்மை ''அவன் வளர் தோண்டையல்லால் நாறு திவள் திருமேனி'' என்றதனுல் நன்கு வெளியாதல் கண்டு கொள்க.

இனிக் கோவைச் சாற்றுற் பிழைத்து அதனுற் பிம்பசாரன் எனப் பெயர் சிறந்த பேரரசனும் புத்தர் காலத் துள்ளனுதலால் வடநாட்டு இத்தொண்டைப் பொருட்பெயர் சிறத்தல் அறியலாம். இதனுல் இது பழைமை அரசர் குடி வழக்கென ஈண்டைக்கு நினைக்க. இப் பல்லவர் அஹிச்சத்திரம் (பாம்புக்குடை உடையர்) என்பது பிற்காலத்தும் மறக்கப்படாமை,

''வடக்குடை யானந்தி மானே தயவிந்த வையமெல்லாம்
படக்குடை யேந்திய பல்லவன்'' (நந்திக., 65)

என வரும் நந்திக்கலம்பகத்தானறியலாம். இதன்கண் வையமெல்லாம் படுப்படி குடையேந்திய பல்லவன் என்ருல் விபரிதப் பொருள விளைப்பது தெளிக. இதனுற் படக்குடை என்பதற்குப் பாம்பின் படத்தையுடைய குடை என்பதே பொருளென்க. படநாகம் (பிங். 1546) என்பது காண்க. அஹிச்சத்ரம் என்பது பாம்புக்குடை என்று பொருள் படுதல் அறிக. இக் கருத்திற் கையயேவ கலிகன்றியார் பரமேச்சுர விண்ணகரப் பதிகத்துப்

"பாம்புடைப் பல்லவர் கோன்" என்றருளிச் செய்தல் கண்டுகொள்க. குடையிற் பாம்புடைய பல்லவர் என்று கொள்க. பாம்பு குடையாதல் "சென்றாற் குடையாம்... ......... அணையாந் திருமாற் கரவு" (இயற்பா. 1, 53) என்பதனானுணர்க. அஹிச்சத்ரகர் சாசனம் ப்ரபாஸா என்ற இடத்திற் கிடைத்துள்ளதுங் காண்க இதனால் இவ் வழியினர் நெடுங்காலம் தம் பெயர் மறவாமல் அரசாண்டது புலனாம். சிந்தாமணியுட் (1185) கங்கைக்கு இரு காத தூரத்துப் பல்லவ தேயமுள்ளது கூறியதும் ஈண்டைக்கு ஏற்ப நினைக்க. இப் பல்லவ தேயம் ஜைநர் ஸ்ரீ புராணத்துங் கண்டதாகும்.

இனித் தொண்டையர் என்பது தமிழ்ச் சொல்லே என்று கொள்ளின் இவர் சாசனங்களில் இப் பல்லவரை ஒன்பது கண்டத்தையும் ஆள்பவர் என்று சிறப்பித்தல் (நவகண்ட சாசகர்) கருதி வழங்கப்பட்டதென்க. தொண்டு—ஒன்பது. "தொண்டு தலையிட்ட" என்பது தொல்காப்பியம். தொண்டை நவகண்டம் என்க. தொண்டையர் நவகண்ட நாயகர் எ-று. மகாபாரதத்தில் துரோண பர்வத்தில் பிஷ்மரிறந்த பின் கௌரவர் படையில் ஒன்பது கொடி கூறி அவ் வொன்பதின்மருக்கும் அப் படைவருக்கும் தலைவராகத் துரோணரை ஸேநாபதியாக அபிஷேகஞ் செய்தது கேட்கப்படுதலின் அதற்கியைய இப் பெயரைச் சிறப்பாகக் கொண்டனரோ என ஊகிக்கவுமிடனுண்டு. இவ்வொன்பது கொடியும்,

(1) அசுவத்தாமன் சிங்கவாற் கொடி.
(2) கன்னன் யானைக் கச்சைக் கொடி.
(3) விருஷசேனன் மயிற் கொடி.
(4) கிருபர் (அசுவத்தாமாவின் மாமன்) எருத்துக்கொடி
(5) சல்லியன் கலப்பைக் கொடி.
(6) பூரிச்ரவஸ் யூபக் கொடி.
(7) ஸிந்துராஜன் பன்றிக் கொடி.

(8) சலன் யானைக்கொடி.
(9) துரியோதனன் அரவக்கொடி,

என இவையாம்.

இங்ஙனமெல்லாங் கொள்ளாது தண்டக நாடானது தொண்டக நாடாயிற்று. பின்னதுவே தொண்டை நாடென மரீஇயிற்றென்பாரும், இந் நாட்டிற் பாதாள லோகம் புகுதற்குப் பிலத்துவாரம் உண்டென்றும் அதனாற் றொண்டு என்னுந் துவாரத்தைத் தன்னகத் துடையதாதல் பற்றித் தொண்டகமாகி அதுவே சிதைந்து தொண்டையாயிற் றென்பாரும் உண்டு. வைணவர் வராகமூர்த்தி பிலத்தினின்று வந்த தொண்டு இந் நாட்டகத்துத் திருவேங்கடத்துள்ளதென்பர். கந்த புராண முடையார் முருகக் கடவுள் அசுரரைக் கொன்று மீண்ட பிலவாயில் இங்கே உண்டென்று கூறுவர். அவர் கூறுமாறு:—

"அண்ட மன்னுயி ரீன்றவ ளுடன்முனி வாகித்
தொண்டகங் கெழு சுவாமிதன் மால்வரை துறந்து
மண்டு பாதலத் தேகியே யோர்குகை வழியே
பண்டு தான்வரு வேங்கட கிரியையும் பார்த்தான்."
(கந்தபு. 6. குமாரபுரிப் படலம்)

என்பது, தக்க யாகப் பரணியில் "வேற்றண்ட காபதியை" (236) என்புழித் தண்டகம்—தொண்டைநாடு என்று உரைகாரர் கூறினர்.

இனித் "தொண்டையன் தொண்டை" என்னும் நந்திக்கலம்பகத்தில் தொண்டையன் என்பது "அடி யளந்தான் றாயதெல்லா மொருங்கு" (குறள். 610) என்புழிப் போல வாளா பெயராய் நின்றதென்று கொள்ளலுமாம். தொண்டைப் பல்லவத்திற் கிடந்த குழவியைத் தொட்டு வரும் இக் குலத்தவர் தொண்டையர் எனவும், பல்லவர் எனவும் பெயர் சிறந்தனரென்று

இப் பொருட்கேற்பக் கூறிக்கொள்க. எவ்வாறுயினும் இப் பெரும்பாணாற்றுப் படைத் தலைவனான திரையன் முதன்முதல் தொண்டை சுற்றப்பட்டவன் ஆகான் என்பது நன்குணர்ந்துகொள்க. "தொண்டையோர் மருக" என இவன் விளிக்கப்படுதல் முன்னரே காட்டினேன்.

இன்னும் பல்லவர் கடல் வழியினர் என்பது நந்திக் கலம்பகத்தில்,

> "மொழியார் தொண்டைப் பன்மலர் முற்றுந் தெருவந்து
> விழியா ளென்றும் மேனி வெளுத்துள் மெலிவாளோ
> மொழியா வண்கைத் தன்னரு ணந்திந ஞர்மட்டோ
> வழியாந் தமரக் கடல்வட்டத் தொரு வண்கோவே" (43)

என்றும் தெருவந்து விழியாள் மேனி வெளுத்து உள்ளம் மெலிவாளோ; என்றும் தெருவந்து விழியாத இவள் வெளுத்து மெலிதல், இவள் உள்ளிருந்தபோதும் முற்றிய இவள் தொண்டைப் பன்மலர் மணத்தினாலும். அம்மலர் மணம் நந்தி தன் ஊர்மட்டோ முற்றும் அவன் வங்கிசம் உண்டாதற்குக் காரணமான ஓசைக்கடல் சூழ் வலயத்தும் முற்றும். இதனால் அவனை வண்கோ என மொழியார் என்க. வெளிவந்து காணாமல் உள்ளே இருப்பாளையும் தன் தொண்டை மலர் மணத்திரள் மெலியச்செய்தலான் அவனை வண் கோ என மொழியார் எ-று. இதன் கண், "நந்தி தன் வழியாந் தமரக்கடல்" என்று கொள்ள வைத்தவாறு கண்டு உண்மையுணர்க. இவ ற்று ற் றொண்டையரும் பல்லவரும் திரையரும் எனப்பட்டார் ஒருமுடி யரசரே யாதல் துணிந்துகொள்க. மற்றித் திரையன் குடியைத் திரைதரு மரபென்று கூறித் "தொண்டையோர் மருக" என இவனை விளித்தலாற் புலப்படுத்தியதன்றிப் பல்லவன் எனக் கூறாராயினர். அப்பெயர் வடமொழியாளர் எடுத்தாளும் வழக்குப்

போலும். அர்ண்ணி, அர்ண்ணிகன் என்னும் பெயரைத் திரையன் என மொழி பெயர்த்துக்கொள்ளுதல் காண்க.

இனி, இத்திரையனும் பட்டினப் பாலைத் தலைவனாகிய திருமாவளவனும் ஒரு காலத்தவராதல் முன்னமே இருவரையும் பாடியவர் ஒரு புலவராதலாற் றெளியப் பட்டதேயாம். அக்கிள்ளி வளவனைச் சல்லியங்குமரனார் என்னும் புலவர் நற்றிணையிற் (141)

"பருந்து படப்
பாண்டிலொடு பொருத பல்பிணர்த் தடக்கை
யேந்து கோட்டியானை யிசைவெங் கிள்ளி
வம்பணி யுயர்கொடி யம்பர் சூழ்ந்த
அரிபிலந் தண்ணறல்"

எனப் பாடுதலான் இவ்விளந் திரையற்கும் கிள்ளி வளவற்கும் போர் நிகழ்ந்தது துணியப்படும். ஈண்டுப் பாண்டில் என்றது எருத்துக் கொடியினை என்க. அஃது ஈண்டு அக்கொடியுடைய அரசற்கு ஆயது. யாப்பருங்கல விருத்தி மேற்கோளில்,

"மூலை கலிங்க மூரி நிலமா மகட்கு
மலை பரவை யாரி மென்கூந்தல்—குலநதி
நன்னூரங் காஞ்சி நகைசால் முகமவட்குக்
கண்ணாவா னேறுயர்த்த கோ" (95. சூத். உரை)

எனவும், நந்திக்கலம்பகத்தில்

"அடலேறு வலத்துயர் வைத்த பிரான்"
"விடைமன் பொறியோலை விடேல் விடுகே'. (55)

எனவும்,

"விசையுடன் மங்கல விசயமு நடப்ப" (ஷை 1)

எனவும்

கலிங்கத்துப் பரணியில்,

"துங்க வெள்விடை யுயர்த்த கோன்
வண்டையர்க் கரசு பல்லவர்க் கரசு"

எனவும் வருவனவற்ருற் பல்லவர்க்கு விடைக்கொடி யும் விடைப் பொறியும் உண்மை யுணரப்படும், கலி கன்றியாரும்,

"விடை வெல்கொடி வேற்படை முன்னுயர்த்த
பண்புடைப் பல்லவர் கோன்" (பெரியதிருமொழி 2,9,6)

என அருளிச் செய்தல் காண்க. சாசனங்களிற் பல்லவரைப் போத்தரையர் எனக் கூறுவதும் இப் பொருள் பற்றியே என உணர்க. போத்து என்பது பெற்றத்தில் (பசு வர்க்கத்தில்) ஆணுக்குப் பெயர். இதனைத் தொல்காப்பிய மரபியலுட்,

"போத்துங் கண்டியுங் கடுவனும் பிறவும்
யாத்த வாண்பாற் பெயரென மொழிப (மரபியல்.2)

எனவும்,

"பெற்ற மெருமை புலிமரை புல்வாய்
மற்றிவை யெல்லாம் போத்தெனப் படுமே [மரபி.41]

எனவும் வருஞ் சூத்திரங்களான் உணர்க. இவ் வுண்மை யுணரார் பல்லவம், தளிர் போத்து என்பன ஒரு பொருளன எனக்கொண்டு தளிராற் போத்தரையர் எனப்பட்டனர் என்ருரும் உண்டு. அது பல்லவப் போத்தரையர் என வருதலான் ஒரு பொருளையே வட மொழி தென்மொழியாற் கூறியதன்றி வேருகாதென்க. ஸ்ரீ காளத்தி மலையுடைய நாட்டைப் "போத்தப்பி" நாடென்பதும் எருத்துக் கொடியையுடைய அப்பி நாடென்றவாறும். அப்பி என்பது நீர் வழியினன் எ-று. இப் பெயர் வழக்கு நம்பி அப்பி என்னும் பெயரானறிக. அப்பி என்பது திரையன் என்ருற்போலக் குடியாற் பெற்ற பெயரென்றறிக.

இவற்றாற் றிரையராகிய தொண்டைப் பல்லவர்க்குப் பாண்டில், போத்து, விடை, ஏறு எனப்பட்ட எருத்துக் கொடியே உண்மை நன்குணரலாம். இதற்கேற்பவே ''சாருதேவி'' சாசனத்தில் (Epi, Ind Vol. 8. P. 143) விடைப் பொறி அரசரைக் கொடியடையாளமே கூறிப் பெயர் கூறுதொழிதல் தமிழ் வழக்கே என்பது,

''கயலெழுதிய விமய நெற்றியி
னயலெழுதிய புலியும் வில்லும்,

என்னுஞ் சிலப்பதிகாரத்துள் (ஆய்ச்சியர் குரவை) புலியும் வில்லும் என்றற்குச்

''செம்பியன் சேரன் என்னு மன்னரும்

என அடியார்க்கு நல்லார் உரைகூறிச் செல்லு தலான் உணரலாம். இவற்றாற் ''பாண்டிலொடு பொருத .........கிள்ளி'' என்பது எருத்துக் குடியுடைய திரைய ஞெடு பொருத கிள்ளி வளவனையே குறிக்குமென்பது நன்கு தெளிக. பாண்டில் எருதுக்குப் பெயராதலால் ''வாண்முகப் பாண்டில்'' எனச் சிறு பாணாற்றில் வருதலானறிக.

''அலங்கும் பாண்டி லிழையணிந் தீமென (64)

என வரும் பதிற்றுப்பத்துள் பாண்டில் தேர் பூணும் எருதுகள் என்று பழைய உரைகாரர் கூறினர். இனி இப் பாண்டில் தேரென்றுரைத்தாரும் உண்டு. அது பொருத அரசற்கு அடையாள மாகாமையானும் அங்ஙனங் கூறுதல் நூல் வழக்கல்லாமையானும் பொரு ளன்றென்க. இவ் வளவன் சளுக்கியராகிய வடவரை வென்றது கூறிய இடத்தும் இவ்வாறே.

''கொடியணி யேனம் பொடியணிந் தொடப்ப
வடதிசை வாகை சூடித் தென்றிசை
வென்றி வாய்த்த வன்றுள் விடலை
வளவன் (தொல். செய். 146)

எனப் பேராசிரியர் காட்டிய மேற்கோட் பாடற் பகுதியானும் பேரரசரோடு பொருத போரை அவர் கொடியோடு பொருததாகக் கூறுதலுண்டென்றுணர்க. பன்றிக் கொடி சளுக்கியருடையதென்பது சோழர் மெய்க்கீர்த்திகளிற் கண்டது. புகாரும் அம்பரும் உறையூருமுடைய கிள்ளிவளவன் கச்சியும் வேங்கடமும் உடையனாகிய காலம் இவ் வுருத்திரங்கண்ணனார் பெரும்பாணாறு பாடியதன் பின்னே என்று துணியலாம். "கச்சியோனே கைவண் டோன்றல்" என்று திரையனையே இவர் கூறுதலான் இஃதறியப்படும். இவர் பெரும்பாணாற்றில்.

> "பொறிவரிப் புகர்முகந் தாக்கிய வயமான்
> கொடுவரிக் குருளை கொளவேட் டாங்கு
> ... ... ... ... ... ...
> பகைவர் கடிமதி லெறிந்து
> குடுமி கொள்ளும் வென்றி"

யினை இத்திரையற்குக் கூறிய இடத்தும் இவனை வயமானாகிய சிங்கமாக வுரைத்து இவன் யானையைத் தாக்கியது கூறுமுகத்தால், யானைக் கொடியுடைய கங்கரை வென்றது கூறித் தென்னாட்டுச் சோழரொடு பொருவதனைக்,

> "கொடுவரிக் குருளை கொளவேட் டாங்கு"

என்பதனாற் குறித்தார் என்றெளிதி லுணரலாம். "கொடுவரிக் குருளை" என்றது புலிக் கொடியையுடைய கிள்ளிவளவனை என்று நன்குணரலாம். "கொடுவரிக் குருளை கூட்டுள் வளர்ந்தாங்கு" என இவ் வாசிரியரே பட்டினப் பாலையுள் அவ் வளவனைப் பாடுதலானும் இஃதுணர்க.

> "இரும்புலி கொன்று பெருங்களி றடூஉம்
> பொறிவய மானனையை" [பதிற். 75]

என வருதலான் ஈண்டைக்கு இதுவே பொருளாதல் உணர்க. நச்சினார்க்கினியர் "வயமான் கொடுவரிக் குருளை

கொளவேட் டாங்கு'' என்பதற்கு வலியையுடைய சிங்கத்தினுடைய வளைந்த வரியையுடைய குருளை அவ் வியானையின் மத்தகத்தைக் கொள விரும்பினாற்போல'' என உரைத்தார். சிங்கக் குருளைக்குக் கொடுவரி யில்லாமையையும், கொளவேட்டற்குச் செய்படு பொருள் மூலத்தி லில்லாமையையும் அவர் நினைந்திலர். பட்டினப் பாலையுள் ''கொடுவரிக் குருளை'' என்பதற்கு ''வளைந்த வரிகளையுடைய புலிக்குட்டி'' என அவரே உரைத்தல் காண்க. இதனை உரையுள் விரித்துக் கூறுவேன். ஆண்டுங் காண்க. சோழர் பாட்டில் (புறம். 190)

''கடுங்கட் கேழ லிடம்பட வீழ்ந்தென
விருங்களிற் றொருத்தல் நல்வலம் படுக்கும்''

புலி என இவர் கொடிக்கியையக் கூறிச் சளுக்கர் கொடியையும் கங்கர் கொடியையும் இழித்தல் நோக்கிக் கவிமரபுணர்க. கங்கர்களுக்கு யானைக் கொடியென்பது சாசனங்களிற் கண்டது. (Epi. Indica. Vol. IVp. 177)

சுணடுத் திரையனை,

''வயமான் கொளவேட் டாங்கு [பெரும்பாண். 448—49]

என்பதனுற் சிங்க அடையாளத்தாற் குறித்தா ரென்க. பல்லவர்க்குச் சிங்கலாஞ்சனையுண்மை பல்லவ சாசனங்களிற் காண்க.

இஃது இவர் குடியில் அசுவத்தாமனுக்குச் சிங்க வாலுடைய குடி மஹாபாரதத்திற் கூறியுள்ளதுபற்றியா மென்று கொள்ளத்தகும். இவர் எருத்துக்

---

1. உண்டவல்லிக் குகை மஹேந்திரவர்மன் நிறுவிய தூணிற் கண்டது. டுப்ராயில் துரையவர்கள் எழுதிய பல்லவ சரிதம் பக்கம். 33. பார்க்க.

கொடியை ஆண்டது அசுவத்தாமன் தாய்மாமனாகிய கிருபன் கொடியாதல்பற்றியா மென்றும் நினையலாம். அசுவத்தாமன் சிவபிரானமிசமும் யமனுடை அமிசமும் பெற்றுப் பிறந்தான் என்று பாரதம் ஆதிபர்வத்தில் உள்ளமையால் அவற்றிற் கியையச் சிவபிரானுடைய எருதினையும் யமனுடைய கணிச்சியையும் அடையாள மாகக் கொண்டதுடன், அவ் வசுவத்தாமன் சிங்கவாற் கொடியை நினைந்து சிங்கத்தையும் லாஞ்சனையாகக் கொண்டனர் என்று நினைதல் பொருந்திற்றாகும். அவ் வசுவத்தாமன் பல்லவன் என்னும் இக் குடி முதல்வன் தந்தையாதலான் இம் மூன்றடையாளமும் அவனமிசமும் உரிமையும் பற்றி உண்டாயின என்று எளிதினினையலாம். இனி ஒரு சாரார் கங்கரே பல்லவர் ஆவார் என்றுரும் உண்டு. அக் கொள்கை, கங்கர்க்குரிய கொடியும் மாலை யும், பல்லவர்க்குரிய கொடியும் மாலையும் வேறு வேறு கூறியவாற்றாற் பொருந்தாமை கண்டுகொள்க. கங்கர்க் குச் சுரபுன்னை மாலையென்பது இலண்டன் மாநகர்ப் பொருட் காட்சிச் சாலையினுள்ள வேள்விக்குடிச் செப் பேட்டில்,

"கொங்கரவ நறுங்கண்ணிக் கங்கராசன்

எனக் கூறுதலா னறிந்ததாகும். "கொங்கரவ நறுங் கண்ணிக் கங்கராசன்" என மேலும் ஆண்டு வருதல் காண்க. அரவம்—நாகம். அது சுர புன்னை எ-று. கங்கர் "வேந்து வினை முடித்தனன்" (44)என்னும் அகப்பாட்டிற் சேரன் படை முதலியாகக் கூறப்பட்ட வீரர் பலரும் வட நாட்டுத் தோன்றிய வீரராகக் கருதப்படுவர். அவர்,

"நன்னனேற்றை நறும்பூ ணத்தி
துன்னருங் கடுந்திறற் கங்கன் கட்டி
பொன்னணி யானை பொன்றுறை"

என்பார். நன்னன் நன்னன்வேண்மா னுவன். இவன் வடபான் முனிவன் றடவினுட் ரேன்றிய மரபினனுவன். (புறம். 201). ஏற்றை ஏற்றுக் குடியுடைய பல்லவ னுவன். அத்தி புட்கலாவதியிலாண்ட அஸ்தி என்னும் அரசன் மரபினன். * கங்கன்—கங்கர் மரபினன். கட்டி ராஜபுத்ராிற் கட்டியர் முன் மரபினன். பொன்றுறை— ஸ்வர்ண நதித் துறையிலிருந்த அரசர் வழியினர்.

இதனுற் சங்க காலத்து வட்வரிற் பல்லரசர் வழியினர் தென்னுடு புக்கு வாழ்தலுணரலாம். சிலப்பதிகாரத்துச் செங்குட்டுவன் பணிவித்த அரசருட் கங்கர் கட்டியர் முதலியோர் கூறப்படுதல் காட்சிக் காதையிற் காண்க. மணிமேகலையுளும்,

"காந்தார மென்னுங் கழிபெரு நாட்டுப்
பூருவ தேயம் பொறைகெட வாழும்
அத்திபதி யெனு மரசாள் வேந்தன் [பிடிகை]

என வருதலான் அத்தி மரபு அறியலாம்.

இனி, இத் தொண்டைப் பல்லவர் வடுகராகார் என்பது,

"தொண்டைப் பல்லவ னுணையிற்
பொருந்தா வடுகர் முனைச்சுரங்
கடந்து கொண்ட பல்லா நிரையே" (தொல். அகத். 74)

என நச்சினுர்க்கினியர் காட்டிய மேற்கோட் பாடற் பகுதியால் நன்கறிந்தது. நாஸிக்கிலுள்ள பாலஸ்ரீயின் சாசனத்தில் "கௌதமீபுத்ரன்" என்பான் பல்லவரைத் துரத்தினுன் என்பதும், இது நிகழ்ந்தது கி. பி. 78-ஆம் ஆண்டு என்பதும் தெரிதலாற் பல்லவர் வடநாடுவிட்டுத் தெற்கட் குடியேறிய காலம் கிறிஸ்து பிறத்தற்கு முற்

(* Cambridge History of India, Vol. I. p. 355)

பட்டதேயாமென்க. இதனுற் சிந்து நதிக் கரையிலுள்ள ப்ரதாதக நாட்டிற் பல்லவர் என்னும் பெயரான், கிறிஸ்து பிறந்தபின் பத்தாம் நூற்ருண்டில் இராஜேந்திரன் என்பவன் செய்த புவனகோச நூலிற் கூறிய குடியினர் இத்தொண்டைப் பல்லவர் ஆகார் என்பது நன்கு துணிக. அந் நூலுள்ளே பஃலவர் வடநாட்டாராகவும், பல்லவர் தக்ஷிண பதத்தினராகவுங் கூறுதலானும் இருவரும் ஒரு குடியினராகாமை நன்கு துணியலாம். பெயர் வேற்றுமையுங் காண்க.

இனி வேங்கடமலை தமிழ்க்கு வடவெல்லையாய தென்பது,

"வட வேங்கடந் தென்குமரி யாயிடைத்
தமிழ் கூறு நல்லுலகத்து"

என வரும் தொல்காப்பியப் பாயிரத்தா லறிந்தது. இவ் வேங்கட மலைக்கு வடக்கண் தமிழ்மொழி பெயர்ந்த தேயமென்பது,

"பனிபடு சோலை வேங்கடத் தும்பர்
மொழிபெயர் தேஎத்த ராயினும்" (அகம். 211)

என வருதலான் அறியலாம். இவ் வேங்கட மலையையுடைய நாடு பழந் தமிழராகிய கள்வர் என்னுங் குடியினர்க்குத் தலைவனை புல்லி என்னும் வள்ளலுடையதாயிருந்ததென்பது,

"மாவண் புல்லி விழவுடை விழுச்சீர்
வேங்கடம்" (அகம் 61)

எனவும்,

"புல்லி வேங்கடம்" (அகம் 83)
"புல்லி நன்னுட் டும்பர் வேங்கடம்" (ஷை 393)

எனவும்,

மறப்போர்ப் புல்லி காம்புடை நெடுவரை
வேங்கடத்து''                                                    (௸ 203)

எனவும்,

''புல்லிய வேங்கட விறல் வரை''                       (புறம். 385)

எனவும் வருவன கொண்டறியலாம். இவன் வேங்கடமலை தொண்டை நாட்டினதேயாக இப் பெருந் தமிழ் வள்ளலைத் தொண்டையன் என்றேனும் தொண்டையர் குடியினரென்றேனுஞ் சங்க நூல்கள் வழங்காமை நினைந்துகொள்க.

இனி, இவ் வேங்கடம்

''வினைநவில் யானை விறற்போர்த் தொண்டையர்
இனமழை தவழு மேற்றரு நெடுங்கோட்
டோங்கு வெள் ளருவி வேங்கடத்து''      (அகம். 213)

எனவும்,

''வெவ்வேற் றிரையன் வேங்கட நெடுவரை'' (௸ 85)

எனவுங் கூறலான் இப் புல்லிக்குப் பின்னே தொண்டையர் என்பார்க்கும் அவர் வழியினனாகிய திரையனுக்கும் உரியதாதல் அறிக. இவற்றிற் கியையவே நந்திக்கலம்பகத்தில் தெள்ளாற்றெறிந்த நந்தி பல்லவனை,

''வடவேங்கட நாடுடை மன்னர்பிரான்''                   (55)

எனக் கூறுதல் காணலாம். இவற்றாற் றமிழ்ச் சிற்றரசனாகிய புல்லி என்பானுக் குரிய இவ் வேங்கடநாடு வென்றியால் இத் தொண்டையர் எனப்பட்ட பல்லவ குலத்தவராற் கவர்ந்து கொள்ளப்பட்டதே யாமென்று நன்கு துணியலாம். கடைச் சங்க காலம் பிற்பகுதியில் இவ் விழவுடை வேங்கடஞ் சூழ் நாடு திரையர்க்கும் தொண்டையர்க்கும் வென்றியால் உரியதாயிற்றென்று

துணிதல் பொருந்தும். இந் நூலுள்ளும் இம் மலை நாடுடையனனை இவனைக் குறித்தல் கண்டுகொள்க. செவ்வரை நாடன் என்பது காண்க.

இக்கருத்துக் கியையவே இவரைப் பாடிய சங்கப் புலவர் கல்லாடனர் இவரைப்

*"பொருவார்*
*மண்ணெடுத் துண்ணும் மண்ணல் யானை*
*வண்டேர்த் தொண்டையர் வழையமலடுக்கத்து"* (குறுந்.260)

என்ருர். ஈண்டுப் "பொருவார் மண்ணெடுத்துண்ணுந் தொண்டையர்" என்பதும் பெரும்பாணாற்றுப் படையுள்

*"பகைவர்*
*கொண்டி யுண்டித் தொண்டையோர்"*

என்பதும் கருத்தொத்தல் காண்க. இதற்கியையவே நந்திக் கலம்பகத்துத்

*"தமிழ் மன்னர் நின்ற நிலமேல்*
*வெங்கோ னிமிர்ந்த வரையுஞ் சிவந்த விறனந்தி"* (42)

எனப் பாடியுள்ளதுங் காண்க. இவர் வடநாட்டவரா யிருந்து வைத்து இத் தென்னாட்டுட் புக்குப் போர் வன்மையாற் பிறர் மண்ணெடுத்துண்டல் நோக்கி இந் நாட்டார் முதற்கண் இவரோடு பகைமை பாராட்டி இவரைப் படிறர் என்றும் பதகரென்றும் நிசரென்றும் கூறத் தலைப்பட்டனரென்றுந் தெரிவது. இதனைப் பிங்கலத்துப்,

*'பல்லவர் பதகர் நீசர்"*

எனவும் சூடாமணி நிகண்டில் "படிறர் பல்லவர் பரத்தர்" எனவும் வருதலானறியலாம். *

---

* வடமொழியிலும் பல்லவகன் என்பது தூர்த்தனுக்குப் பெயராகும்.

இவற்ருல் இப் பல்லவர் இந் நாட்டிற் குடியேறிய போது அவரை வெறுத்து ஈண்டுள்ள நான்கு வருணத்தோடு பட்ட சான்ருேரும் இவர்க்கிட்ட பல பெயர்களாகும். இந் நிகண்டு வசை இவரைப்பற்றித் தொன்னூல்களிற் சான்ருேர் புகன்ற இசைக்கு நேர் விரோதமேயாகும்.

இப் பல்லவர் விரைவிற் றம் வேத வழக்கொடுபட்ட நல்லொழுக்கத்தாலும் வேள்விகளாலும் தானதருமங்களாலும் பிற நற்செயல்களாலும் இத் தமிழரின் வேருகாமை புலப்படுத்தியதனேடு தங் குடித் தலைமையைப் பாரத காலத்துப் பெரு விற்புலவனுகிய துரோணனிடம் வைத்துக் காட்டி இத் தமிழரால் எல்லா வேந்தரினுஞ் சிறப்பித்துப் போற்றப்படும் பெரும்பேறு பெற்று வாழ்ந்தனரென்று நினையத்தகும். இதனை,

> "மூவ ருள்ளு மிக்கூறும்
> வசைநீங்கு சிறப்பின் பல்வேற் றிரையன்" (பெரும்பாண்)

என்பதனுலறிக.

> "பல்லவர்க்குத் திறைகொடா மன்னவரை மறுக்கஞ் செய்யும்
> புலியூர்ச் சிற்றம்பலத்தெம் பெருமானைப் பெற்ருமன்றே" (தேவா)

என வரும் ஆளுடைய நம்பி திருவாக்கும் இதனை உறுதிப்படுத்தும்.

---

# பெரும்பாணாற்றுப்படை.

இது பெரும்பாணச் சாதியி லொருவனைக் கச்சியி லிருந்த தொண்டையர் வழியிற் றிரையனென்னுஞ் செங்கோல் வேந்தன்பால் ஆற்றுப்படுத்தியதாகக் கூறியதாகும். பெரும்பாண் - பேரியாழ் வாசிக்கும் பாணச்சாதி. இந் நூலுள்

"இடனுடைப் பேரியாழ் முறையுளி கழிப்பி" (462)

என வருதலான் அறிக. சீறியாழ் வாசிக்கும் இச்சாதியினை சிறுபாண் என்பர் என்பது சிறுபாணாற்றுப்படை யென்னும் பெயரானும் அந்நூலுள்

"இன்குரற் சீறியாழ் டிரிட வயிற்றழீஇ"
(அடி. 35)

என வருதலானும் உய்த்துணரலாகும். அகலிரு விசும்பு - எல்லாப் பொருளும் அகன்று வளர்தற்குக் காரணமான பெரிய ஆகாயம். 'அகலிரு வானத்து' என்பர் பின்னும். இருள் பருகிப் பகல் கான்று விசும்பின் எழுதரும் பல்கதிர்ப் பரிதி என்க. நல்லது பருகித் தீயது காலுதல் உலகியலாகத் தீயதாகிய இருளைப் பருகி நல்லதாகிய பகலைக்கான்ற என்றுகூறியது பரிதியின் தெய்வத்தன்மை புலப்படுத்த வேண்டி என்க. இருள் பருகிப் பகல்கான்று - இருளை யுட்கொண்டு பகலைப் புறப்படவிட்டு. எ. று. பருகிக் கான்ற என இயைதல் பற்றிக் காலுதல் இடக்கர்ச்

சொல்லெனக் கொண்டு அணிபற்றிப் பிறிதொரு பொருள் போலிற்றலின் மறைக்கப்படாது நின்ற தெனக் கொள்வர் சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் (தொல். சொல். எச். 47)

"முறியினார்க் கொன்றை நன்பொன் கால"
(அடி, 94)

என்னும் முல்லைப் பாட்டுள் இச் சொல் சொரிதற்கு வழங்குதலான் இஃது ஒருதலையாக இடக்கர்ச் சொல்லாகத் துணியப்படாமை காண்க. "புல்லையருந் திப் பாலைச் சொரியும் கறவை" யென்றாற் போலக் கொள்ளின் இனிது பொருந்துதல் காண்க. காலுதல் இடையறாது புறம் விடுதலுமாம்.

"கல்கால் கவணை" (பதிற். 88)

என்புழிக் காண்க. நான்முகத்தே இங்ஙனங் கூறியதும் ஓர் நயம்பற்றியாகும். புலவர் தாம் எடுத்துக்கொண்ட பாட்டுடைத் தலைவன் லோகாதித்தன் எனவும் அவனால் இல்லையாக்கப் படுவது இருளாகிய பன்றி யெனவும் குறிப்பித்தவாறும். பல்லவர்க்குஞ் சளுக்கியர்க்கும் பகைமை, தொன்று தொட்டுண்மையும், அவருட் சளுக்கியர்க்குப் பன்றி கொடியாக வுண்மையும் உணர்ந்து கொள்க.

"இருடுணிந்தன்ன ஏனம்" என்பது மலைபடுகடாம். பல்லவர் லோகாதித்தன் எனப்பெயர் புனைதல் சாசனங்களிற் காண்க. திரையனைமேல்,

"குணகடல் வரைப்பின் முந்நீர் நாப்பட்
பகல்செய் மண்டிலம் பாரித் தாங்கு
— — — —
இருந்தோன்"

(பெரும்பாண். 440 - 441)

எனக் கூறுதலான் இவர் துணிந்தது உணரலாகும். இவனைக் கடற்றிரையி லெழுதருஞ் சூரியனாகக் கூறுதல் இவன் குடிக்கேற்றது என நோக்குக.

"ஒண்சுடர் போன்ற மன்னவ னந்தி"

என்பது நந்திக் கலம்பகம்.

பரிதி காய்சினம் - சூரியனுடைய காய்கின்ற வெயில். முறுகுதலாற் கடிய வலியையுடைய வேனற் பெரும் பொழுது. இது முது வேனல் என்பது குறிப்பாகக் கொள்ளவைத்தார்; "வெயில் தெறு மிருங் கானத்திடை வறுமையுடன் வரும் பாணற் கோதியதாதலின்" (பன்னிருபாட்டியல் ஆற்றுப்படை இலக்கணம்பார்க்க.) பாசிலை யொழித்த பராஅரைப் பாதிரி - பசிய இலையை யுதிர்த்த பரிய அரையினை யுடைய பாடலி மரம். வேனில் இலையுதிர் பருவமாதலிற் கூறினார். இஃது இத் திரையன் காலத்துப் பாடலியரசர் வலி குன்றியதனைக் குறிப்பானுணர்த்தியதாம். பாதிரிப்பூ செந்நிற மலர்; அப் பாதிரிப் பூவின் வயிற்றைப் பிளந்ததன் உள்ளிடம் ஒக்கும் செவ்வரக்கு ஊட்டிய பச்சை. பச்சை - தோல்; இஃது யாழ் மரத்தைப் பொத்தியது. இது செந்நிறம் ஊட்டியதென்பது

"விளக்கழ லுருவின் விசியுறு பச்சை"

(பொருநாறு: 5)

என்பதனானும் உணர்க. இதனாற்றோல் பதனிடுதலும், நிறமூட்டுதலும், அதைத் தைத்துபயோகித்தலும் இந் நாட்டுப் பண்டேயுண்டென்பது தெரிக. மலரின் உள்வயிற்றை உவமை கூறியதனால் தோலின் மென்மை தெளியலாம். பச்சை-போர்வை; பச்சை நிறமல்லாமை பாதிரி மலர் உவமையாற் கொள்ள வைத்தார்.

7-15. பரியரைக் கமுகு - பருமை அரைக் கமுகமாம். பரியரை, பரா அரை இருவகைமையுங் காண்க. கமுகின் பாளையம் பசும்பூ - கமுகினுடைய பாளையிலுள்ள அழகிய இளம்பூவிற்கரு. பூவிற்கரு — பூவின் உள்ளீடு. இவை நேரே இருந்தாற்போல இருதலையுங் கூடிச் செறிந்த துளைப்போர்வை. இளம் பூம் பாளையைப் பிரித்து நோக்கின் உள்ளே உள்ள கரு அடுத்தடுத்துச் செறிந்து அச்செறிதற்கிடையே நுண்ணிய துளையுடைமை காணலாம்.

உருக்கியன்ன பொருத்துறு போர்வை — அத்துளைகளில்லாத இடம் உருக்கி யிணைத்தா லன்ன பொருத்துதலுற்ற போர்வை. துளை — தைத்த ஊசித் துளை; உருக்கியன்ன என்றது உருகற்கியைபல்லாத பொருட்கணுண்டாய நினைவன்மை காண்க. தோல் தீக்குருகும் இயல்பினதேயென்க. இதனாற்றோலின் றுன்னர் வன்மை குறித்தார்.

சுனை நீரின்றி வறந்தாலன்ன இருள் துஞ்சும் வறிய வாயினையும், நீரின்மையால் நிழல் தோன்றாமை பற்றி இருள் துஞ்சுதல் குறித்தார்.

வறுவாய் - ஒலிக்கு நாவில்லாது வறியவாய்- நரம்பிசைப்பதல்லது வாயிசைத்தலில்லாமை நோக்குக. உள்ளே இருள் துஞ்சுமாயின் வாய் வறிதாதல் இயல்பு என்ற சாடு காண்க. சுனை என்பதனுல் நீருளதாமென்று நோக்கி இருள் தூங்குவதென்று வறுஞ்சுனையைத் தெரிவது போல வாயுண்மையால் ஒலியுளதாமென்று நோக்கி நீரின்மை கண்டு இருள் தூங்குவதென்று தெரிதல் நினைக.

பிறை பிறந்தன்ன என்பதைப் பிறந்த பிறையன்ன என மாறுக. இதனுட் பிறையைக் கவிழ வைத்து அதன் பின்புறத்தால் நரம்பினை ஏந்தினுற் போன்றுள்ள கவைத் தலை என்க. ஈண்டுக் கவைக் கடை என்றது நரம்பேத்தப் பிறைவடிவாக யானைத் தந்தத்தாற் செய்யப்பட்டதனை.

நெடும் பணை - நெடிய மூங்கிலையொத்த திரண்ட தோள் மடந்தை. நீதாண்மடந்தை முன்கை என்றது தோளின் அழகிற்கும் பெருமைக்குந் தக முன்கையுமமையும் என்பது கருதி. முன்கையிற் குறுந்தொடி - முன்கையிலணிந்த சிறுவளை. குறுந்தொடி வேண்டியது இறுக இட்டது குறித்து.

மெலிந்து வீங்கு — ஒலியால் மெலிந்து வரவரப் பெருகிய வார்க்கட்டு என்க. வார்க்கட்டு இறுக வலிப்பதன்றி மெலியச் சுற்றுவதே இல்லாமை காண்க.

''திண்பிணித் திவவின்'' (பொருநாறு)

என்பதனுனறிக. சிலப்பதிகாரம் புறஞ்சேரி யிறுத்த காதை 107–ஆம் அடியில் அடியார்க்கு நல்லார் "திவவுறுத்தியாத்து" என்புழித் திவவு - நரம்புகளை வலிபெறக் கட்டும் வார்க்கட்டு என்றது காண்க. வார்க்கட்டு இறுக வலித்துப் பிணித்த யாழை இக்காலத்தார் ஸ்திரவீணை என்பர்; ஸ்திரவீணை யானைத் துதிக்கை போல அடி பருத்து வரவரச் சிறுகிய தண்டுடையது. சரவீணை ஓரளவான தண்டுடையது. ஓரளவான தண்டிலே வார்க்கட்டு நெகிழப் பிணித்து உழலற்காகும். யானைத் துதிக்கைபோன்ற தண்டில் வார்க்கட்டு உழலற்கியலாது. மற்று வார்க்கட்டினை "மெலிந்து வீங்கு திவவு" என்றது,

"செவிநேர்பு வைத்த செய்வுறு திவவு"
(முருகாறு. 140)

என்பதனுல் இவ் வார்க்கட்டுக்கள் நுண்ணிய செவியான் அளந்து கட்டப்பட வேண்டியதாதலின் இன்னேசையான் வலிந்தும் மெலிந்தும் இசை செய்யப் பிணித்தன என்று கொள்க. இவ்வுண்மை பதிற்றுப்பத்துள் "இழியாத் திவவின் வயிரிய மாக்கள்" (பதிற். 29) எனக் கூறுதலானும் இனிதினுணரலாம். இழியாத் திவவு - இறங்காத வார்க்கட்டு. பரிபாடலில் "பிணிகொள் யாழ்" (பரிபா. பக். 171) என வருதல் காண்க. சிறுபாணாற்றில் நச்சினர்க்கினியர்,

"பைங்க ணூகம் பாம்பு பிடித்தன்ன
அங்கோடு செறிந்த அவிழ்ந்து வீங்குதிவவின்"

என வருமிடத்து நெகிழவும் இறுகவும் நரம்பு துவக்குதல் உடன்பட்டாரெனிற் கூறுவேன். ஆங்கு

அவர் குரங்கின் கையினைச் சுற்றிய பாம்பினை நரம்பு துவக்கியதற்கு உவமையென்று கருதினர். பாடத்தில் ''ஊகம் பாம்பு பிடித்தன்ன .... செறிந்த திவவு'' என்றதன்றி வேறில்லை. குரங்கு தன்னைக் கடிக்குமென்று கருதிய பாம்பினைக் கடிக்காமைக்குப் பிடிக்கும் நிலையில் எவ்வளவு இறுகப் பிடித்தலுள்ளதாகும், அவ்வளவாகத் தண்டினை இறுகச் செறிந்த திவவு என்றே இம்மூலம் கொள்ளக் கிடத்தல் நன்குகாண்க. குரங்கின் கையைச் சுற்றிய பாம்பை நரம்பு துவக்கியதற்கு உடன்பட்டாற் குரங்கின் கையைத் தண்டிற்குவமையாக உடன்பட வேண்டும். குரங்கின் அழகழிந்து மயிர் செறிந்த கையை யாழின் தண்டிற்குவமையாக இப்பெரும்புலவர் நினையார் என்க. வனப்புடை மடந்தையரின் நெடும் பணைத் திரடோட் குறுந்தொடி முன்கையை உவமித்தலான் இவ்வுண்மையுணர்க.

''மாயோன் முன்கை யாய்தொடி கடுக்குங்
கண்கூ டிருக்கைத் திண்பிணித் திவவின்''
(பொருநாறு. 14-15)

என்றார் பொருநாற்றினும். மற்று அவிழ்ந்து வீங்குதிவவு என்ற பாடத்தை அமிழ்ந்து வீங்குதிவவு என்று கொள்க. இந் நரம்புத் துவக்கு செவியானளந்து கட்டப்படுதலின் முதலின் ஒலியரண் அமிழவும் வரவரப் பெருகவும் பிணித்ததான முறைமையினையே குறிக்குமென்று கொள்க. மெலிந்து வீங்கு என்புழி மெலிதலும் வீங்குதலும் முரணுதல் போல ஈண்டும் அமிழ்தலும் வீங்குதலும் முரணுதல் காண்க. இவ் வார்க் கட்டுக்களை நீளவிட்ட ஏழு நரம்பிற்கும்

எளிதில் எட்டக்கூடிய நிலையில் உயர்ந்தும் வரவரப் பத்தலடிவரை அமிழ்ந்தும் இருக்கவைத்து இறுகப் பிணிக்கப்படுதலின் இங்ஙனங் கூறினர் என்க. செறிந்து அமிழ்ந்து வீங்குதிவவு என்புழிச் செறிதல் இறுகிப் பிணித்தற்கும் அமிழ்ந்து வீங்குதல் இசை யொலித்தற்கும் நன்கியைதல் காண்க.

அவிழ்ந்து என்று பாடங் கொள்ளின் செறிந்து என்ற தியையாமை காண்க. வடநாட்டுச் சித்தார் என்னும் வீணை போலத் தமிழ்நாட்டு அக்காலத் துள் ளன வெல்லாம் உழலவும் இறுகவும் பிணித்த வார்க் கட்டே உடையன எனின் நச்சினர்க்கினியர் கொண்ட பாடமும் உரையும் பொருந்தும்.

"தொடித்திரி வன்ன தொண்டுபடு திவவின்" என்பது மலைபடுகடாம். ஈண்டு நச்சினர்க்கினியர் "தொடியினது உழற்சியொத்த வுழற்சியை யுடைய ஒன்பதென்னும் எண் உண்டான வார்க்கட்டினையும்" என்றுரை கூறினர். இதனல் உழல் திவவின் யாழும் சிறுபான்மை உண்டென்பது துணியலாம். பொருந ராற்றுப் படையுள் "திண்பிணித் திவவே" கூறுதலா னும், பதிற்றுப் பத்துள் இழியாத் திவவே(பதிற். 29) கூறுதலானும் அவர் கருத்துப் பொருந்துமோ என் னும் ஐயமுண்டாவது. பெருங் கதையினும் (மகத. 14, 218) இல், "திண்ணியவாகத் திவவுநிலை நிறீஇ" எனத் தெளியக் கூறுதலுங் காண்க.

இனி, ஈண்டுக் கூறியது பேரியாழ் அஃது ஆயிரநரப்புடையது.

"பேரியாழ் முதலிய ஏனவும் இறந்தன வெனக் கொள்க" .

எனச் சிலப்பதிகார உரைப்பாயிரத்து அடியார்க்கு நல்லார் கூறுதலான் இறந்த யாழமைப்பு முறை எம்மனோர்க்கு அறிவரிதென்க.

மணிவார்ந்தன்ன - நீலமணி ஒழுகினுலொத்த மா இரு மருப்பின்-கரிய பெரிய தண்டினையுடைய;

பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின் பொன்னை இழைத்து நீட்டினுற் போன்ற நரம்பின்.

16-20 தொடையமை கேள்வி - நரம்பின் தொடுதலிற் கேட்டற்குரிய இசையமைந்தது; யாழ் எ-று. நரம்பு புரியுடையதேனும் அது தெரியாதபடி அடங்கியதற்குப் பொன்வார்ந் தன்ன என்றார் என்க. புரி அடங்காதாயின் நெருடு மென்க. இவரே "திரிபுரி நரம்பின் றீந்தொடை" என யாழைக் கூறுதல் காண்க. (பட்டினப். 254).

இடவயிற்றழீஇ - இருதயமுள்ள இடத்தே தழுவி; தழுவுதல் வினையான் அவ் யாழினைத் தழுவுவதன் கண்ணுள்ள ஆதாரங் குறித்தார். தழுவுதலே இன்பமென்று குறித்தார். தம் தகுதிக்கொப்ப அளித்துத் தாங்குநரைப் பெறுது தான் பகலிற் கனலியும் இரவில் மதியும் திரிதருதல் குறிப்பு. இது திரிதரும் பாண என்றதனுற் கொள்ளத் தகும். தண் கடல் வரைப்பின் என்றது புறங்குளிர்ந்து அகத்து உவர்ப்புடைய பெருஞ் செல்வர் சூழ்ந்த நிலனையுந் தாங்குவா

ரின்மையைக் குறித்தது. பொழி மழை என்றது கடலன்ன வச்சையரை விடுத்துச் சிறிது பொழியு மழையனைய கொடையாளரை நினைவித்ததாம். மழை யனையாரில்லாமையால் வறுமையாகிய புகை மூடிய மலை என்றார். அம் மழை முன்னம் பொழிந்ததனு லுண்டாகிய பழுமரம் தேர்தல் கூறியதனுல் அவ் வள்ளல்களுடைய வண்மையாலுண்டாகி, உள்ள துதவும் நல்லோரை நினைந்தார். தேர்தல் வினையால் அவர் அரியராதல் காட்டினர். "பழுமரம்" என்றத னுற் பழாத மரமனைய பலர் உலகினிறைதல் குறித் தார்.

"வழங்கத் தவாஅப் பெருவள னெய்தி" (26)

என மேற் கூறுதலானிவ் வுண்மையுணர்க. பற வையை உவமை கூறியது இரு சிறகிற்கொப்ப இயலு மிசையுமே சேறற்குக் கருவியாக உடைமை கருதி.

21-25. கல்லென் சுற்றமொடு - ஆரவார மிக்க ஒக்கலொடு 'கல்லெனுெக்கல்" என்பது மலைபடு கடாம். சுற்றத்தவர் பலர் என்பது தெரியக் கல்லென் சுற்றமென்ருர். பறவையின் வேறு தோன்றக் "கால் கிளர்ந்து" என்ருர். காலாற் கிளர்ந்து திரிதரும் எ.று. புல்லென் யாக்கை - தான் தாங்குதற்குரிய சுற்றத் தைத் தாங்க இயலாமற் பொலிவழிந்த உடம்பு. சீரரு ருணம் தவிராமையாற் புலத்தலையுடைய வாய். புலத் தல் - கற்ற கல்வியை வெறுத்துரைத்தல். பாண - பாடல் வல்லவ. இவன் யாழ்ப் பாணனுதலால் வாய்ப் பாண என்றதற்கு இங்ஙனம் அரிய பொருள் கொண்

டார் உரைகாரர் என்க. புலவு-புலத்தல்; இவன் புல்லென்றலும் புலத்தலும் தன்பொருட் டல்லாமை

"கடும்பின் கடும்பசி களையுநர்க் காணாது
சில்செவித் தாகிய கேள்வி நொந்துநொந்
திங்கெவன் செய்தியோ பாண"

(புறம். 68)

எனப் புறப்பாட்டினும் வருதலானறிக. யாக்கையை ஊட்டிக் காக்கும் வாய் தன்னையுங் காத்தல் போல இப் பாணன் சுற்றத்தை ஊட்டிக் காத்துத் தானும் உண்டல் நினைக்க. யாக்கைக்கும் வாய்க்கும் இதுவே இயைபென்க. வானந்துளி சொரிதற்குக் கானங் கல்லென என்று கூறியதனால் ஒருவர் உதவி யாற் பலர் உதவுவாராதல் குறித்தார். கானம் கல் லெனல் - அக் காடு தழைத்துப் பயன்படுதலான் என் பது. அஃது அங்ஙனமாதற்கு வானந் துளிசொரிதல் ஏதுவென்பதுங் கருதிக் கொள்க. பழம்பசி கூர்ந்த - உணவிற் பயிலாது பழங்காலந் தொட்டுப் பசியே பயின்று மிகுதல்பற்றி பழம் பசி என்றது இப்போது அஃதொழிந்து பழமையாயிற்றென்பது தோன்றக் கூறினனெனினு நன்கமையும். பிறந்தபோதுண்டா கிய பசியாதலிற் பழம்பசி என்றலு மொன்று

எம் இரும்பேர் ஒக்கல் என்றது நின்னினும் மிகப் பெரிய சுற்றமுடையேன் என்பது குறித்தார்.

26-28. வழங்கத்தவாஅப் பெருவளனெய்தி என்றது நீ ஒத்தாரிடைக் கொள்ளாய்; கொள்ள நினை யின் நானே வழங்குவன் என்பது பட நின்றது. அன் றியும் நின் இசை வன்மையை அவ் வள்ளலும் அவன்

கொடையருமையை நீயும் அறியவேண்டி ஆற்றுப் படுப்பல்; இல்லையேல் நானே நல்குவல் என்பது தோன்றக் கூறினனென்க.

வழங்கத்தவாஅ - பிறர்க்குத் தருதலாற் கெடாத அப் பெருவளனைச் சுமத்தற்குப் புரவியுங் களிறு முகந்து கொண்டு என்றார். முகந்து கொண்டு என்ற தனாற்றான் வேண்டியன கொள்ளல் குறித்தான். வால் உளைப் புரவி என்றதனால் வெண்பரி குறித்தார். புரவிக்கு வெண்மை உத்தம இலக்கணங்களுள் ஒன்று; வயக்களிறு என்பதனால் சுமந்துள்ள பெருவளத்தைப் பிறர் கவர்தற்கருமை குறித்தார். எய்தி முகந்து கொண்டு என்றதனாற் றிரையன் கொடைப்பெருமை காட்டினார். யாம் அவணின்றும் வருதும் என்றது அவன் கொடை நிகழ்த்துஞ் சமய மண்டபத்தே உளன் என்பது குறித்தது. கச்சி நகரைக் குறித்தா னெனினும் பொருந்தும். நின் உள்ளஞ் சிறக்க வென்றவாறு.

29-35. இருநிலங் கடந்த - பெருநிலம் அளந்து கொண்ட; திருமறு மார்பின் - திருமகளும் ஸ்ரீவத்ஸ மென்னும் மறுவும் உள்ள மார்பினையுடைய

முந்நீர் வண்ணன் - கடனிறக் கடவுள் "கடனிறக் கடவுளெந்தை" என்பது திருமாலை (19). அக்கடவுள் பிறங்கடை - அக்கடவுள் புதல்வனாகிய பிரமனுடைய எ. று.

"நீனிறவுருவி னெடியோன் கொப்பூழ்
நான்முக வொருவற் பயந்த பல்லிதழ்த்தாமரை"
(வரி. 402-404)

என்றார். பின்னும் பிரமனுடைய திரைதரு மரபினென்க. அப் பிரமனுடைய மரபு பலர் இருடி களைத் தலைமையாகக் கொண்டு பலவாதலின் இப் பாட்டுடைத் தலைவன் மரபினை அப் பிரமன் மரபிற் றிரைதரு மரபு என்றார். பிற்காலத்துச் செயங் கொண்டாரும் கருணாகரத் தொண்டைமானை

"மறை மொழிந்த பதிமரபின் வந்தகுல
திலகன் வண்டைநக ரதிபனே'

(கலிங். 11, 30)

எனக் கூறுதலான் உண்மையுணர்க. வேத மொழிந்த தலைவன் (பதி) மரபினின்று வந்த குலம் என்றதனால் அப் பிரமன் மரபினிற் பல்லவர் ஒரு வகைக் குலத்தினர் என்று விளக்குதல் அறிக. "இவ் வகையே பிரமனாதியாக வராநின்ற பல்லவ வம்சத் துட் பரமேச்வரப் போத்தரையர்"

என்பது காஞ்சீபுர வைகுந்தப் பெருமாள் கோவிற் சாசனப் பகுதி.

(S. I. I. vol. IV. No. 135)

பல்லவர் சாசனங்களில் அவரைப் பாரத்வாஜ கோத்திரத்தினர் என்றும் பிரம க்ஷத்திரியர் என்றும் கூறுதலும் நோக்கிக்கொள்க. இப் பிரமன் மரபிற் றிரைதரு மரபென்பதனால் மகா பாரதத்தில் ஆதி பர்வத்தில் பரத்வாஜ முனிவர் க்ருதாசி என்னும் அப் ஸரஸை விழைந்ததனாற் றுரோணர் உண்டானார் என்னும் பழங்குடிக் கதையைக் குறித்தனராவர். க்ருதாசி என்பவள் கடலிற் றிரையிற் றோன்றிய

தேவகனிகையர் ஐவருளொருத்தியாவள். ரம்பை, ஊர்வசி, மேனகை, க்ருதாசி, திலோத்தமை இவர் ஐவர் அப்ஸரஸுக்கள் என்பது அமரஸிம்ஹன் நிகண்டிற் கண்டது. இவர் அமிழ்தங் கடைந்த போது கடலிலேயிற் றோன்றிய செய்தி வான்மீகம் பாலகாண்டத்திற் கண்டது.

(சருக்கம். 46)

பல்லவ சாசனம் பலவும் திருமால், பிரமன், ஆங்கிரஸ், பிருகற்பதி, ஸம்யு, பரத்வாஜன், துரோணன், அசுவத்தாமன், பல்லவன் என இப் பல்லவ குல முன்னோரை வரிசைப் படுத்தலான் இவ்வுண்மை யுணர்க.

இனி, அமராவதித் தூணிலுள்ள கல்வெட்டில் (No. 32 அமராவதிச் சாசனம்) அசுவத்தாமனுக்குப் பல்லவன் உண்டான வரலாற்றை விளக்கிய இடத்து அசுவத்தாமாவும், மதனி என்னும் அப்ஸரஸும் கூட நேர்ந்து அசோக மரத்தடியிற் பல்லவத் தொட்டிலில் ஓர் மகவு ஈனப்பெற்றது கண்டு, அம் மகவு பல்லவத்திற் கிடத்தலாற் பல்லவன் என்று அசுவத்தாமனாற் பெயரிடப்பட்டதென்று கேட்கப்படுதலான் அப் பிரமன் வழியிற் பல்லவன் உண்டாகிய குடியையே திரைதரு மரபு என்பதனாற் குறித்தாரென்பது நன்கு பொருந்தும். அந் நீர்த்திரை தரு மரபு என்புழி அந் நீர் என்றது முன்னுள்ள முந்நீர் வண்ணன் கண் முந்நீராகிய கடலையே சுட்டுதலான் இக் கடலலை தந்த குலமென்பது "கடல்கெழு செல்வி" எனப் பெருந் தமிழருடன்பட்ட அப்ஸரஸுக்கள் வழியில் வந்த குலத்தையே குறிப்பதென்று கொள்க. அம் மூவனார்

என்பவர் அகப்பாட்டிற் றலைவிக்குக் "கடல்கெழு செல்வி கரைநின் ஞுங்கு" (அகம். 370) எனப்பாடுதலால் அப்ஸரஸுக்களைக் கடல்கெழு செல்வியர் என்பது தமிழ் வழக்காதலும் உணர்க

''தெண்டிரைப்
பெருங்கடற் பரப்பி னமர்ந்துறை யணங்கோ
விருங்கழி மருங்கு நிலைபெற் றனையோ''
(நற். 155)

என்பதுங் காண்க.

திரைதரு மரபின் உரவோன் என்பது மஹா பாரதத்தின்படி துரோணனுக்கும் அமராவதிச் சாசனத்தின்படி அசுவத்தாமாவின் புதல்வனாகிய பல்லவற்கும் பொருந்துதல் காண்க.

உரவோன் உம்பல் - அப் பல்லவன் வழித்தோன்றல் எ. று.

இறைவனுக்கு எத்துணையோ சிறப்பிருக்க இருநிலங் கடந்த சிறப்பையே கூறியது. இக் குலத்து முதல்வன் இறைவன் என்பதும் அவன் ஆதிக்கண் அரசெய்திய தலைமையும் குறித்ததாம்.

"ஆதிக்கண் அரசெய்தினை'' எனவும்

''பவளமெறி திரைப் பாயற் கோவே
புகழ்திரை நிறைந்த பொருவேல் நந்தி
உலகுட னளந்தவை நீயே
உலகொடு நிலவுமதி யுதயவரை யொத்தே''

எனவும் கூறுதல் காண்க.

இதன் கண், திரைப்பாயல் என்பது இந் நூலுள் வந்த நீர்ப்பாயல் என்னும் ஊரினை யென்றறிக. இதனைச் சலசயனம் என்ப. பின்னொரு பல்லவனுற் றலசயனமாக மாற்றிக் கோயில் எடுக்கப்பட்டதென்று துணிவர். அவ்விறைவன் திருநிறத்திற்குப் பூவைப்பூ முதலியன உளவாக முந்நீரைக் கூறியது இவன் குல முதல்வியாகிய கடல்கெழு செல்வி தோன்றிய சிறப்புப்பற்றி என்க. அந் நீர்த்திரை - அக் கடற்றிரை; இக் கடற்றிரை தந்த குடிமை பற்றி இக் குலத்துப் பெயர் பெற்றவன் "கொண்கணிகன்" என்பவன். இவன் மேற்கூறிய பல்லவன் வழியில் விமலன் என்பவனுக்குப் பின்னே வைக்கப்பட்டுச் சாசனங்களில் வழங்கப்படுவன். (பாகூர்ச் சாசனம். 98) இப் பெயருள் கொண்கு என்பது கடற் சேர்ப்பிற்குப் பெயராம். அணிகன் என்பது அர்ணிகன் என்பதன் மரூஉ மொழியாகும். "அர்ண" என்பது நீர்க்கும் நீர்த்திரைக்கும் கூறும் வடமொழிப் பெயர். இஃது "இக" என்னும் பிரத்யயம் சேர்ந்து அர்ணிகன் எனலாயிற்று. இதனுல் அர்ணிகன் என்னும் பெயர் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுத் திரையன் என வழங்கப்பட்டது என்று துணிய இடனுண்டு. எவ்வாருயினும் அர்ணிகன் திரையன் என்பதில் ஐயப்பாடேயில்லாமை காண்க. உரைகாரர் இவ்வரலாறு இங்ஙனம் உணராமையான் சேய்மைக்கணுள்ள திரைதரு மரபின் என்பதனைத் திரையன் என்பதனேடியைத்துத் திரைகொண்டு வந்து ஏறவிட்ட மரபாற் றிரையனென்றுரைத்தார்.

இனி அணிகை அர்ணிகா என்பதன் மரூஉவாகும். இதற்கு நீர்த்திரையில் உண்டாயவன் என்

பது பொருளாம். இவன் வழியில் வந்தவர் அணி கைப் பல்லவர் என்பதும் ஆம். எவ்வாருயினும் இவர் நீர்த்திரை மரபுடையவர் என்பது பல்லாற்ரு னுந் துணியப்படுதல் காண்க. தமிழர் நீரர மகளைக் "கடல்கெழு செல்வி" என்பர். இதனை அம்மூவனுர் அகப்பாட்டில் (370)

"வண்டுபடத் ததைந்த கண்ணி நெய்தல்
தண்ணறும் பைந்தார் துயல்வர வந்திக்
கடல்கெழு செல்வி கரைநின் ருங்கு
நீயே கான லொழிய யானே"

எனப் பாடுதலான் அறிக. க்ருதாசி என்னுங் கடல்கெழு செல்விக்குத் துரோணன் உண்டாகி அவன் வழியில் இப் பல்லவ குலம் தோன்றுதல் கேட் கப்படுதலான் இப் பல்லவர் நெடுங்காலம் பிற்பட்டுங் கூட நீரிலுண்டாகிய மரபிற் றுரோணன் பெயரை மறவாது தம் விருதுப் பெயருள் அமைத்துப் போற் றின ரெனக் கருதற்குச் சாசனத் துணையும் உண்டு. இவ் வுண்மையைச் சிராப்பள்ளிக் குன்றிற் பொறிக் கப் பட்ட மஹேந்திர பல்லவன் சாசனத்தில் அவன் தன்னைக் "குவத்ரோணன்" என்று கூறிக்கொள்ளுத லான் உணர்க. குவம் என்பது நீரிலுண்டாவதற்கு வடமொழிப் பெயரென்பது காண்க. நீரிற் பிறந்த குடிமையை யுடைய துரோணன் என்பது இதன் பொருளாம். திரையன் அணிகன் கௌரவார்னத்யுதி: குவத்ரோணன் என்னும் பெயர்களும் இக் கருத் தையே வலியுறுத்தல் காண்க.

இவற்றிற்கெல்லாம் இனிதியையவே திரைய னைக் கடல் "யான் பயந்தேன்" எனச் செருக்கி ஆர்ப்

பது எனப் புலவர் பாடுவது இவன் பிறந்தது திரை தரு மரபாகிய பழங்குடி என்பதையே வலியுறுத்தல் காண்க.

"அர்ண" என்பவன் கந்தருவர் தலைவனான சித்ர ரதனோடொப்ப ஒரு குடித் தலைவனாக இருப்பது இருக்கு வேதத்திற் கண்டது. இதனால் இவ் வர்ண குலத்தின் பழமை உய்த்துணரலாகும்.

கீழைக் கடனாட்டு மலைய தேயத்துக் கிடைத்த சாசனப் பகுதியில் இப் பல்லவர் என்று அறிஞராற் றுணியப்பட்ட வேந்தர் தம்மை 'கௌரவார்ணத்யுதி' என்று கூறிக்கொள்ளுதல் (                ) கேட்கப் படுதலானும் இதனுண்மை யினிதுணரலாம் நந்திக் கலம்பகத்தும்,

"நந்திதன் றூர்மட்டோ
வழியாந் தமரக் கடல்வட்டத் தொருவன்கோவே"
(43)

என வந்தது காண்க. இதன் கட் டன்றூர் மட்டோ தன் வழியாந் தமரக் கடல் வட்டத்து எனக் கொள்ள வைத்த துணர்க.

கச்சி ஏகாம்பரநாதர் கோயில் அர்த்த பண்டபச் சாசனத்திற் "பல்லவர் திரையர்" என வருதலானும் பல்லவர் திரைதரு மரபினராதல் தெளியலாம். விரிஞ்சிபுரஞ் சாசனத்தில் (No. 62)

---

1. Cambridge History of India Vol. 1. பக்கம் 84-பார்க்க.

''மூவன் திரையன்''

என்னும் பெயர் கேட்கப்படுதலான் இக் குடிப் பெயர் நெடுங்காலத்துக்குப் பிற்பட்டும் வழக்குடைமை தெரியலாம். இத் திரையன் குடி, கடலிற் றலையான தோற்றமுடைய தென்பதை நன்கு தெளியவே,

''இலங்குநீர்ப் பரப்பின் வளைமீக் கூறும்
வலம்புரி யன்ன வசைநீங்கு சிறப்பிற்
பல்வேற் றிரையன்''

என இவ்வாசிரியர் கூறினர் என்க. இக் கடற் குடியிற் பலரையும் வளையாக்கித் தம்பாட்டுடைத் தலைவனை வலம்புரி என்று இவர் சிறப்பித்தல் உணர்க.

36-40. ''திரையற் படர் குவிராயின்'' என்றான் அவனைக் கிட்ட நினைப்பதே நல்லூழின் பயன் என்பதும் அந் நல்லூழ் எல்லார்க்கும் இருத்தல் அரிதென்பதும் தெரிய; பெரும்பாண் சுற்ற முழுதையும் நோக்கிக் கூறுதலாற் படர்குவிர் எனப் பன்மையாற் கூறினான். அடுத்துக் ''கேளவன் நிலையே'' என்றது தலைமைப் பெரும்பாணனை மட்டு நோக்கி எனக் கொள்க. அவன்நிலை - அவன்கண் நின்ற இயல்பு எ.று. நல்லோனியல்பு கேட்பதும் நன்றாதலாற் கெடுக நின் அவலம் எனக் கேட்கப் புக்க குறிப்பறிந்து கூறினானாகக் கொள்க.

அவலம் - மிடியானாகிய உள்ளத் துன்பம். ''நெஞ்சத் தவல மிலர்'' (குறள். 1072) என்புழிப் போலக் கவலையுமாம். படர் குவிராயின் என்றதனாற்

படர்தற்கண் இடையூறுண்டோ எனவும் திரையனை அடையும் வரையும் உண்டு செல்லற் கியையுமோ எனவும் ஐய நிகழாது பரிகரித்து அவன்பாற் சேறற் கண்ணேயுள்ள உணவும் இன்பமும் பிறவும் அறிவு றுத்தி ஆற்றுப்படுப்பது; மேல் முதற்கண் செல்வழி யில் ஆறலை கள்வரில்லாமை கூறுகின்றார். தொல்காப் பியனார் அச்சத்திற்கு ஏதுக்கூறிய இடத்து,

"அணங்கே விலங்கே கள்வர்தம் மிறையெனப்
பிணங்கள் சாலா வச்ச நான்கே" (மெய்ப். 8)

எனக் கூறினார். இங்குக் கூறிய நான்கனுள் இறை அல்லது கடிந்த அறம்புரி செங்கோலுடைய னென்றும் அவனது கடியுடை வியன் புலமென்றுங் கூறி இறையான் அஞ்சலாகாமை காட்டி அவன் அறம் புரிதலால் அணங்காலும் விலங்காலும் அச்சம் நிகழாதென்றும், அவன் அல்லது கடிதலாற் களவேர் வாழ்க்கைக் கொடியோராகிய கள்வர் அவன் நாட்டே இல்லையென்றும் குறித்தனர் என்க. 41-45.

அணங்கு - தெய்வம். ஈண்டு உருமு மூரமுதென் றது அவன் அறத்தால் தெய்வீக அச்சமில்லாமை காட்டினார். நச்சினார்க்கினியர் "அணங்கு" என்புழி உருமிடித்தலையுங் கூறுதல் காண்க. அரவுந்தப்பா - பாம்புகளுங் கொல்லா. தப்புதல் - வாள் முதலிய வற்றால் எறிந்து கொல்லுதல். காட்டுமாவும் உறுகண் செய்யா - காடுவாழ் புலி முதலியனவும் வருத்தஞ் செய்யா. அரவும் மாவும் விலங்கச்சம்பற்றிக் கூறி னார். பாம்பு உடலை வைத்து உயிர் நீக்குதலும் புலி முதலியன உடலையுண்டு உயிர் நீக்குதலும் வேற்றுமை காண்க.

பருகி உயிர் செகுக்கும் பாம்பு என்பது பற்றிப் பற்றிய உடலை யுயிரோடு விழுங்கிப் பின் உயிர் நீக்க லும் உயிரை நீக்கி உடலைத் தின்றலும் வேற்றுமை எனினும் அமையும். அவன் கடியுடை வியன் புலம் அவன் நாடு அகன்று பெரிதாயினும் அவன் காவ லுடைமையிற் குறையில்லை யென்பது குறித்தது.

"கோஒல் செம்மையிற்சான்ரோர் பல்கி"
(புறம். 117)

எனக் கபிலர் கூறுமாறு சான்ரோர் நிறைதலாற் கொடியோரில்லாமை கூறினர்.

"தென்ணீர் வயற் ரெண்டை
நன்னாடு சான்ரோ ருடைத்து"
என ஔவை கூறுதலுங் காண்க.

கைப்பொருள் வௌவுங் களவு--அத்தஞ் செல் வோருடைய கைபோல் உற்றுழி யுதவும் பொருளைக் கவர்ந்துகொள்ளுங் களவென்க. இதனாற் றம் கைப் பொருளை நல்கும் வள்ளன்மையுடைய சான் ருண்மையை ஏர் வாழ்நர் பக்கல் நினைந்தனராவர். களவேர் வாழ்க்கைக் கொடியோர் -- ஏர் வாழ்க்கை நல்லோரிற் பிரித்துக் காட்டியவாறு. களவை ஏர் போலக் கொண்டு ஒழுகும் வாழ்க்கை என்க. கொடி யோர் என்ரூர் ஏர் வாழ்க்கையால் உயிர்கள் ஆக்கம் பெற்றுத் தழைத்தலும் இக் களவால் உயிர்களின் உடலும் பொருளும் அழிதலும் தெரிய. அத்தஞ் செல்வோர் அலற -- வழிச்செல்வோர் தெய்வத்தைக் கூப்பிட எ-று. இக் கள்வரைக் கண்டளவே அலறு தல் இயல்பு. அங்ஙனம் அலரு நிற்கவும் இரங்காது

தாக்கி என்க. தாக்கப்படுவது உடலென்பது வவ்வப் படுவது கைப்பொருள் என்பதனுற் கொள்ளவைத் தார். இனி வியன்புலம் என்றது அவன் ஏவல் கேட்டலையுடைய நாடு எனினு மமையும். மேற்பாலை நிலம் கூறி அந் நிலத்தெயினரும் அத்தஞ் செல்வோர்க் குதவுதல்,

"செல்வரை நாடன் சென்னிய மெனினே
... ... ... ... ...
பைதிர் கடும்பொடு பதமிகப் பெறுகுவிர்"

என அறிவுறுத்தல் காண்க. அப் பாலை நிலத் தவரும் கொடியரல்லர் என்பது கருதிக் கூறினு ரென்க. இதனுல் அவரும் சான்ருேராதல் குறித்தல் நன்கு தெளியலாம். வேட்டாங்கு -- நீ விரும்பிய அவ் விடத்துச் சென்மோ என்க. வேட்டாங்கு -- நீ படர் தற்கு வேட்ட அவ்விடத்து எ-று.

அசைவுழி யசைஇ -- இளைத்த இடத்து இளைப் பாறி; நசையுழித் தங்கி -- நின்னை விரும்பிய இடத்துத் தங்குதல் செய்து. நசைதல்--நச்சுதல். புறப்பாட்டில் "நின்னசை வேட்கையின்" என்பதற்கு "நின்னை நச்சிய விருப்பத்தால்" எனப் பழைய உரைகாரர் பொருள் கூறியதனுலுணர்க. நீ வேட்ட ஆங்குச் சென்மோ இரவல என்க. சென்மோ இரவல என்றது ஆங்குச் செல்லும் வரையே இரவுள்ளனை யாவை என்பதுபட நின்றது. சேறற்கு ஒருப்பட்ட நின் னுள்ளஞ் சிறப்பதாகுக எனினு மமையும்.

46--50. இனி மேற்கூறிய "அத்தஞ்செல்வோர்" வரையில், வாணிகச் சாத்து பாலைவழிச் சேறல் கூறு கின்ருர்.

சகட்டிற்கு உருளையே தலையாய உறுப்பாதலின் அதனை முதற்கட் கூறுகின்றார்.

"கால்பார் கோத்து ஞாலத் தியங்குங்
காவற் சாகாடு" (புறம். 185.)

என்பது காண்க. அவ்வுருளையிலுள்ள பல்வகை யுறுப்பினும் முற்படக் கொழுஞ் சூட்டைக் கூறினர். அவையே தரையிற் செலவாற் றேயாத கொழுமை யுடையவாதல் வேண்டி. சகட்டிற் றரையிற் படுவது பிறிதல்லாமை நினைக. சூட்டு என்பது உருளையின் ஆரில் வளைந்து கிடக்கும் வட்டை என்க. சூட்டு அருந்திய ஆரம் -- அவ் வட்டைகள் கவ்விய ஆர்கள். வட்டைகளின் துளைகள் ஆர்களின் துளைகளை உட் கொள்ளுதல் குறித்து அருந்திய என்றார். திருந்து நிலை ஆரத்து -- திருந்திய தன்மையில் நிற்றலையுடைய ஆர்களோடு கூடிய ஆர்கள் குடத்திற்கும் வட்டைக்கு மிடையில் நிற்க வைத்தலான் நிலையாரத்து என்றார். திருந்துநிலை -- திருந்திய நிற்கத் தைத்த தன்மை.

முழவின் அன்ன முழுமர உருளி --- அச்சிற் கோத்த குட மென்பர் இக்காலத்தார். இஃதுருளு தல்பற்றி உருளி என்றும், இது முழு மரத்தால் நடுப் பருத்தும் இருதலையும் ஒக்கச் சிறுத்தும் செய்யப் படுதலான் "முழவினன்ன" என்றுங் கூறினர். சொல் வானும் கேட்பானும் வாச்சியம் வல்லுநராதல் குறித்து அவரறிந்த முழவினை உவமை கூறினர். மிருதங்க யோகம் என்பது பிறக்கும்போதும் இறக்கும்போதும் சிறுகி இடைக்காலத்துப் பெருகி வாழ்தலைக் குறிப்பதென்பதனால், முழா நடுவிற் பருத்

தலும் இரு தலையுஞ் சிறுகுதலு முணரலாம். இனி முழு மர உருளி என்பது முழு மரமாகிய அச்சிற் கோத்த உருளு மியல்புடைய குடமெனினும் நன்கு பொருந்தும். முழு மரத்தைக் கடைந்த குட உருளி யையே கூறின் இவ்வுருள் பெருந் தேர்க்கு அச் சென்கின்ற நல்லுறுப்பைப் கூறுமை காண்க. இக் காலத்தும் கோயிற் பெருந் தேர்கள் முழு மரத்தா லாகிய அச்சே உடைமை காண்க: முழவன்ன உருளி என்க.

உருளி—உருள் குறடு; அச்சு முழுமரம் என்றதற் கேற்பப் பார் கோத்து இரு கைச் சட்டத்தையும் கணையத்தினோடு ஒப்பித்தார். "பார் கோத்து" (புறம். 185) என்பதனால் பார் பழுவும் கோக்கப் படுவன இரு கையுமாயின.

மாரிக் குன்றம்—மாரிக்காலத்து மலை; மழை சுரந்தன்ன—மேகத்தைத் தாங்கினாற்போன்ற ஆரை வேய்ந்த அறைவாய்ச் சகடம் — தேர்த்தாளிப்பாய் வேய்ந்த செல்லும் வழியை அறுத்துச் செல்லுதலை யுடைய சகடம் எ-று. அறைவாய்ச் சகடம்—அறுத் தலையுடைய இடத்திற் செல்லற்குரிய பண்டியெனினு மமையும். இனிப் பாறை வழியிற் செல்லற் குரியது எனினுமாம். இது,

"கழியுப்பு முகந்து கன்னாடு மடுக்கும்
ஆரைச் சாகாடு" (புறம். 60)

ஆதல் உணர்க. தேர்த்தாளி என்பது கூந்தற் பனை என்க. இது பூத்தாற் றேரலங்கரித்ததுபோறல் கண்கூடாகக் கண்டது; இதன் ஓலை மிடைந்தார்த்த

பாய் ஆரை என வழங்கப்பட்டது போலும். ஆர்வை என்ற பாடத்திற்கு எருதுண்ணும் வைக்கோல் என்று பொருள் கொள்க. உண்ணும் வைக்கோலை மேலே வேய்ந்து சகடு செல்வது இன்றுங் கண்டது. பாலையினுஞ் சேறலான் எருதுக்கு வை வேண்டினர்.

51–55. வேழங் காவலர்—யானையை வாராமற் காப்பவர். இதனைக் "கதங் காத்தல்" (குறள். 130) போற் கொள்க. குரம்பை—குடில். இஃது அவர் இதன்மேற் கட்டியதென்ப.

கோழி சேக்கும்—கோழிகள் கிடக்கும். கூடுடைப் புதவின் — கூடுகளையுடைய முன் வாயில். முளை யெயிறு—மூங்கில் முளைபோலுங் கொம்பு. யானைக் கொம்பினை எயிறு என்பது புலவர் இட்ட வழக்கு. வட நூலார் தந்தம் என்பதுபோலக் கொள்க

"உரற்கால் யானை" என்பதுபற்றி முழந்தாள் ஏய்க்கும் உரல் என்றார். துளையரைச் சீறுரல் பாதிக்குச் சிறு துளையையுடைய உரல் எ-று. முன் பாதி பெருகத் தோண்டிப் பின் பாதியைத் தூக்குங் கயிறு நுழையும்படிச் சிறுகத் துளைத்திருத்தலால் இங்ஙனங் கூறினர். பாதிக்குச் சிறு துளை கூறியதனல் ஒரு பாதிக்குப் பெரிது தோண்டப்படுதல் குறித்தார். அச் சிறு துளையைக் கல்லிட்டு அடைத்து உபயோகிப்பரென்க.

56—60. காடி வைத்த கலம்—புளிங்காடி வைத்த மிடா. இது கயிற்றுற் பிணித்து விசிக்கப்பட்டது. விசி வீங்கு இன்னியம் ஒப்பதென்க. நாடக மகளிர்

ஆடுதற் கின்றியமையாத முழவுபோலச் சோறுண்ட தற்கு இப்புளிங்காடி இன்றியமையாமை குறித்தார். காடி வைத்த கலன்—முகவணையின் கழுத்தில் வைக் கப்பட்ட மிடா வென்றுங் கொள்வர். மூக்கின் முகவணையி லமர்ந்து மகவுடை மகடூஉ புறந்துரப்ப என்க: மகவுடை மகடூஉ என்றது அவள் எருது கண் மாட்டு அன்புடைமையும் துரத்தலில் விரகுங் குறித்து நின்றது. மகடு தேர்ப் பகடு துரத்தல் வட நாட்டிற்கும் ஒக்கும். கைகேசி தயரதற்குத் தேர் நடாவினுள் என்பர். பகடு புறந் துரத்தல்—பகட்டை முதுகிற் றட்டிச் செலச் செய்தல். கோட்டு இணர்—கொம்பின்கணுள்ள பூங்கொத்துடன் வேம்பின் எடுத்தலையுடைய இலையை நெருங்க வைத்தலாற் றழை விரவின கண்ணியையும் தோளினையும் யாக்கை யினையும் நிரம்பிய வலியினையுமுடைய மாக்கள் என்க. எடுத்தல் — உயர்த்தல் இதனுல் ஏடு—மேன்மை யாயிற்று.

"ஏடுடைய மேலுலகு" (தேவா. 539;2)

என்பது திருப்பாட்டு. நச்சினுர்க்கினியர் ஏட்டிலை மிடைந்த மகடு என மாற்றி யுரைப்பர். வேம்பினிண ருடன் இலை மிடைந்த படலைக்கண்ணி மாக்கட்குக் கூறியது இவ்வுமணராகிய மாக்கள் தமிழ் மூவேந்த ருள்ளும் பாண்டியர் பரிசனம் என்பது தெரிய வேண்டி என்க.

இதனுல் இவ்வமயத்துத் தமிழ்நாட்டுப் பாண்டி யர் தலைமையராக விளங்குதல் குறிக்கொள்ளலாகும். இக்காலத்து வேங்கடநாடுடையரசர் பாண்டியற்குத் திறையிடுவாராயினர் என்பது;

"வேங்கடம் பயந்த வெண்கோட் டியானை
மறப்போர்ப் பாண்டிய ரறத்திற் காக்கும்
கொற்கையம் பெருந்துறை" (27)

என்னும் அகப்பாட்டானும் அதற்குப் பழைய உரைகாரர்,

"வேங்கடம் பயந்த அங்குள்ள அரசர் திறையிட்ட"

என்று உரை கூறியதனானும் உணரலாம்.

"நோன்பகட் டுமணர் ஒழுகையொடு வந்த
மகாஅ ரன்ன மந்தி...... உமட்டியரீன்ற
கிளர்பூட் புதல்வரொடு கிலிகிலி யாடும்
தத்துநீர் வரைப்பிற் கொற்கைக் கோமான்"

எனச் சிறுபாணாற்றின் வருதலான் இவ்வுண்மை யுணர்க. மலையின் மந்தி கடற்றுறையூராகிய கொற்கைக்கு உப்பு ஏற்றும் உமணர் ஒழுகையொடு வருதல் கூறியதனானும் இது துணியப்படும்.

"மந்தி சீக்கு மாவுடை முன்றில்" வேங்கடத்திற்கு இந் நூலுட் கூறுதல் கண்டுகொள்க. கண்ணி சூடினர் உமண் ஆடவரே யாதல்,

"அத்தப் பாதிரித் துய்த்தலைப் புதுவி
யெரியிதழ் மலரியோ டிடைபட விரைஇ
வண்டோட்டு......... வண்டுபடு கண்ணித்
தோல்புதை சிரற்றடிக் கோலுடை யுமணர்"(அகம்.191)

என அகத்தின் வருதலான் அறிக. பரேர் — பருமையான ஏரினையுடைய; எறுழ்த்திணிதோள் — வலியாற் றிணிந்த தோள். மகடூஉத் தழுவற்கு அழகும், அள்ளற்சாகாட் டாழ்ச்சி போக்கத் தள்ளு

தற்குத் திணிதோளும், அங்ஙனம் பல்காற் றள்ளுத வான் முறுக்குண்ட யாக்கையும், காட்டகத்து ஆறலைகள் வரையும் அஞ்சாதெதிர்த்தற்கு முழு வலி யுங் கூறினர். உரையில் 243—4 அடிகளுக்குப் பின் பதிற்றுப் பத்திலின்று (44) மேற்கோள் காட்டப் பட்ட,

61—65. "முழுவலி துஞ்சு நோய்தபு நோன்றொடை
நுண்கொடி யுழிஞை வெல்போ ரறுகை"

என்னும் அடிகளை ஈண்டு முழுவலிக்கு மேற் கோளாக எழுதிக்கொள்க.

'வார்கடற் றெழுகை நோன்சுவற் கொளீஇப்
பகடுதுறை யேற்றத்து மண்விளி வெரீஇ" (அகம்.173)

என்ப. முளைக்குற்றி நழுவாமைக்குத் தக இட்ட சிறிய துளையையுடைய கொடுநுகம். கொடுமை— தன்னுள்ளே உருண்ட வளைவு. "கொடுங்கான் மாடத்து" என இவரே பட்டினப் பாலையுட் கூறுவர்

நெறிபட நிரைத்த—வலம் இடன் பூட்டவேண்டி யன அறிந்து வரிசைப்படுத்தின பெரிய கயிறு தொடுத்த நுகம்.

மருங்கிற் காப்ப—பக்கமியங்கிக் காவா நிற்க; சில்பத உணவின் கொள்ளை—பதத்திற்குச் சிறிதாக இடப்படும் உணவாகிய உப்பின் விலை. பதச் சில் உணவென்க. பதம்—சோறும் கறியு முதலாயின. பெரிய சோற்றிற்கும் கறிகட்குஞ் சிறிதிட்டு இனி தாக்கலாற் சில்லுணவென்றார். சில்லுணவு உப்பு என்றதனாற் பதம் பெரியனவாதல் உணர்த்தினர்.

பதவுணவென்று உப்பினைக் கூறியது.தனித் துண்ப தின்மை கருதி என்க. பதிபோகு நெடுநெறி—பதி போற் போதலான் உண்டாய நெடுவழி; உமணர் சேர்ந்து கழிதலாற் பதிபோகு என்றார்.

'உமணர் சேர்ந்து கழிந்த மருங்கி னகன்றலை" (குறுந். 124)

போகு நெடுநெறி— போதற்குரிய பெரிய வழி என்பதும் ஆம். உலகுடைப் பெருவழி என்று மேற் கூறுதலான் சேய்மையுள்ள நாடுகட்குச் சேறற்குப் பண்டு நெறி யுண்டென்று துணியலாகும். ஈண்டுப் பதிபோகு நெடுநெறி என்றாற்போல அகத்தினும்(17)

"ஊரெழுந் தன்ன வுருகெழு செலவின்"

என வந்தது. பல் எருத்து உமணர் — ஒழுகை யீர்த்தலிற் சோர்ந்திளைத்தவற்றைவிட வேண்டுதலிற் பல எருதுகளைப் பிடித்துக்கொண்டு போம் உமணர் என்றார். இதனுரைக்கண் அடித்துக்கொண்டு போம் என்பதைப் பிடித்துக்கொண்டு போம் என்று திருத்திக் கொள்க. மகடூஉ சகட்டிற் கட்டிய எருது களைப் புறந் துரத்தலால் இவர் மற்றை எருதுகளைப் பிடித்து உடன்போதல் குறித்தார்.

"பகடு பல பரப்பி
யுமணுயிர்த் திறந்த வொழிக லடுப்பின்"

என்பது அகம் (159).

உமணர் கொள்ளை சாற்றிப் போகு நெடுநெறி எல்லிடத்துத் தனிவழிச் செல்வார்க்குக் காவலாக. உமணர் போகு நெடு நெறி கழியுநர்க்கு ஏமமாக என்றது அவர் கல்லென ஊரெழுந்த செலவிற் சேற

லானும் அவர் எருதுகளைத் துறையேற்றத்து உரப்பிப் புரியும் மடிவிடு விளையாலும் தம் வருகை புலப்படுத்தலான் உண்டாகிய அச்சமின்மையைக் குறித்தது.

> "உமணர்
> ஊர்*கண் டன்ன ஆரம் வாங்கி
> யருஞ்சுர மிறந்த வசைவி னேன்முட்
> டிருந்துபகட் டியம்புங் கொடுமணி புரிந்தவர்
> மடிவிடு விளையொடு கடிதெதி ரோடி
> ஓமையம் பெருங்காட்டு வரூஉம் வம்பலர்க்
> கேமஞ் செப்பு மென்றாழ் நீளிடை" (அகம். 191)

என வருதலானுணர்க. இதனால் உமணர் போகு நெடு நெறி ஏமம் ஆகா என்றார்.

இனிக் கழுதையிற் பொதியிட்டு சாத்தாக வழிச் செல்லும் பிற வாணிகராகிய வம்பலரைக் கூறுகின்றார்.

*66—70.* மலைத் தாரமுங் கடற் றாரமுங் கொண்டு தருதலாற் பெற்ற அரிய பொருள்களை வேற்றிடத்துய்த்து உண்பிக்கும் வம்பலர். மலையவும் கடலவுமாய மாண் பயம். மணியும் பொன்னும் சந்தனமும் பிறவும் மலைத் தாரமாம். முத்துஞ் சங்கு முதலியனவும் கடற்றாரமாம். இவை தரும் அரும் பொருள்கள் அவ்வந் நாட்டு உணவாக விளை பொருள்களாம். அரும் பொருள் என்றது மக்கட் கின்றியமையாமைபற்றி என்க. அருத்தும் என்ற வினையானும் அறிக.

---

* ஊர்—பரிவேடம். இஃது உருவுக் குவமை.

"மலையவுங் கடலவு மரும்பயங் கொணர்ந்து
விலைய வாக வேண்டுநர்க் களித்தாங்
குழவுதொழி லுதவும் பழுநில் வாழ்க்கைக்
கிழவன்"

எனச் சிலப்பதிகாரத்து (அழற்படு 83—86) கூறுதலான் இவ் வுண்மை யுணரலாம். இவ் வம்பலர் காலிற்செல்வோரென்க. இவர்க்குக் கண்ணஞ்சாமை யும் இவர் உலகத்து மிடியைத் தங் கையானிக்கலும். வென்றியாகக் கூறுதல் காண்க. (புறப். வெண். மாலை. வாணிக வென்றி)

திருந்து தொடை நோன்ருள் — திருந்திய தொடுத்த வினையின்கண் அசைவில்லா வலிய முயற்சி.

"தொடங்கு வினை தவிரா வசைவில் நோன்ருட்
... ... சிறந்த தாழ்விலுள்ளம்" (அகம். 29)

என வருதலான் இதனை உணர்க. அடி புதை அரணம் — அடியை மூடியுள்ள காப்பு. தொடு தோலாகிய செருப்பினும் வேருகிய அடிமூடு செருப்பு அடியரணம் என்பதும் பாதரக்ஷை என்பதும் ஒக்கும்; காலிற் சேறற் கின்றியமையாதது பற்றிக் கூறினர்.

படம் புக்கு—மெய்ச் சட்டையிற்ரும் புகுந்து எ-று. படம் உடம்பைப் போர்க்க உடம்பே அதனுட் புக வேண்டுதலா னேற்ற வினை கூறினர். அரணம் எய்தி—அரணத்தால் நடந்து என்பதுமாம்.

71—75. ஆறலை கள்வர் பொருத அம்புகளின் வலியைத் தொலைத்த மார்பின் என்க. அவ் வம்புபட்ட புண்ணுந் தீர்ந்த மார்பின் எ-று. மார்பின் கண்விரவின

வரிக்கச்சின்கண் வெண் கைப்பிடியையுடைய ஒள்ளிய வாள் பூணப்பட்டு மலையில் ஊர்ந்தியங்கும் பாப்பு போல் ஒரு புடையிலே அசையா நிற்க. வரையூர் பாம்பை உவமித்தலான் மார்பின் தோளோடு விரவிச் சுற்றிய வரிக் கச்சிற் கோக்கப்பட்டு வாள் தூங்குதல் நினைக்க. அரைக் கச்சன்மைக்கு மார்பின் விரவி வரிக் கச்சின் என்றார். கை—கைப்பிடிக்கு ஆயிற்று. வெண் கை—என்றது வெள்ளிய தந்தத்தாற் செய்யப்படுதலின் வாள் கச்சிலே கோக்கப்பட்டுத் தோளின் ஒரு பக்கத்திலே தூங்க என்பர் உரைகாரர். தோளில் இடப்புறத்து வில்லும் அம்பருத் தூணியும் கூறுமையான் இவ் வம்பலர் வில்லுடையராகார் என்க. இதனுற் றிருந்துதொடை என இவர்க்கு முற்கூறியது திருந்திய அம்பு தொடுத்தலாகாமை நன்கு தெளியலாம். "அரும் பொருளருத்துந் திருந்து தொடை நோன்ருள்" என்புழிக் கொடை யென்பது எழுதினர் பிழைப்பாற்றொடை என மாறிற்ரு என நினைத்தலுமாகும். அற்றம் மறைத்தலினின்று தப்பாமைக்குச் செறிவுடைய உடை வேண்டினுர். சுரிகை செருகப் படுதலாற் சுற்று வீங்குதல் குறித்தார். கடு வில் ஓச்சிய—பாலைக்குக் கருப் பொருளாகிய வில்லின் தொழிலை ஒட்டிய எறுழ்த் தோளையுடைய வம்பலர் என்க. ஓச்சிய—ஓட்டிய; "வண்டோச்சி மருங்கணைதல்" என்பதனுனும், "தாறடுகளிற்றின் வீறுபெற வோச்சி" என்னும் முல்லைப் பாட்டடியானும் உணர்க.

"வில்லுடை வைப்பின் வியன்காட் டியவின்"(அடி. 82)

என மேலே இவரே கூறுவர். இதனுல் இவ் வீற் செய்தி எயினருடையதாதல் உணர்க. விற்செய்தி அந்

நிலக் கருப் பொருளாதலும் உணர்க. கருவில் — கருங்கை என்புழிப் போலக் கொடுமையுடைய வில் எனினுமாம். மேற் பொரு கணை தொலைச்சிய புண் தீர் மார்பு கூறினாற்போல ஈண்டுக் கருவில் ஓச்சிய தோள் என்றார் என்க.

இனி, இவ் வம்பலர் தோளின் கண்ணகன்ற தன்மையும் எறுழுடைமையுங் கண்டு ஆறலை கள்வர் இவரை யாம் கோறலியலாதென்று தம் கருவில்லை எய்யாமல் உயர எடுத்தலைச் செய்தலான் வில்லை உயர எடுத்தற்குக் காரணமான தோள் என்பதும் ஆம். ஊன்றி வளைத்தற்குரிய வில்லை உயர எடுப்பது எய்யாமைப் பொருட்டென்பது தெரிக. ஏற்பது கொள்க. கடம்பினை இடனுக விரும்பிய நெடிய முருகக்கடவுளை ஒத்த மீளிமை—மீளிமை. மீட்கும் வன்மை. ஆறலை கள்வர் கவர்ந்தாலும் மீட்கும் வன்மையைக் குறித்தார். முருகக் கடவுள் தேவர் சிறைமீட்டது நினைக்க. மீளி பண்பாதல், "வெள்ளி விளக்கம்" சிலப்பதிகாரம் அந்தி மாலைச் சிறப்பில் வெள்ளி வெண்மையாதல் போலக் கொள்க.

76—80. உடம்பிடி — வேல். வேற்றடக்கை கூறியதனுல் இவ் வம்பலர் தங்கையில் வில்லுடையாராகாமை காண்க. வம்பலராகிய வழிச் செல்வார்க்கு எறுழ்த் தோளும் உடம்பிடித் தடக்கையும் ஓடாமையுங் கூறியது, அவரிடமுள்ள அரியவும் பெரியவுமாகிய பண்டங்களைக் காத்தற்கும் படை வலியும், மெய் வலியும், உள்ள வலியும் வேண்டி என்க. வம்பலர் வழிப் போவார் என்பது சிலப்பதிகாரத்து,

"வம்பலர் பல்கி வதியும் வளம்பட" (வேட்டுவ வரி)

என்புழி அடியார்க்கு நல்லார் உரைத்ததானுணர்க.

தடவு நிலைப் பலவின் — பெரிய நிலைமையினையுடைய பலா மரத்தின் என்ப. பலவின் தடவுநிலைப் பெரும் பழம் எனினும் பொருந்தும். குடத்தின் நிலைமையையுடைய பெரிய பழம் என்க.

"பலவின் குடமருள் திம்பழம்"

என்பது அகப்பாட்டு. (352). தடவு தடா எனவும் வழங்குதலான் அறிக. தடவு நிலை — வளை தலையுடைய நிலை என்பதுமாம். "முடமுதிர் பலவின்" என வருதலான் அறிக. கழுதையின் முதுகிலிட்ட பொறை ஒத்திருத்தற்குப் பலவின் முழுமுதலிற் கிடக்கும் இப் பெரும் பலாப்பழத்தை உவமை கொண்டார். இவ்வுண்மையை,

மலைபடு கடாத்துள்,

"கார்கோட் பலவின் காய்த்துணர் கடுப்ப
நேர்சீர் சுருக்கிக் காய கலப்பையிர்" (12, 13)

என வருதலான் அறிக.

சிறு சுளைப் பெரும்பழம்—எண்ணிற் சிறிய சுளைகளையுடைய பெரிய பழம் என்க. உருவிற் பெரியன வாகிய சில சுளையுடைமை குறித்தார்.

மிரியற் புணர்ப்பொறை—மிளகின் புணர்த்தலையுடைய பாரம். புணர்த்தல்—இரு புறமும் பாரம்

ஒத்தியைத்தல். பொறை தாங்கலான் வடு ஆழ்ந்த வலிய முதுகினையும் எடுத்து நிறுத்தலுள்ள செவி களையுமுடைய கழுதைச் சாத்து. கழுதைச் சாத்து— கழுதையொடு போம் வாணிகர் திரள்.

81—85. உல்கு உடைப் பெருவழி — சுங்கம் உடைய பெரிய வழி. இக் கழுதைச் சாத்திலுள்ளவரே 'திருந்துவாள் வயவர் ஆதல்' அகப்பாட்டில் (89)

"பொறைமலி கழுதை நெடுநிரை தழீஇய
திருந்துவாள் வயவர்"

என வருதலா னறியலாம்.

பெருவழிக் கவலை — பெரிய வழிகளிலுள்ள கவர்த்த நெறி. அவற்றைக் காக்கும் வில்லுடை வைப்பு. வில்லுடை வைப்பு — விற்படையுடைய ஊர்கள். "சிலையுடைக் கையர் கவலை காப்ப" என்றார் மதுரைக் காஞ்சியினும்.

வியன் காட்டு இயவின் — அகன்ற காட்டு வழி களில். இலவத்துக்கு நீண்ட அரையுடைமை இயல்பு. இலவத்து அலங்கு பசுங்காய் என்க. பகலில் அணிலும் இரவில் கருப்பையும் ஆடாது என்க. கருப்பை — எலி; எலியினும் உயர்ந்ததாகலின் அணிற்கு ஒடுக் கூறினார். உணவரிய பாலை நிலத்துக் குடிலாதலின் இவற்றைத் தடுத்தல் இன்றியமை யாமை குறித்தது. யாற்றின் அறல்போல வரிவரியா யுள்ள வெரிந் எ-று. யாறு வெரிந் ஆகவும் அஃது இரு புறனும் அறுத்துச் செல்லும் அறல் அவ்வெரி நின் இலையாகவுங் கூறினும் பொருந்தும்.

"யாறு தெங்கி லிலேயென ப் பரந்ததன்றே'
[மேரு மந்தர புராணம்]

என்பதனுன் இஃதுணரலாம். வேற்றலை யன்ன .வைந்நுதி யீத்திலே. நெடுந்தகர் —நெடிய மேட்டு நில மென்பர் உரைகாரர். வேல் நுதியீத்திலே வேய்ந்ததனுல் குரம்பையின் நெடுந்தகர் (நெடிய மேடு) எய்ப் பன்றியின் முதுகு போலும் என்று கருதுக. நடு நெடுந்தகர் ஈத்திலே—ஈந்தின் நெடுந்தகரிலே என்க. குரம்பை — குடில். எய் — முள்ளம்பன்றி மகவு ஈன் பிணவு மகவொடு மான்ருேற் பள்ளியின் ஒழிய எயிற்றியர் போகி என்க. உணவீட்டற்குச் செல்லாத வள் ஈன் பிணவுதான் என்றதாம். போகாமைக்குக் காரணம் மகவொடு முடங்கவேண்டுதல் கருதி எ-று. அடியிற் குழைச்சும் நுனியில் உளியுமாகச் செய்த பாரையை இரும்பு தலையாத்த கோலிற் செருகியது குறித்தார். திருந்து கணை – திருந்திய திரட்சி. விழுக் கோலிற் றைத்த அரைவா யுளியின் மிளிர மிண்டி என்க. மிளிர மிண்டி—கிளம்பக் குத்தி. நுண்புல்— எறும்பு தொடுத்து வைத்த நுண்ணிய புல்லரிசி. புல் லரிசி யடக்கியதனுல் உண்டாகிய மகிழ்ச்சி தெரிய நிற்றலால் வெண் பல் எயிற்றியர். எயிற்றியர்—எயின மகளிர். பார்வை — பார்வை மான். பறை தாள் விளவின்——தாள் தேய்ந்த விளாவின். நில உரல்— நிலத்தில் உரலாகக் குழித்தது. காழுடைய குறிய உலக்கை. நிலத்திற் குழித்த உரற்கு உயரமில்லாத குறிய வுலக்கையே ஏற்றதாம். ஒச்சி—குத்தி. நெடுங் கிணற்று வல்லூற் றுவரி—கிணறு நீண்டது. வலிது ஊறுவது; நீரும் உவர்ப்பது என்றது காண்க அதனைத் தோண்டி என்றது—அந் நீருங் கொள்ளு

மிடத்துத் தோண்டி எடுக்கவேண்டுவது குறித்தது. தொல்லைக் குழிசி — பழம்பானை. முரவு வாய் — தலைப்புறம் ஒறுவாய் போன பானை. முரி அடுப்பு கொம்மை முரிந்த அடுப்பு. வாரா தட்ட—கழுநீரை வாராமற் சமைத்த புழுக்கல்.

L. 101. வாடுன்—கருவாடு. வாடாத் தும்பை வயவர்—வாடாத தும்பையென்னும் பெயரினையுடைய வீரர். வாடாத் தும்பை என்றதனால் வாடுந் தும்பை யல்லாத துரோணம் என்பதாம். இவரே, இந் நூலுள் வாடா வள்ளி எனக் கூத்தினைக் கூறுதல் போல இதனையுங் கொள்க. (அடி. 370). துரோணத்தைத் தங்குடிக்கு முதலாகவுடைய வயவர் துரோண வீரர். தும்பைக்குத் துரோணம் என்பது பெயராதல்,

''தும்பையும் பதக்குந் துரோண மாகும்''

என்னும் பிங்கலந்தையிற் காண்க. இக் குடி முதற்கட்டுரோணத்துத்தோற்றமுடைமை துரோணர் வரலாற்று னுணர்க. இங்ஙனங் கொள் ளாது 'அதிரப் பொருவது தும்பையாம்' என்பது பற்றித் தும்பைப் போரினையே ஈண்டுக் கொண்டால் இத் திரையனையே இவ் வடிகள் குறித்தற்கு ஏற்ற அடையாளம் ஒன்றுமில்லாமை நோக்கிக்கொள்க. செவ்வரை நாடன் என்பதனாற் றிரையன் எனத் தெளிவிக்கப் படாமையுங் காண்க. சிறுபாணாற்றில் பேகனை 'ஆவியர் பெருமகன்' என்றாற்போல ஈண்டும் வாடாத் தும்பை வயவர் பெருமகன் என்பதனாற் குடியே குறித்தாரென்று கொள்க. மேற்றொண்டை யோர் மருக என்றதுங் காண்க.

நல்லியக் கோடனை "ஓவியர் பெருமகன்" என அந்நூலுட் கூறுதலும் உணர்க. சென்னியம்—பாணச் சாதியேம். இவரை மண்டைப் பாணர் என்ப. (தொல். பொருள். 91. ந. உரை) தெய்வமடையின்—தெய்வத்திற்கு இட்டு வைத்த பலிபோல. தெய்வம்—அப்பாலைக் குரிய காடு கிழாள். வம்பலர் கைப்பொருள் வவ்வும் களவேர் வாழ்க்கையரும், செவ்வரை நாடன் சென்னியம் எனின் நும்மைத் தெய்வம் போல் வழிபடுதல் கூறிக் காட்டினுன். எறும்பு பன்னுள் முயன்று சேரவிட்ட புல்லுணவையும் தம் பசியால் மீண்டிக் கொள்ளை கொள்ளும் எயிற்றியரும் செவ்வரை நாடன் சென்னியமெனின் உபகாரப் படுதல் கூறியதனுல் கொடுஞ் சுரத்தும் இத்திரையன் செங்கோல் போற்றப்படுதல் குறித்தார். பாலை நிலத்தவர் இயற்கையின் அருளிலர் என்பது எறும்பின் நுண்புல் லடக்குதலாற் குறித்தார்.

L. 105. பைதிர் கடும்பு—பசுமை தீர்ந்த சுற்றம். மானடி பொறித்த — மானடிச் சுவடு பொறிக்கப் பட்ட. மயங்கு அதர் மருங்கின் — மயங்குதற்குக் காரணமான வழிப் பக்கங்களில். மானடி பொறித்த அதரன்றி மக்கள் வழங்கியதல்லாமையால் மயங்கதர் என்ருர். வான் பெய்யாது மடிந்த காலத்து நீரை விரும்பிக் குழித்த அகழ்; அகழ்ந்த பள்ளம் அகழெனப் பட்டது. அப் பள்ளத்தைச் சூழ்ந்துள்ள பயம்பு—மூடு குழி. இது மூட்டுக் குழி என வழங்கும். இம் மூடு குழிகளிற் றம் உடலை ஒளித்து ஓசை ஒடுங்கி.

L. 109. புகழா வாகை—புகழப்படாத அகத்தி. வாகையாயிற் புகழப்படுமென்பது. வாகை புகழப்

படுதல் "கடவுள் வாகை" (66) என்னும் பதிற்றுப் பத்தினையும், அதற்குப் பழைய உரைகாரர் "வெற்றி மடந்தையாகிய கடவுள் வாழும் வாகை" என உரைத்ததனையுங் கொண் டுணர்க. இது வெற்றிப் புகழ்க்கு அடையாளமாகும். இது புகழுடையாள மாதற்கேற்பக் காதணியாக இள மகளிர் பூண்பர். (சாகுந்தலம் 1-ஆம் அங்கம்). அகத்தி உணவிற்கே யாத லுணர்க. இவ்வாறு மூடு குழிகளிற் பன்றிகளை அகப்படுத்தல்,

> "சேணோ னகழ்ந்த மடிவாய்ப் பயம்பின்
> வீழ்முகக் கேழ லட்ட பூசல்" (294-5)

என்னும் மதுரைக் காஞ்சியானும் உணர்க.

III. அரைநாள் வேட்டம் அழுங்கின்—முற்பாதி நாள் வேட்டம் ஒழியின். பகல் நாள் — பின்னரை நாள். பகல்—பாதி. இவரதுரையிற் பிற்றைநாளென் றெழுதப்பட்டது எழுதினர் பிழைப்பு. பகல்— பிற்றையாகாமை உணர்க. அகத்திப்பூ பன்றிக்கொம் பிற்கு நிறத்தொடுபட்ட வடிவுவமை என்க. பகு வாய் — வேட்டங் கவ்வுதற்குப் பிளந்த வாயினை யுடைய ஞமலி: ஓடி யிளைத்தலானும் வாய் பிளத்தலாம்.

L. 112. பைம்புதல்—முயல்கள் ஒளித்திருக்கும் பசிய புதல்கள். எருக்கி—கோலால் அலைத்து. தொகு வாய் வேலி—நெருங்கிய இடத்திட்ட வேலி: தொடர் வலை — பின்னல் வலை. புல் இதழ் — புற இதழ். முயல் போக்கற வளைத்துக் கானவர் கடறு கூட்டுண் ணும் சுரம் எ-று. கானவர்—காட்டகத்து மறவர்.

கடறு — காடு. இளிக் காட்டகத்து மறவர் வாழ குறும்பின் இயல்பு கூறுகின்ருர்.

L. 117. அம்பர்—அப்பால். இம்பர், உம்பர், இப்பால், உப்பால் என்ருற்போல்வ தொரு சொல். ஒன்ருத் தெவ்வர்—தம் அரசனுக்குப் பொருந்தாத பகைவர். பருந்து பட—தசையுண்டற்குப் பருந்துகள் வந்து படிய. ஒச்சி—எறிந்து. எஃகத்தைப் பலகை யொடு நிரைத்து. புலகை—கேடகம். தோற்கிடுகு என்ப.

120—121. முடி நாட் சாபம்—முடிந்த நாணினை யுடைய வில். சாபம்—வடமொழி. கணை துஞ்சு வியனகர்—கணைகள் எய்யுந் தொழிலற்றுச் சார்த்தி வைக்கப்படும் அகன்றவீடுகள்.

123. வரையிற் றேனிருலை யொக்கும் புதை என்க. புதை—அம்புக் கட்டு.

125. வேட்டத்துக் குரிய நாய்களைச் சங்கிலியிற் கட்டிய நகர். நாய்கள் யாத்த நிலையிற் றுன்னுதற் கருமை கூறி அவற்றை அவிழ்த்துவிட்ட நிலையிலுள்ள கொடுமையைக் குறித்தார். பிறவிலங்குகள் கிட்டுதற் கரிய காவலையுடைய நகர் என்பதும் ஆம். வாழ் முள் வேலி—இஃது இடுமுள் வேலியின் வேறு. (154) முள் வேலியாக வளர்ந்து வாழ்வது.

127. கோடு நுகம்—உருண்டு வளைந்த நுகத்தடி; இது கதவிற்கிடும் கணையமரம். "கொடுங்கட் காக்கை" (                              )என்புழிப் போலக் கொடுமை

வளைவிற்கு வந்தது, "கொடுங்கால் மாடம்" என்பதுங் காண்க. யுகம் என்பது வடமொழி; அது நுகம் எனலாயிற்று. யமன் நமன் என வருதல் போலக் கொள்க. புதவு—ஓட்டுக் கதவு. கதவிற் கழு நிறைத்த வாயில் என்க. இது சுட் கதவு என்பது; உரையில் உட்கதவு என்பது எழுதினர் பிழைப்பென்க சுள்ளாணிகளாகக் கழு நிரைத்தல் காண்க. தம்முள் செறிந்த ஓட்டுக் கதவாதல் உணர்க. சுவல் விளை நெல் என்றது பாலையில் நீர் பாய்தற்கில்லாத மேட்டு நிலமாதல் பற்றி என்றுணர்க. வேட்டத்தின் ஞமலி தந்த உடும்பின் வறை. வறை—வறுத்தது. மனவுச் சூல்—அக்குமணி போலும் முட்டைகளையுடைய கருப்பம். சொன்றி வறை கால் யாத்தது—சோறு பொரியலால் மறைக்கப் பட்டது. கால் யாத்தது — மணம் புறம் போகாமற் காற்றிற்கு மறைத்துக் கட்டியதுமாம். மேற்கரப் புடை யடிசில் (476) என வருதல் காண்க. பொரியலால் மறைக்கப்பட்டது என்பதற்குப் பொரியல் காரணமாக மூடியது என்றும் பொருள் கொள்ளலாம். யானையும் அரவும் இடியேறும் யாரும் அஞ்சத் தக்கன என்பது கருத்து. அவற்றிற்கும் ஞன்மகள் மாரு மறம் — சூற்கொண்ட மூதின் மகள் அஞ்சி மீளாத வீரம்.

யானை பெரிதாய்க் கொல்வது, அரவு சிறிதாய்க் கொல்வது. இவையிரண்டு நிலத்திலுள்ள ஊறுகள். இடி வானத்தினின்று வீழ்வது. இதனுல் இம் மறக் குடிக் காளையர் கருத்தொட்டே வீரத்திற் பயிறல் குறித்தார். வீரம் தாயர் தொட்டு வருவது என்று இவர் கருதுதல் காண்க. புலிப்போத்து —

புலியில் ஆண். வலியால் அடித்துண்டலின் உவமை யாயிற்று. புல்லென்ற தாடி (விசை) கூறியது மிக இளையோன் என்பது பற்றி.

'இருங்கவி வில்லாப் பெரும் புன்குடிக்
கடுங்கண் மறவர்' (அகம் 297)

வாட்குடி—வாளோடு முற்றோன்றி மூத்த குடி என்பது புறப்பொருள் வெண்பா மாலை (கரந்தை.14) செல்நாய்—தன்னையே தொடர்ந்து செல்லும் நாய் என்பதுமாம். நாயன்ன சுற்றம் என்பதும் பொருந் தும். நாயகர்க்கு நாய்கள்போ னட்பிற் பிறழாது, "கூஉய்க் குழா அமுடன் கொட்கு, மாய்படை" என் பது பேராசிரியர் காட்டிய மேற்கோள். (தொல். உவம, சூத். 37). கேளா மன்னர் — தன் மன்னன் சொற்கேளா வேந்தர் என்பதும் ஆம், கடிபுலம்— தான் வாராதபடி அம் மன்னர் கடிந்த நிலம். நாள்— விடியல். "நாளிரை பெறாஉம்" என்ப. ஆ தந்து— ஆனிவங்களைக் கொணர்ந்து. ஆ உதவும் பாலினும் இவற்குக் கள்ளே இனிப்பது என்பது தோன்ற ஆ தந்து நறவு விலைக்குப் போக்கி என்றார். மெய் யறியாமை செய்தற்குப் பலவகைக் கள் பருகுதல் இயல்பு. மதவிடை—வலியுடைய ஆட்டுக் கிடாய்; பக்கத்து முல்லை நிலத்துக் கொண்டதாம். சில நவில் எறுழ்த் தோள் என்றதனுல் இடத் தோளாயிற்று. வலன் வளையூஉ என்றதனுலும் அஃது அறியக் கிடப்பது. இனிய உணவும் நேய விளையாடலும் கூறுதல் காண்க. தூங்கா இருக்கை என்று அசையாத குடியிருப்புக் கூறுதல் பாலை நிலத்திற்குப் பொருந்தா

தென்று கருதி உரைகாரர் தூங்கா முரன் இருக்கை என்றியைத்துப் பொருள் கொண்டது காண்க.

ஊரிலே தென்னு வூறில் வாழ்க்கை (அகம் 301)

என வருதல் காண்க. நீரூறு மிடங்தோறும் பெயர்ந்து வதிதல் பாலை நிலத்தவ ரியல்பு.

இனி முல்லை நிலங் கூறுகின்றார். மறிய குறுங்கால். மறி—குட்டிகள். அவை நின்று கறித்தற்குத் தழை கள் கட்டிய நெடிய வல்லாத குறிய தூண்கள். செறி கழிக் கதவு—கழி செறித்த கதவு. சாம்பின் அதவோல்—சேக்கையின் மேற்றோலில் உள்ளவன். சேக்கை உறுத்தாமைக்கு, தோலிட்டவன் என்றார். துஞ்சும் காப்பின்—தங்குங் காவலையுடைய முன்றில் என்க. துஞ்சுதல் வேறு முயற்சியின்றித் தங்குதற் காதல்.

"சிறுகண் யாக்கை யிருங்கழித் துவலை யொலியிற் றுஞ்சும்

என்புழிப் பழைய வுரைகாரர் கூறியது கொண் டுணர்க. ஈண்டுத் துஞ்சுதலைத் 'திருத்துஞ்சுந் திண் காப்பின், என்னும் பட்டினப் பாலையுட் போலக் கொள்க. துயில் கொள்ளுங் காவல் என்றால் துயில் கொள்ளுதல் காவற்குப் பொருந்தாதென்க. "புலியத ளிதணத்துச் சிறுதினை வியன்புனங் காப்பின்" என வருதல் (நற்றிணை 351) காண்க நெடுந்தாம்பு— ஆட்டுக் கிடாய்களையுடைய நெடிய தாம்புகளைக் குறுந் தறியிற் றொடுத்த முன்றில். கிடாய்களைத் தாம்பிற் கட்டித் துருவையையும் வெள்ளாட்டையும் இடு முள் வேலியினுள்ளே கிடக்கவிட்டிருப்பது

குறித்தார். கொடுமுகத் துருவை—வளைவாய முக னுடைய செம்மறியாடு. வெள்யாட்டு முகன் வளையாது நேராதல் நோக்குக. வீழ்முகக் கேழல் (மதுரைக் காஞ்சி 295) எனப் பன்றிக்கு முகன் வேறு கூறுதல் காண்க. எருப்படு வரைப்பின்—விளைநிலத்திற்கு எரு மிகுகின்ற ஊரிடத்து. விடியல் புள் எழ மத்தம் புலிக்குரல் ஒலிப்ப வாங்கி என்க.

*157—8.* குடைக் காளானுடைய வெள்ளிய மொட்டினைத் தயிர் ஆடை யுடைத்தாதற்கு உவமை செய்தல் காண்க. நுரை தெரிந்து — தயிரைக் கலக்கி நுரையுண்டாதலைத் தெரிந்துகொண்டு; நுரை வெண்ணெயெனினு மமையும். "நுரை தெரி மத்தம் என்பது (அகம் 101). புகர் வாய்க் குழிசி—தயிர்ப் புள்ளியினையுடைய வாயையுடைய பானை. தோய்த்த பானையை மாற்றியதென்னுமைக்குப் புகர்வாய்க் குழிசி என்றார். பூஞ்சுமடு—பூப்போல் மெல்லிய சுமடு. பூவாற் செய்த சுமடு என்பர் உரைகாரர். நாள் மோர் மாறும்—காலையில் மோரைப் பனங்கட்கு மாறும் ஆய் மகள். ஆய்ச் சாதியில் ஆண் மக்கள் ஆன் எருமை யாடு முதலியவற்றை ஓம்புவர் என்றும் பெண் மக்கள் அவற்றின் பயனைக் கொண்டு விலைக்கு மாறிக் கிளையருத்துவர் என்றும் பகுத்தது காண்க. நெய் விலைக்குப் பசுங்கட்டிப் பொன்னைக் கொள்ளாது எருமையையும் நல்லாவையும் அவற்றிற் கருக் கொண்ட நாகினையும் பெறுங்குடி எ-று. தானே பல்காத பொன்னின் இழிவும் பலவாகப் பல்கிப் பயன் படும் எருமை நாகு ஆன் இவற்றின் உயர்பும் அறிந்து செய்வது காட்டினர். விடியற் போகி நாள் மோர்

மாறும் என்றதனால் நாள் மோர் அற்றைநாள் மோர் என்பது பொருந்தும். பழைய மோரில்லை எ-று. பண்டத்தின் உயர்புக்கு ஒப்பப் பண்டம் விற்பாரும் விழி கவர நிற்பது நன்றென்று காதுந் தோளும் கூந்தலும் மேனியும் சிறத்தல் கூறினர். ஈண்டுக் குழை தாளுருவி என்றார் உரைகாரர். நெடு நல் வாடையுள் குழை மகரக்குழையென்றும் வாயுறை தாளுருவி என்றும் கூறினர். கட்டிப் பசும்பொன், அக்காலத்துக் காசு கட்டியாயிருந்தது போலும். மடிவாய்— சீழ்க் கைக்கு மடித்த வாய். நரி முதலியவற்றைத் துரத்தற்கு வீளை விடுவது வழக்கு;

> "இடையன், மடிவிடு வீளை கடிதுசென் றிசைப்பத்
> தெறுநரி பார்க்குங் குறுநரி வெரீஇ
> முள்ளுடைக் குறுந்தா றிரியப் போகும்"

என்பது (அகம். 274). ஞெண்டின் பார்ப்பும் உண்ணப்படுவதாதலின் தினைக்கு உவமித்தார். தினைமூரல்—தினைச்சோறு. புல்லினங்களைக் காட்டின் மேய்த்துத் திரிதலால் தொடு தோல் மரீஇய என்றார். தொடுதோல்—செருப்பு. விழுத்தண்டு— சிறந்த தடி. 'தண்டுகா லூன்றிய தனிநிலை யிடையன்' என்பர். (அகம். 274). உறிக்கா ஊர்ந்த—உறியையுடைய கா மேலேறி யிருந்ததனால் ஊர்ந்த என்றார். சுவல்— தோள்தட்டு. வேம்பால்—விரும்பும் பால். உரைத்த ஓரி—தடவிய மயிர். ஒன்று அமர் உடுக்கை—விரும்பத் தக்க ஒருடையினையுடைய. கூழார் இடையன்— உணவு நிறைந்த இடையன்; உடுக்கை ஒன்றுதலால் உடம்பிற்கு ஓர் குறையில்லை என்றும் உணவே நிறைய வேண்டுவதென்றும் குறித்தவாறும். கூழுடை

கல்லில் (அடி. 327) என்பது காண்க. ஒற்றைத் துயி லுடன் உண்ணலாகாதென்பது; கல்லாத இடையன் என அமையும். கன்றமர் நிரை—கன்றுகளை விரும்பிய பசு நிரையுடன். உடற்கு வேண்டியது கூறி உயிர் மகிழ்தற்குரியதென்று குழலும் யாழுங் கூறுகின்றார். ஞெலிகோல்—கடையப்படுங்கோல். ஞெகிழி—கடை யுங் கோல். ஞெகிழி தொட்ட—கடை கொள்ளி துளைத்தலாற் கரியவாகிய துளைகளையுடைய குழலின். இன்றீம்பாலை — இனிய தீவிய பாலை என்னும் பண்ணைப் பலகால் ஒலித்து வெறுக்கின். வெறுத்தல், பண்ணினிமைக் குறையான் அன்று, வாயான் நெடும் போது முயன்றதனால் உண்டாகிய வருத்தத்தால் என்றுணர்க. வெறுக்கிற் கையால் இசைப்பது கொள் வன் என்கின்றார். குமிழ்ங்கோடு குழல் (உட்டுளை) உடையது. அதைத் தண்டாக வளைத்து மரற்புரியை (கயிற்றை) நரம்பாகத் தொடுத்த வில்யாழ் எ-று. இதனால் யாழ் வளைவா யிருப்பதே கருதினார், "கிளை புரி வளையாழ்" என்பர் கம்பநாடர். "யாழ்கோடு" என்றார் திருவள்ளுவனாரும். இவ்வாறு வளைத்த தண்டினையுடைய யாழ் வடிவம் குழல் வடிவத்தோடு சம்பா (Champa) நாட்டிற் கிடைத்த சித்திர வடிவு களிற் காணப்படுவது. இந் நாட்டுச் சித்திர வடிவங் களில் இன்னுங் காணப்படவில்லை. ஈண்டு வில்யாழ் என்றதே இதன் வளைந்த தன்மை யுணர்த்தும். பிரம யாழ் நாரதவீணை என்பவற்றிற்கெல்லாம் முந்தியதாய் மக்கள் இவ்வுலகில் முதற்கணுண்டாக்கிய இசைக் கருவிகள் இவையேயாகும். வண்டுகளாற் றுளைக்கப் பட்ட மூங்கிற் றுளைகளிற் காற்றுப் புக்குப் புறப்படு தலா னுண்டாகிய இன்னோசையை அறிந்த மக்கள்

தாமும் அங்ஙனம் அதன்கட் டுளையமைத்து ஊதத் தலைப்பட்டனராவர். இதனை,

'ஆடமைக் குயின்ற வவிர்துளை மருங்கின்
கோடை. யவ்வளி குழலிசையாக

என வரும் அகப்பாட்டா னுணர்க. 'யாழ் வில்லின் நாணோசையைக் கண்டு அவ்வாறே ஓரிசைக் கருவியைப் படைத்துக் கொண்டனர் என்றுணர்க. வடமொழியில் ஜ்யா என்பது வில் நாணுக்குப் பெயராகும். அதுவே எழுத்து மாற்றத்தால் யாஜ் எனவாகிப் பின் யாழ் என மரீஇயிற்றென நினையலாம். யாழ் மறையை நரம்பின் மறை (தொல்.நூன்மரபு.33) எனக் கூறுதலான் அறிக. நரம்பு ஜ்யா எனப்படும். உள்ளே துளையுடைய தண்டினையாழிற்கு வேண்டியது மூங்கில் வில்லினின்று தெரிந்துகொண்டதாம். இது பற்றியே ஈண்டும் புழலுடைய குமிழங் கொம்பைக் கொண்டனன் என்று கூறினரென்க. ஈண்டுப் பறை கூருது யாழ் கூறினர். பல்காற் பறவை---அறுகால் வண்டு. பொங்கர் வண்டின் நல்யாழ் செய்ய "(பெருங்கதை ) யாழ் வண்டின் கொளைக்கேற்ப" (பொருநாறு. 211) என வருதலால் வண்டு கேட்கும் செவியுடையது என்றூர். வண்டிற்குச் செவிப் புலனுண்மை "தாதுண் பறவை பேதுற லஞ்சி, மணிநா யாத்த மாண்வினைத் தேரன்" என வரும் அகப்பாட்டானுணர்க.

184. புல்லார் வியன் புலம்' என்றூர் புல்லினமேய்தற்கினிய நிலமென்பது தெரிய.

184—85. எழுகா டோங்குவரு—மாடு மேயாமற் றொழுவிலடைத்துப் போற்றுதலான் என்பது குறிப்பு.

விடத்தேர் தொடரி முதலிய முள்ளுடையன வேலிக் காவல்.

*186.* இதன் உரைக்கண் "பிடித்திரள் நின்றாற் போன்ற வரகு முதலியன நிற்கும் குதிர்களையுடைய முன்றிலினையும்" என்புழி நிற்குங் குதிர் என்பதை நிறைக்குங் குதிர் என்று திருத்திக்கொள்க. நின்றாற் போன்ற குதிர் என்றியைதல் காண்க. நின்றாற்போ விற்குங் குதிர் என்றால் வரகு முதலியன என்பதற்கு வினையின்றாதல் நோக்கிக்கொள்க. வரகு முதலியன நிற்கத்தக்கன வல்லாமையும் உணர்க.

**187.** திரிமரம்—மரத்தாலாகிய திரிகை. வரகு விளைந்து குதிர் நிறைக்கப்பட்டதனாற் சகடத்தின் உருளையும் கலப்பையும் சார்த்திய கொட்டில் என்றார். புகை சூழ்தல்—வரகரிசியை அடுதலானுண்டாயது. புகைபட்ட இடங் தேய்ந்த கொட்டில் என்க. கருவை—கரிய வைக்கோல். வரகினது.

**197.** குடியிருப்பு நிறைந்த வல்சிக்குச் செஞ்சா லுழவு காரணமாகக் கொள்க.

*198.* நடை—உழவு நடை. உழவிற்கு ஓட்டம் பொருந்தாது. ஒத்துழைத்தலிற் பயின்ற பெரிய எருதுகள் எனினு மமையும். பிடிவாயைக் கலப்பைக் கும் உடும்பு முகத்தைக் கொழுவிற்கும் உவமித்தது காண்க.

*201.* தொடுப்பெறிந்து உழுத துடவை என்றும் துளர் படு துடவை என்றுங் கொள்க. தொடுப்பு—

தொடுத்து வளைய வருதல். துளர்—களைக்கொட்டு. துளர்தல்—களைக்கொட்டாற் களைதல்.

"மரங்கொல் கானவன் புனந்துளர்ந் துவித்திய"

என்பது குறுந்தொகை. (214)

202. அரிபுகு பொழுது—கதிரில் அரிசி புக்க பொழுதில் என்பது பொருந்தும்,

203. குறுங்காற் கறையணற் குறும்பூழ்—இவ்வாறே ஒவ்வொரு பறவையின் உறுப்புக்களின் நிறம் வடிவு நன்கு தெரிய உரைப்பதே தமிழாசிரியர் வழக்கு. "பைங்கால் வெண் குருகு" பொறிவரிப் புறவின் செங்காற் சேவல்" (அகம். 271) என்பன போல வருமிடங்களில் நோக்கிக்கொள்க. வன்புலம்—குறிஞ்சியும் முல்லையும், மென்புலம் மருதமும் நெய்தலும் என்பர் புறப்பாட்டுரைகாரர். (42) "மென் புலவைப் பினுடு கிழவோனே" (ஐங்குறுநூறு. 407) என முல்லை நிலத் தலைவனைக் கூறுதல் காண்க. காரேறு—வலியுடைய எருதுகள். கருமை—வலிமை—கரிய ஏறு என்று எருமைக் கடாவாகக் கருதின் "பைஞ்சாய் கொன்ற மண்படு மருப்பின்" என்பதியையாமை காண்க. பசிய கோரையைக் குத்தியெடுக்கும் கொம்புடையன அவையாகா என்க. எருதை வருத்தாத உழாஅ நுண் தொளி கூறியது இப் பாட்டுடைத் தலைவன் எருத்துக் கொடியுடையனுதல் பற்றி யென்று உய்த்துணரத் தகும். களைஞர்—களை களையும் பெண்டிர். கருவலி வினைஞர் — வலிய கையாற் றொழில் செய்வார். ஆண் மக்கள் காதலஞ் சிறார் அவலெறி உலக்கைப்பாடு விறத்தலால் இவ்

வோசை கூகையொலி போறலிற் கிள்ளைகள் படு பகையாக வெரூஉமென்க. பாம்புறை மருது என்றது களத்திலுள்ள பொலி நெல்லை யுண்ண வரும் எலிகளை யுண்ணப் பாம்பு உறையுமென்பதுபற்றி.

235. பலி பெறு வியன்களம்—இரவலர் பிச்சை பெறுதற்குரிய அகன்ற களம். பலி—பிச்சை. களப் பிச்சை என்பது வழக்கு. சிலம்பி வாய்நூல் வலந்த மருங்கின் என்றதனால் விலங்கும் மக்களுந் தொட்டறியாமை குறித்தார். களவில்லாத செல்வ நிறைவு காட்டியவாறு. பகடு ஊர்—கடாவூர்ந்து. இதனுரையில் "ஏர்கள் கடாவிட்டு" என்றிருப்பதைப் போர்கள் கடாவிட்டு எனத் திருத்திக்கொள்க. துகள்தப—புழுதி போக. குடகாற் றெறிந்த குப்பை—கோடைக் காற்றால் வீசப்பட்ட பொலி. கோடை கூறியது பைதறுதற்கு (ஈரமுலர்தற்கு) என்க. செம்பொன்மலை என்றதனாற் பெருக்கத்துடன் செந்நெல்லாதல் குறித்தார். பொன்மலையிற் சிறப்பத் தோன்றும் என்றது பொன்மலை யுண்டற் குதவாமை பற்றி. தவராமைக்குக் காரணம் தண்பணை தழூவுதலான் என்று கருதியதாம்.

240—44. பகட்டா ஈன்ற கன்றுகள் — பகட்டோடு கூடிய பசுக்கள் ஈன்ற நல்ல கன்றுகள்; ஈன்றற்குப் பகடுங் காரணமாதலிற் கூறினார். "நல்லானொடு பகடோம்பியும்" என்றார் (பட்டினப். 201). பகடு எருமை யென்பர் உரைகாரர். அல்குல் — மனைப் பக்கம். உரைகாரர் மேற்கோளாகக் காட்டிய,

முழுவலி துஞ்சு நோய்தபு நோன்றொடை
நுண்கொடி யுழிஞை வெல்போ ரறுகை

என்ருர் பிறரும் என்பதை 61-ஆம் அடியுரைக்கு மேற்கோளாக எழுதிக்கொள்க. ஈண்டைக்கு எவ்வாற்ருனும் இயைபின்மை நோக்கித் துணிக. ஆண்டு முழு வலிக்கு மேற்கோள் இஃதென்க. குதிர்களின் மார்பையே ஏணி எய்தாது என்று அதன் தலையினுயரங் குறித்தார். இடையிடையில் வைக்கோலிட்டுப் பல நெல்லுஞ் சொரிந்ததனுல் அடுக்கிய என்ருர். மூன்ரும் ஆண்டு நெல் இரண்டாம் ஆண்டு நெல் பலவும் உண்மையாற் பழம் பல்லுணவென்ருர். மார்பு, அல்குல், குமரி என்பன சாடு. வருவாய் மிகுதியால் தன் வளந் துய்க்கப்படாது ஆண்டுகள் கழிதலாற் குமரி மூத்த கூடு என்ருர். கூடு—நெற்கூடு.

மோட் டெருமை முழுக் குழவி
கூட்டு நிழற் றுயில் வதியும்

என்ருரிவர். (பட்டினப் பாலை. 14—15). தச்சச் சிருர் நச்சப் புனைந்த— தச்சப் பிள்ளைகள் தமக்குரிய தச்சுத் தொழிலை நச்சுதலாற் புனைந்த எ-று. நற்றேர் என்றதனுலே விரும்பத்தக்கதாதல் காண்க. அவர் தொழில் விருப்பந்தான் இங்ஙனம் நன்று செய்தற் காயது என்பது கருத்து. ஊரா நற்றேர் — ஏருமல் ஈர்த் தின்புறுதற்குக் காரணமாகிய நல்ல சிறுதேர் உருட்டிய புதல்வர்— பின்னின்று தள்ளி நடை கற்றலால் உருட்டிய என்ருர். தளர்நடை வருத்தம்— உருட்டி நடை தளர்தலான் உண்டாய இளைப்பு. புதல்வர் தேருருட்டி வெளியிற் றிரிந்த காலத்துப் பால் சுரத்தலான் அலர்முலை என்ருர். செவிலி பாலூட்டுதல் கூறுதலான் நற்ருயின் செல்வநிலை குறித்தார். குழவியைத் தழீஇ ஒரு மனையாட்டி

கிடக்கு நிலையே இல்லிற்கழகு என்று இவர் கருதுதல் காண்க. தொல்பசி—பிறந்த நாளிலே உண்டாகிய பழம்பசி. பசி யறியாமையாற் றுளங்கா இருக்கை கூறினர்: பசி யறியாமைக்குமல்லல் எதுவாகக் கூறினர். மடியின்—நடத்தல் வினையின்றித் தங்கின். மடியா வினைஞர்—வினைக்கு மடியாதவர். மனை வாழ் அளகின் வாட்டு—மனையில் வாழ்ந்த கோழிப் பெடையின் பொறியல். அளகு கூறியது கரு முட்டையும் பொறித்தூட்டுவர் என்றற்கு.

257: மழைக்கு விளையாடுதல் கூறுவது தன் பெயலாற் றுஞேர் பயன் கொள்ளாமையான், மழை விளையாடுதலே வளர்தற்குக் காரணம். எ-று. அடுக்கம்—மலைத்தொடர். கட்டி காய்ச்சுங் கொட்டிலில் அக் கட்டியை வேண்டாது தாகந் தீரக் கரும்பின் இனிய திஞ்சாறும் மிசையின் என்க. விசயம் — சருக்கரை. விசயம் அடுதல் என்பதைச் சோறடுதல் போலக் கொள்க. "விசயங் கொழித்த பூழி" என்பது மலைபடு கடாம் (444). குறியிறைக் குரம்பை—குறிய இறப்பினையுடைய குடில். வெண்கோடு—தோலுரித்த வெண் கொம்பு. இது நெய்தனிலத்திற்குரிய ஞாழல் மரத்தினது; புன்னையுங் கொள்ளலாம். வஞ்சியுங் காஞ்சியுங் கூறுவர் உரைகாரர். வேழம்—பேய்க்கரும்பு.

L. 268. இளையரும் முதியரும் கிளையுடன் கூறியது எல்லோரும் மீன் பிடிப்பர் என்பதுபற்றி. கயலுக்கும் இறவுக்கும் பகழியுஞ் சிலையும் உவமையாய் வருதல் காண்க.

271—2. கடல்சேர்ந்த கானற் குட்டமாதலாற் கோடை நீடினும் வற்ருது தோளளவிற்ருகும் எ-று; குளத்த கோடு காத்திருத்தல்—ஊர் சேர்ந்தல்லது தனியே ஒருவர் மீன் பிடியாமைப் பொருட்டென்க.

பு. 274. கொடுமுடி வலைஞர் — கொடிய முடிகளையுடைய வலையால் மீன் பிடிப்பார் என்ருர் மதுரைக் காஞ்சியுரையில். (அடி. 256). அதுவே ஈண்டைக்கு மேற்கும். அவையா அரிசி—தவிடு வரக் குற்ருத அரிசி. அங்களித்துழவை — அழகிய களிக் கூழ். துழவியடுதலாற் றுழவை கூழாயிற்று. நெல்லடை என்ற பாடமே சிறந்தது. கூழை நெல் முளை யிடித்ததனேடு கலந்து. மலர் வாய்ப் பிழா—பரந்த விளிம்பினையுடைய தட்டுப்பிழா. இருமுறை எல்லையும் இரவுங் கழிப்பி என்க. பகலிரு முறையும் இரவிரு முறையுங் கழிப்பி எ-று. பகலையடுத்து இரவும் இரவை யடுத்துப் பகலும் வருதலால் பகலிரு முறையும், இரவிரு முறையுங் கூறினுர்; இங்ஙனங் கொள்ளாது எல்லையும் இரவும் இரு என்று நிற்பது தமிழ் நெறியன்மை யுணர்க.

279. தேம்படக் கழிப்பி — இனிமையுண்டாக இவ்வாறு நாளைப் போக்கி. அடுகள்ளின் வெம்மை பொறுத்தற்கு வல்வாய்ச் சாடி வேண்டினர். வெந்நீர் நறும்பிழி என்பது காண்க. நாட்செலக் கழித்தலால் வழைச்சற விளைந்த என்ருர். வழைச்சு — இளங் கள் நாற்றம்.

"இளங்கட் கமழு நெய்தலஞ் செறுவின்"

என்பது அகப்பாட்டு பிழி என்றார் நெல்முளை யிடித்திட்டதனாற் கசடு போகப் பிழிந் தெடுக் கப்படுதல் பற்றி.

L. 281. விரலலை அரியல் என்றார் விரலானே அலைத்து நெய்யரியால் வடிகட்டுதலால். அரியலாகிய நறும்பிழி. தண் மீன் சூட்டொடு—ஈர மீனைச் சுட்டத னோடு காய்ந்த வற்றன்மீனன்மைக்குத் தண்மீன் என்றார். இளைத்த அளவில் உணவாகத் தண்மீன் சூட்டையும், குடி நீராக நறும் பிழியையும் பெறுகுவிர் என்றதாம். சேப்பிற்றளர்தலும் பெறுகுவிர் என்றதைத் தளர்ந்து சேத்தலும் பெறுகுவிர் என்ற தாகக் கொள்க.

L. 283. பைந்தோல்—செவ்வித்தோல். "கொல் லேற்றுப் பைந்தோல்" (மதுரைக் காஞ்சி. 732) என்புழிப் போலக் கொள்ளலாம்.

L. 284—7 கோள்வல் பாண்மகன்—கொள்ளு தல் வல்ல பாணச் சாதி மகன். "மீன்சீவும் பாண் சேரி" என்பது மதுரைக்காஞ்சி (269). தூண்டில் நாண் நடுங்குதல் தெரிந்து உடனே ஈர்க்கவேண்டு தலாற் கோள்வல் என்றார். தலைவலித்தியாத்த நெடுங் கழை—தலையை வளைத்துக் கட்டிய நெடிய மூங்கிற் கோல்; நுனியிலுள்ள தூண்டில் நடுங்கிய அளவில் நாணை மட்டுங் கொள்ளப்பண்ணி வளைந்த வாயினை யுடைய தூண்டில் இரும்பின் மடித்ததலை இரையில் லாது தவிக்கும் வண்ணம் அதன்கட் பொதிந்த இரையைக் கௌவிப்போன பிளந்த வாயினையுடைய வாளைமீன் எனக் கிடந்தபடியே பொருள் கொள்க.

கோள்வல் பாண் மகன் மீன் கொள்ளாது நாண் மட்டுங் கொள்ளப் பண்ணி வாளை இரை கௌவி யகப்படாது போனது குறித்து நிலப் பண்பு புலப் படுத்தார். "கலிங்க மெள்ளறு சிறப்பின் வெள்ளரைக் கொளீஇ" (மலைபடு 562) என்புழிப் போலவும், "இரும்புலிப் பகுவாயேற்றை, வெண்கோடு செம்மறுக் கொளீஇ" (குறுந் 343) என்புழிப் போல வும் ஈண்டும் கொளீஇ என்பது கொள்வித்து என் னும் பொருளில் வந்தது. கோள் வல் பாண்மகன் தூண்டில் நடுங்கிய அளவில் நாண் பட்டுங் கொள்ளப் பண்ணிப் புலம்ப, இரை கதுவிய வாளை என்க.

L. 288—296. வாளை தூண்டிலையுடைய கோலென்று நினைத்துப் பிரம்பின் நடுங்கு நிழல் வெரூஉம் கயம் என்க. திப்பட மலர்ந்த கடவுள் ஒண்பூ — தாமரை. "எரிய கைந்தன்ன தாமரை" என்பது அகம் ( 106 ); "கடவுட்கயத் தமன்ற சுடரிதழ்த் தாமரை" என்பது மதுரைக் காஞ்சி (710) திருமகள் உறைதலாற் கடவுள் ஒண்பூ என்ருர். "தாமரை உறங்குஞ் செய்யாள்" என்ருர் கம்பநாடர். இதனைக் "கடவுள் வாகை" என்னும் பதிற்றுப்பத்து (66)ப் போலக் கொள்க. ஆண்டு "வெற்றி மடந்தை யாகிய கடவுள் வாழும் வாகை" எனப் பழைய உரைகாரர் கூறியது காண்க. அந்தணர் சூடும் பூவாதலால் அதனை அடைதலைப் பரிகரித்து என்ருர். இங்கு அந்தணரகத்துப் புகவேண்டுதலால் அவரைப் போற் சூடாமை குறித்தாரென்பதும் ஒன்று. "ஆடு வண்டிமிரா அழலவிர் தாமரை" நிரையனுற் சூட்டப் பெறுவா யாதலிற் பரிகரித்து என்பதும் ஆம்: இஃதும் ஓர் நயம்.

291—2. உறை கான் மாறிய வானத்துக் குறைவில் என்க. இந்திர வில்லைக் குறைவில் என்றார். நாண் பிணிக்காமலே வளைந்து தோற்றுவது நோக்கி. எசுர்வேதத் தாருண முதற் ப்ரச்நத்துள்ள ஐந்தாம் அநுவாகமுதற் பஞ்சாதியில் இந்திர வில் உண்டான வரலாறு கூறியவிடத்து, அது முதலில் உருத்திரன் வில்லென்றும், உருத்திரன் அவ் வில்லை வளைத்துத் தரையிலூன்றி நின்று அக்கினியும் இந்திரனும் பவமானனும் (வாயுவும்) தன்னை எதிர்க்க வல்லரில்லை என்று நெடு மொழி கூறியதாக கேட்டு இந்திரன் பொருது வம்ரி (கரையான்) ஆகி அவ் வில்லை அடியறுக்க, அது கிளம்பி அவ் வுருத்திரன் தலையோடு வானத்துப்போய் நின்றதென்றும், பின்னர் தேப்ரவர்க்கியம் என்னும் வேள்வி செய்து உருத்திரனைத் தலையுடையனாக்கினர் என்றும் கூறும். இதனால் இவ் வில் நாணற்றுக் குறைவில்லாக வழங்கப்பட்டதென்றுணரலாம். இது வேதகதையாதலான் அதனையறிந்த அந்தணராகிய உருத்திரங் கண்ணனார் இவ் வரலாறு கருதி இங்ஙனம் ஆண்டனர் என்பது பொருந்தும். ஓங்குயர் நனந்தலை அகலிரு வானத்து—மிகவும் உயர்ந்து பரந்தவெளியிடத்தால் அகன்ற பெரியவிசும்பிடத்து. 'ஓங்குயர் வானத்து' ஓங்குயர் மலையத்து.(காடுகாண். 105) என்னும் சிலப்பதிகாரம் போல வந்தது. நனந்தலை வானம் என்றதனை "அங்கண் விசும்பின்" எனவும் (அகம் 208) 'அகல்வாய் வானம்' (அகம்.365) எனவும் வருமிடங்களிற் போலக் கொள்க. "ஞாயிறு தெறூஉ மாக நனந்தலை" (மலைபடு. 272) என மலைபடு கடாத்தும் வருதல் காண்க. ஆண்டும் இவ்வுரைகாரர் நனந்தலையைப் பிரித்துக் கூட்டுவர். குறைவில்

ஏய்ப்ப முரட்பூ மலிந்த பொய்கை என்க. முரட்பூ— நிறத்தால் முரண்பட்ட மலர்கள் "பூமுரண் கிடக்கை" என இவரே பட்டினப் பாலையுட் கூறினர்.

'தாமரை குவளை கழுநீ ராம்பற்
பூமிசைப் பரந்து பொறிவண் டார்ப்ப
இந்திர தனுவென விலங்ககழ்"

என்ருர் மணிமேகலையிலும். (28, 20—22)

L. 296. பெருநாள் அமயம்—விடியல் பெரிதாய போதில். நாள் வெயிற் காலை எ-று. குறுநரிட்ட மலர் பிணையினிர் கழியின் என்ருர், அந்தணர் ஆடற்குரிய பொய்கை என்பது குறித்து. பூச்சூடுதல் பாண் சாதிக் கியல்பு.

"பாணன் சூடான் பாடினி யணியாள்
முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே" (புறம். 242)

என்பதனு னுணர்க

இனி அந்தணர் இல்லத்தியல்பு கூறுவர்.

297—300. செழுங்கன் றியாத்த சிறுதாட் பந்தர்—வளவிய ஆன் கன்றைக் கட்டிய சிறிய கால் களினிட்ட பந்தர். செழுங்கன்று என்பதனல், பால் நிரம்பக் குடிக்கவிடுதல் குறித்தார். சிறுதாளிற் செழுங்கன்றை யாத்த பந்தர் என்பதுமாம். பந்தராற் கன்று நிழலிற் கட்டப்படுதல் குறித்தார். சேதா 'என மேற்கூறுதலான் இஃது ஆன் கன்ருயிற்று.

பைஞ்சேறு மெழுகிய படிவ நன்னகர்—சாணகத்தான் மெழுகப்பட்ட தெய்வத்தையுடைய

நல்லகத்தையுடைய நகர். உடம்பிற் பூசுஞ் செஞ்சேற்றின் வேறுய்த் தூய்தாதலிற் றரையிற் பூசுவதைப் பைஞ்சேறு என்றுர்.

"ஆனின் மேய வைந்துநீ
யவற்று ளின்ற தூய்மைநீ"
(திருமழிசையார். திருச்சந்த விருத்தம்)

என்ற பெரியார் திருவாக்கை நினைக்க. கடவுளிருக்கும் அகம் ஆதலிற் றினமும் மெழுகவேண்டுவதென்பது இவர்க்குக் கருத்தாம். இவரே அகப் பாட்டில் (167)

"மாடத்
தெழுதணி கடவுள் போகலிற் புல்லென்
ஞெழுகுபலி மறந்த மெழுகாப் புன்றிணைப்
பாறுய் துள்ளிய பறைக்கட் சிற்றில்"

எனப் பாடுதலானறிக. ஆசிரியர் தொல்காப்பியஞர் இடக்கர்ப் பெயரெனக் கூறியதனுற் குறித்த பகர ஈகாரத்தையே குறுக்கி 'ஆப்பி' எனச் சாணகத்தை வழங்குதலால் பைஞ்சேறென்பதும் அது கொண்டு மெழுகித் தூய்தாக்குவதும் இந்நாட்டு ஆதிதொட்ட வழக்காமோ என் றையுறுகின்றேன். "மெழுகு மாப்பிகண் கலுழ்நீ ரானே" (புறம். 249) எனப் புறப்பாட்டில் வருதல் கொண்டு இந்நாட்டு இவ் வழக்கஞ் சங்ககாலத் துளதாதலறியலாம். பகர ஈகாரமாக வழங்காது பகர இகரமாக வழங்கி வேறுகக் காட்டியதும் ஓர் நயமாகும்.

மனையுறை கோழியோடு ஞமலி துன்னுது — ஊனுணரா மனைகளில் உறைதற்குரிய கோழியொடு

நாயும் சேராமல். நாய் வேட்டத்தில் ஊன் தருதற் குரியன; கோழி தாமே ஊனுணவாவன மேல் "மனை வாழளகின் வாட்டொடும் பெறுகுவிர்" என்று கூறியது நோக்கி உணர்க. கோழி நாய் முதலியன அந்தணர் தீண்டாதனவுமாகும்.

L. 300. வளைவாய்க் கிள்ளை மறைவிளி பயிற் றும்—வளைந்த வாயினையுடைய கிளிகள் வேதத்தின் ஓசையை வேதத்தில் அதிகார மில்லார்க்கும் பயில் விக்கும் பதி என்க. கிளிகள் பொருளறியாது மறை யொலியே பயில்வித்தலால் மறைவிளி என்றார். வேதம் ஸ்வரத்தையே தலைமையாகக் கொண்டதனாற் கூறினர் என்பதுமாம். பயிற்றும் என்றதனாற் கிளி களின் பயிற்சி மிகுதி காட்டி மறையோர் பல்காலுறச் சொல்லுதல் குறித்தார். கிள்ளையை வாயால் விசேடித் தது, சொற்றது சொல்லவல்ல சிறப்பால்.

மறைகாப்பாளர் — செல்வ முதலிய எல்லாப் பொருளினு மேம்பட வைத்து மறையைக் காத்து ஆளுதல் கருதியவாறு.

L. 302—304 வானத்துப் பெருநல் வடவயின் விளங்குஞ் சிறுமீன் — ஆகாயத்திற் பெரிய நல்ல வடக்கண் விளங்கும் அருந்ததி. வானினும் வடக் கண்ணே உயர்ந்ததாதல் சோதிட நூலிற் கண்டது. வடக்கண் வெள்ளியே உலகு வளம்படும் மழைக்குக் காரணமாதல் கண்டுகொள்க. சிறுமீன் என்றது சிறியதாய் நின்று காண்டற்கெளிய தன்மை பற்றி. இதனைத் தூலாருந்ததி நியாயத்தானும் உணர்க.

"இருண்டு தோன்று விசும்பின்
உயர்நிலை யுலகத் தருந்ததி"

என்பது ஐங்குறுநூறு (142). சிறுமீன் புரையும் கற்பினறுநுதல் — அருந்ததியொக்கும் கற்பினையும் நறு நுதலினையும் வளைக் கையினையுமுடைய மகடூஉ. கற்பினால் உள்ளத் தழகும், நறு நுதலால் இயற்கை யழகும் குறித்தார். கத்தூரி குங்குமம் முதலியவற்றாற் றிலகமிட்ட நுதலாதலாலே நறுநுதல் என்றார் என்பதுமாம். சுமங்கலைகட்கு வளையல் இன்றி யமையாமை,

> "அடகென்று சொல்லி யமுதத்தை யிட்டார்
> கடகஞ் செறியாத தோளைக்கு" (தனிப்பா. 18)

என்பதனானும், கண்ணகி கணவனை யிழந்த நாளிலே

> "கொற்றவை வாயிற் பொற்றொடி தகர்த்து"
> (சிலப். கட்டுரை. 181),

வையையொரு வழிக்கொண்டு சென்றாளெனச் சிலப்பதிகாரத்துக் கூறியதனாலும் உணரலாம். பிறர்க்கு உணவருத்த விரும்பி அயலாரறியாமல் நெல்லைக் குத்தப் புக்க கற்புடையாட்டியின் கையி லுள்ள ஒரு வளையல் போல ஒலியாமல் வினை புரிக என்பது மகா பாரதம்.

எல்லா வளையுங் கழற்றாமற் சுமங்கலையாதலால் ஒரு வளையல்மட்டி லணிந்து நெற்குத்தினள் என்பதாம்.

மகடூஉ வயினறிந்தட்ட — மகடூஉ வயிறறிந்து சமைத்த; உண்பார் வயிற்றிற்குத்தக உணவாக்குதல் குறித்தது. அடுதல் வினையாற் பதமறிந்தது பெறப் படுதலால் இங்ஙனங் கொள்க.

''வயின் கடு ஒன்றிய வயிறே'' (திவாகரம் மக்கட்பெயர்).

L. 305—6. சுடர்க்கடை—ஞாயிற்றின் கடைப்போதில், மாலையில். எ-று. அந்தணர் உண்டபின்னர் உண்ணவேண்டுதலான் மாலையைக் கூறினர்.

பறவைப் பெயர்ப்படுவத்தம் — பறவையின் பெயரைப் பெற்ற நெல். இது கருடன் சம்பா எனப் படும். இதுவே ஸாரஸாங்கம் என வழங்கப்படும். ஸாரஸம் என்பது ஸரஸ்ஸில் உண்டாயதற்கும் பறவைக்கும் பெயரென்ப. இதுவே சாரசாங்கம் என எழுதப்பெற்றது. முதலெழுத்துக் கெட்டு ராசான்னம் எனப் பிழைபட்டது ஏடெழுதினர் பிழைப்பென்க. கருடன் சம்பா நெல் என்பது தலை வெளுத்து உடல் சிவந்து கருடனைப் போன்றே இருத்தல் நோக்கிக்கொள்க. இஃது ஆறு திங்கள் நீரினின்று விளைவதால் ஸாரஸமாதல் (நீர் நிலையில் உண்டாவது ஆதல்) காண்க. இதுவே ஆகுதிக்குச் சிறந்தது.

சேதா நறுமோர் வெண்ணெயின்—செவ்விய பசுவின் மணமுடைய மோரினின் றெழுந்த வெண்ணெயின் கண். நறுமோர் வெண்ணெயென்றது அன்று கடைந்தெடுத்தது குறித்தது. மாதுளத்துறுப் புறு பசுங்காய்ப் போழொடு—கொம்மட்டி மாதுளையின் தோட்டை வேகச் செய்தலுற்ற பசிய காயின் வகிரோடு. முழுக்காயையும் வெண்ணெயில் வேவித்துப் பின்னர் வகிர் செய்வது இன்றுங் கண்டது.

L. 307—10. கறிகலந்து — மிளகின் பொடியைக் கலந்து. கஞ்சுக நறுமுறி அளை இ—கறிவேப்பிலையின் மணமுடைய இலையைக் கூட்டி.

பைந்துணர் நெடுமரக் கொக்கின் — பசிய கொத்து விடும் பருவத்து நெடிய மரமாகிய மாவினது. நறுவடி விதிர்த்த தகைமாண் காடி — மணமுடைய வடுக்களினின்று தெறித்த பருகற்குரிய தகைமை மாட்சிமைப்பட்ட காடி என்க. வண்டளிர் மாஅத்துக்

"கிளிபோல் காய கிளைத்துணர் வடித்துப்
புளிப்பத னமைத்த புதுக்குட மலிர்நிறை" (அகம். 37)

என்புழிப் பழைய வுரைகாரர். "மா—அத்துச் சாரியை: மாவில், வடித்தல் — உறந்திடுதல் புளிப் பதன் - மாதுளங்காய் முதலாகிய சில்பதம்; அமைத் தல் புளிக்குஞ் செவ்வி யுண்டாக்கப்பட்ட என்றுமாம்; புதுக் குடங்களில் மிகுகின்ற; நிறை—ஆகுபெயர்; ஊறின சாரம் எ-று." என்றெழுதுதல் காண்க.

புளிமாங்காய் வடுவிற் காடியூறுதல் இன்றுங் காணலாம். வகைபடப் பெறுகுவிர் என்றது பறவைப் பெயர்படு வத்தத்தைப் போழொடுங் காடியொடும் பல்வகையாகப் பெறுகுவீர். எ-று. பல்வகைக் குழம்பொ டுண்ணும்போதும், மிளகுச் சாற்றொ டுண்ணும்போதும், மோரோ டுண்ணும்போதும் பெறுதவிர் என்பதாம்.

கஞ்சகம்—கறிவேம்பு. கஞ்சக நறுமுறி — நறிய கருவேப்பிலை என்க. கறிக்கிடுதலாற் பெற்ற பெயர்.

இனித் திரையனுடைய நீர்ப்பாயற் றுறைப் பட்டினம் கூறுகின்றார்.

L. *311—315.* வண்டலாயமொடு — வண்டற் பாவை யிழைத்து விளையாடும் மகளிர் திரளோடு உண்துறைத் தலைஇ—உண்ணு நீர்த்துறையிற் கூடி.

புனலாடு மகளிரிட்ட பொலங்குழை — நீராடு மகளிர் புனலில் விழாமற் கரையிட்டு வைத்த பொற் குழையை.

இரைசெத்து—இரையென்று கருதி. இனர்தேர் மணிச் சிரல் எறிந்தென — இரையைத் தேர்ந்த நீல மணி போலும் சிச்சிலி எறிந்தெடுத்ததாக.

புள்ளார் பெண்ணைப் புலம்புமடற் செல்லாது— புட்கள் நிறைந்த பனையின்கண் தனியே மடலிற் செல்லாமல். தனி என்றது பல புள்ளுள்ளும் தான் ஒன்றே இரையுடையதாதல் குறித்தது. அதனாற் பல புள்ளுள்ள பனைமடலிற் செல்லாமை கூறினார். கேள்வியந்தணர் — சுருதியையும் அந்தண்மையையும் உடையார். அருங்கடன் இறுத்த வேள்வி—பிதிரர் இருணம் முனிவரிருணம் எனப்பட்ட இருகடனினும் அரிய கடனாகிய தேவரிருணத்தைத் தீர்த்த யாகத்து எ-று

"கேள்வி கேட்டுப் படிவ மொடியாது
வேள்வி வேட்டனை ... ... விறுசால்
புதல்வற் பெற்றனை யிவணர்க்
கருங்கட னிறுத்த செருப்புகல் முன்ப" (பதிற். 74)

எனப் பதிற்றுப்பத்துள் வருதலான் இம் மூன்று கடனும் உணர்க. கேள்வி கேட்டு என்றதனால் முனிவர்க்கும், வேள்வி வேட்டனை என்றதனாற் றேவர்க்கும், புதல்வற் பெற்றனை என்றதனாற் பிதிரர்க்கும் அருங்கடனிறுத்தவாறு கூறியது கண்டு தெளிக.

316—318. வேள்வித் தூணத்து — யாகத்து யூபத்தம் பத்து. அசைஇ — தங்கி. யவனர் ஓதிம விளக்கின் – யவன தேயத்தாருடைய அன்னவடிவின் வாயிலிட்ட விளக்கினைப் போலவும். உயர்மிசைக் கொண்ட வைகுறு மீனின் — உயர்ந்த வானத்தைக் கொண்ட விடியல் வெள்ளியாகிய மீனைப் போலவும். மிசை — வானம்,

"மிசை பாடும் புள்ளின்" (கலித். 46)

என வானம்பாடிப் புள்ளினைக் கூறுதலான் அறிக. பறவையின் வாயிற் கொத்திய பொலங்குழை யாதலாற் றரையிலுள்ள ஓதிம விளக்கினை யுவமை கூறினர். உயர்ந்த யூபத்தம்பத்துத் தோன்றுதலால் உயர்மிசை வெள்ளியை உவமித்தார். கோள்களையும் மீனெனல் இந் நூலாசிரியர் வழக்கென்பது பட்டினப் பாலையுள்.

"நாண்மீன் விராய கோண்மீன் போல"

எனக் கூறியதனு லுணரலாம். உரைகாரர் ஓதியம் காரன்னம் என்றார். ஈண்டு அன்னவடிவன்றி நிறம் பற்றிய தாகாமை உணர்க. பைப்பயத் தோன்றும்— தொடர்ந்து சுடர்விடாது மென்மெலத் தோன்றும்.

ஓதிம விளக்கு — கலங்கரை விளக்காகத் தீபத் தம்பத்திட்டது என்க. தோன்றும் நீர்ப்பாயலெல்லைப் போகி என்க

நீர்ப்பாயல் சலசயனம் என்று வழங்கியது; இது திருமால் பள்ளிகொண்ட தலமாகும். இவ்வுண்மை அவந்தி சுந்தரி கதையிற் றண்டியென்னும் ஆசிரியர்

கடலில் அலை கொணர்ந்த தாமரைப்பூப் பள்ளிகொண் டருளிய திருமால் திருவடியிற் சேர்வதாக இத் தலத்தைச் சிறப்பித்தலான் அறியலாம்.

'திரைப்பாயற் கோவே' என்பது பல்லவனைப் பற்றியதாகும். இஃதிக்காலத்துக் கடன் மல்லையென வழங்குவது. திரையன் பல்லவனென்பது இத் தல முடைமையானும் உய்த்துணரலாகும். இனி இவ் வடியினை "நீர்ப்பாய்த் தெல்லை போகிப் பாற்கேழ்" எனக் கொள்வதுமாகும். நீர் என்பது கடற்குப் பெயர். பாய் என்பது பாயலாதல்,

"அதனுண்டாயினும் பாயுண்டாயினும்" (புறம், 317)

எனவும்

"பாயின்று வதியும் உயவற் பெண்டிர்" (புறம். 246)

எனவும், வருமிடங்களான் உணர்க.

L. 319—321. புரவிக்குப் பால் நிறம் வேண்டி யது வெண்ணிறமுள்ளது உயர்ந்தது என்பது குதிரை நூலாதலால்.

பாற்கேழ் வால் உளைப் புரவி — பால் நிறமுள்ள வாலும் தலையாட்டமும் உடைய குதிரை எனினு மமையும். மெய் பால்நிறமுள்ளதாயின் அதற்கு உளை வாலிதென்பது பெறப்படுமாதலின் இங்ஙனம் கூறப்பட்டது.

புரவியொடு வடவளந்தரூஉ நாவாய் — புரவி யொடு வடக்கனுள்ள வளங்களைக் கொணரும் வங்கம். புரவியொடு என்றது அதன் உயர்வு நோக்கி.

"அமரர் காப்பி னீரின் வந்த
நிமிர் பரிப் புரவியும்" (184—185)

என்று இவரே பட்டினப் பாலையுட் கூறினர். புரவி—ஈண்டு வடநாடாகிய ஸிந்துதேசத்தனவாகும். நாவாய் சூழ்ந்த என்றார், பண்டம் சொரிய இடம் பெருமையால். நளி நீர்ப் படப்பை — பெருநீர்ச் சோலை. கடற்கரைச் சோலை.

பெரு மணலுலகத்து மறுகாதலின் மணன் மலி மறுகு என்றார். மறுகாதற்குத் தக மாடமலிதல் கூறினர். இது புலம் பெயர் மாக்கள் கலந்தினிதுறையும் மறுகு என்க. (பட்டினப்பாலை. 217). பரதர் மலிந்த பல்வேறு தெரு—வாணிகர் மலிந்த பலவாய் வேறுபட்ட தெரு. பண்ட வாணிகர், அறுவை வாணிகர் பொன் வாணிகர் என்றாற்போலப் பலராதலால் அவரவர் தெருவைப் பல்வேறு தெரு என்றார்.

"அரச குமரரும் பரத குமரரும்" (இந்திரவிழவு. 158)

என்புழி அரும்பத வுரைகாரர் பரதர் வணிகர் என எழுதுதல் காண்க. இவை பல் பண்டம் பகர்ந்து வீசுந் தொல் கொண்டித் துவன்றிருக் கையிற் றெருக்கள் என்க. (பட்டினப்பாலை. 211 — 212). பல் பண்டங்கள் நிறைந்த சாலைகளாதலிற் சிலதர் காக்குஞ் சேணுயர் வரைப்பு என்றார். அகலத்திலிடம் போதாது மேனிலைகளை யுயர்த்தலாற் சேணுயர் வரைப்பு என்றார். இவற்றால் இவை வணிகர்கள் இருப்புக்களாதல் உணர்க.

325. 7. நெல்லுழு பகட்டொடு கறவை துன்ன — நெல்லுக்கு உழுகின்ற எருதுகளுடனே

கறவைகள் நெருங்கி; மக்களுணவாகிய நெல்லுக் குத்தா துழுதல் கூறி எருதுகள் நெல்லுண்ணுது வையுண்ணுதல் குறித்தார். பட்டினப் பாலையுள் இவரே வணிகரை "நல்லானெடு பகடோம்பியும்" எனக் கூறுதலான் உணர்க. உரைகாரர் இவரைத் திமிலர் எனக் கருதிக்கொண்டாராதலால் "எருதுக ளோடு பசுக்கள் நெருங்காவாய்" என வுரைத்தார். இவ்வடிகளிற் றிமிலர் என்ற குறிப்பே இல்லாமை நோக்கி உணர்க. நெல்லுழு பகடு என்றும் கறவை என்றுங் கூறி அவை மாக்கட்குப் பயன்படுமாறு காட்டினர்.

326. மேமுகத்தகர் — எண்கால் வருடை (மலைபடு கடாம்.502).ஏமுகம் என்பதும் ஆம்.எகினம்–நாய்.

"ஞமலிக் கொடுந்தா ளேற்றை ஏழகத்
தகரோ டுகளு முன்றில்" (பட்டினப்பாலை. 140, 41)

என இவர் கூறுதல் காண்க. தகரும் எகினமும் சிலதர் வளர்ப்பன. தெருவின் வரைப்பிற் கொட்கும் கூழுடை நல்லில் என்றார். கூழுடையதாயும் வழங்காத மனையை நீக்கற்கு நல்லில் என்றார். வழங்கு மனைக்கும் கூழில்லாமை குறையென்று கூழுடை நல்லில் என்றார். மனைக்கு விளக்கம் மடவாளாதலானும் அவளன்ன மகளிரே விருந்திடுவாராதலானும் 'நல்லின் மகளிர்' என்றார். கொடும்பூண் மகளிரென்றது அமங்கலைகளே இல்லை யென்னுங் கருத்தால். கொடும்பூண்—வளைந்த அணிகலம். வளையல் முதலியன. அழகு செய்யும்போதே பாரத்தாற் றுங்கலாற்றுக் கொடுமையுஞ் செய்தலாற் கொடும்பூண் என்றார் எனினு மமையும்.

"சில்கல த்தியன்ற மெல்லென் யாக்கையர்" (பெருங். 1. 34, 123, 24)

எனச் சில்கலனே கூறுதலான் இக் கொடும் பூணின் இயல்புணரலாம்.

328. கொன்றையின் மெல்லிய அரும்பிற் பனி நீர்த் துளிகள் தவழ்வன போல. பைங்காழ் — பசிய மணிகளை; அவை அணிந்த அல்குலின் நுண்ணிய இழையாலாகிய துகிலசைய.

330—35. மால்வரைச் சிலம்பின்—மேகங்களை யுடைய பக்க மலையில்.

மகிழ் சிறந்து — களிப்பு மிக்கு ஆலும் பீலி மஞ்ஞையின் இயலி ஆரவாரிக்கும் தோகை மயில்கள் போல நடந்து.

காவ தமனியப் பொற்சிலம் பொலிப்ப—கால்களி லுள்ள செம்பொற் சிலம்புகள் ஒலிப்ப.

வரிப் பந்தசைஇ—வரிதலையுடைய பந்தாடலால் இளைத்து. இயலி ஒலிப்பப் பந்தசைஇ என்க. தமனியப் பொன் என்றது வெண் பொன்னை விலக்கற்கு. பந்து இடம் பெயரும் போதெல்லாம் சென்றடிக்கவேண்டுதலின் இயலி ஒலிப்ப என்றார். இப் பந்தாடலும் மேல் வரும் கழங்காடலும் உயர்நிலை வான் றோய்விடத்து நிகழ்த்துவன என்க. பந்து கையாலடித் தாடுவது. கழங்கு கையாலேந்தி யாடுவது.

கைபுனை குறுந்தொடி தத்த—கைபுனைந்த சிறு வளையல்கள் தவழ்ந்தசைய.

முத்தவார் மணல் — முத்துப்போல வார்ந்த மணலிலே. பைப்பயப் பொற்கழங்காடும் — மெல்ல மெல்லப் பொன்னாலாகிய கழங்குகளை எறிந்து ஏந்தி விளையாடும் பட்டின மருங்கின் என்க.

336—42. பட்டின மருங்கின் அசையின் நறுப் பெறுகுவிர். (345) என்க. முட்டில் வாயில் என்க. பைங்கொடி — கள்ளின் உயர்வும் விலையுயர்வும் தோன்ற இட்ட பசிய கொடி. மலர் சிதறப் பலர் புகுமனைப் பலிப் புதவின் — நறவு நொடைக் கொடி" (பட்டினப். 179—180) என்றாரிவரே. பலிப் புதவு கூறுதலால் ஈண்டுச் செம்பூத் தாய முன்றில் என்றார். செதுக்கு — வாடல். செதுக்கண் "மழுகிய கண்" எனப் புறத்தும் (261) "செதுகாற் குரம்பை" "சோர்ந்த காலினையுடைய குடில்" என அகத்தும் (63) வந்தன. செதுகு — குப்பை (ஈடு 1. 6. 1). செதுகுதலாற் (குப்பையாதலால்) செதுக்கு வாடல் என உரை கூறினர்.

முன்றிற் கள்ளடு மகளிர் — முன்றிலில் விற்றற்குக் கள்ளையடு மகளிர். வள்ளம் நுடக்கிய—வட்டில் கழுவிய. நுடக்குதல்—கழுவுதல்.

"நறவுன் மண்டை நுடக்கலின்" (அகம், 96)

என வரும்.

பிணவொடு பாயம் போகாது — பெண் பன்றி யுடன் விருப்பஞ் செல்லாது. பாசம் என்பது பாயம் எனலாயிற்று.

"என்கட் பாசம் வைத்த பரஞ்சுடர்"
என்பது திருவாய்மொழி. (3, 3, 4),

பிணவு இரும்பல் குட்டிகளையுடைமையாலும் ஆண் பன்றியைப் பிரித்து நிறுவல் வேண்டுமென்க.

343—345. நெல்மா வல்சி தீற்றி — தாமுண்டற் குரிய நெல்லரிசியாலாகிய மாவை உண்பித்து; ஊன் விருப்பத்தால் தம் முணவையும் இடித்தூட்டல் குறித்தார்.

பன்னாள் குழி நிறுத்து வல்சி தீற்றி ஓம்பிய குறிய கால்களையுடைய பன்றியிலாண். குறுந்தாளாற் றசை பருத்துத் தொங்குதல் குறித்தார். பாயம் போகாது ஓம்பிய ஏற்றை என்க. ஏற்றையின் கொழுப்பினையுடைய தசையொடு. கூர்நறுப் பெறுகுவிர் — நறவின் மிக்குச் சிறந்ததைப் பெறுகுவிர்.
"கூர்ப்புங் கழிவு முள்ளது சிறக்கும்" (தொல், உரி. 18)

என்பது காண்க. தசையொடு கூர் நறுப் பெறுகுவிர் என்றது பசியுந் தாகமும் அடங்கவேண்டி அந்தணரகத்து இவை கிடையாத குறை தீரப் பெறுகுவிர் என்க.

346 — 350. வானத்தைத் தாங்கிய பற்றுக் கோடு போல ஏணிப் படியைச் சாத்திய ஏறுதலரி

தாகிய உச்சியால் விண்ணைத் தீண்ட ஓங்கிய வேயா மாடம்—மேல் மூடாது வெளியாகிய அரமியம்: எ-று. அரமியம் — நிலாமுற்றம்.

"நிரைநிலை மாடத் தரமிய மேறி"

என்பது சிலப்பதிகாரம்.

சுடர் நெகிழி யுரவுநீரழுவத்தோடு கலங்கரையுந் துறை — அரமியத்துள்ள விளக்கு நெகிழ்ந்து பெரு நீர்ப் பரப்பில் ஓடும் மரக் கலத்தை அழைக்கும் துறை. கரையும் என்று வாய்வினை கூறியதற்கேற்ப உள்ளம் நெகிழ்ந்து என்றார். திசையறியா தோடும் கலங்களாதலின் நெகிழ்ந்தழைக்கும் என்றார். இங்ஙனம் விளக்கினை வினை யுருவகத்தால் மக்களாக்கினார்: ஆண்டுள்ள மக்கள் போல விளக்கும் உபகாரப்படுதல் குறித்தவாறு. உரவு நீர்—வலிய நீர். கடல் என்றவாறு. இறுதியில் உலகை யழிக்க வல்லதாதலின் இங்ஙனம் கூறினார்.

351—55. துறை பிறக்கொழியப் போகி — துறை பின்னே செல்லச் சென்று. வால் போன்ற அடியையுடைய மலையொடு மாறுபடும் யானையின் மருங்குல் ஏய்க்கும் தனி மனை என்க. முதுகுயர்ந்து இரு பக்கமும் வார்ந்து வேய்ந்த தனி மனையாதலின் யானையின் மருங்கு லேய்க்கு மென்றார். இது வடிவுவமை. உரைகாரர் யானை யுடம்பைச் சருச்சரையால், தெங்கிற் குவமையாக்கினார்; ஏற்பது கொள்க.

யானை மருங்கு லேய்க்கும் தனி மனை என்றும், வண்டோட்டுத் தெங்கின் வாடுமடல் வேய்ந்த தனி

மனை யென்றுங் கூறிக்கொள்க. வண்டோட்டுத் தெங்கின் வாடுமடல் வேய்தல் கூறி வண்டோட்டுத் தெங்கும் அம் மனைப்பக்கத் துண்மை உடம்பொடு புணர்த்தார். முன்றில் மஞ்சள் மண நாறு படப்பைத் தண்டலைத் தலி மனை என்க படப்பைத் தண்டலை — தோட்டச் சோலை.

தவி மனைச்சேப்பின்—தனித்த வீட்டிற் றங்கின். தோட்டங் காத்துப் பயன்கொள்ளக் கட்டிய தனி வீடு. எ—று.

356—360. தாழ் கோட் பலவின் — பறிக்கத் தாழ்ந்த குலைகளையுடைய பலாவின். சூழ் சுளைப் பெரும் பழம்— சக்கை சூழாது சுளை சூழ்ந்த பெரிய பழம். வீழில் தாழை—வீழுடைய தாழையின் வேறு என்றறியத் தெங்கினை வீழில் தாழை என்றார். "தாழை முடித்துத் தருப்பை வேய்ந்து" என இந் நூலில் வீழுடைய தாழையைக் கூறுதலா னுணர்க. தெங்கின் குழவி — தெங்கின் இளங்காய்.

358. கவை முலை யிரும்பிடி — கவைத்த முலை யினையுடைய கரிய பெண் யானை; முலை தொங்காமற் கவைத்திருத்தல் அதன் இயல்பு. கவுள் மருப்பு — கவுளினின்று புறப்படும் கொம்புகளை. ஏய்க்கும்— ஒக்கும்.

குலை முதிர் வாழைக் கூனி வெண்பழம்—வாழை யிற் குலையிலே முதிர்ந்து பழுத்த வளைவினையுடைய வெள்ளிய பழம். வெண்பழம் என்றது தோடுரித்த

பழத்தை. வாழைப்பழம் வளைவிளையுடையது உயர்ந்தது. தென்னவன் சிறுமலை வாழைப்பழத்திற் காண்க.

361—65. தீம் பல் தார முளையின்—இனிய பல் பண்டங்களை இனிமையே சுவைத்தலான் வெறுப்பின்.

சேம்பினது முளையைப் புறத்தேயுடைய முதிர்ந்த கிழங்கினைத் தின்பீர். முதிர்ந்த கிழங்கு முளையைப் புறத்தே யுடையதாதல் காண்க

கமுக மரங்கள் நெருங்கித் தரையினின்று வான் வரை யுயர்ந்து தலையிற் றழைத் திருண்டிருத்தலால் மழைகால் வீழ்ந்தது போன்றன என்றார். பகற் பெயல் மழையிற்றான் கால்வீழ்ந்தது கண்ணிற்குத் தெரியும்.

364—65. தெங்கின் மூன்று புடைப்பினை யுடைய திரண்ட காய்.

ஆறுசெல் வம்பலர்—வழிச்செல் புதியோர். காய் பசி தீர — தம்மைக் காய்கின்ற பசி தீர.

366—370. சோறடு குழிசி யிளக வீழும்—சோற்றை அடுகின்ற பானை அசையும்படி நிலத்தே வீழும்; வளங்கெழு பாக்கத்து என்க. சோறடுங் காறும் பொறாது காய்கின்ற பசி தீரும்படி முப் புடைத் திரள்காய் வம்பலர் பக்கல் வீழ்தலால் வளங் கெழு பாக்கம் என்றார். வீழ்ந்த காயாற் காய்பசியும்

தாகமும் தீர்தல் குறிக்கொள்க. சமைக்கும் உணவிற்கு முன்னர் இயற்கை யுணவு அவர்க்குக் கிடைத்தல் குறித்தார். இங்ஙனங் கொள்ளாது சோறடு குழிசி யைத் தெங்கங்காய் உடைக்க வீழும் என்றால் அது வளங்கெழீஇயதாகாமை உணர்க. காய் பசி தீர அடும் என்றும் காய் பசி தீர வீழும் என்றும் இயைத்துப் பொருள் கொள்க. கமுகஞ் சோலையி னிழலில் வம்பலர் சோறடுவாரென்றும் அக் கமுகின் புடைசூழ் தெங்கின் திரள்காய் அவ் வம்பலர் பக்கல் வீழுமென்றும் கொள்க. இதற்காகவே கமுகின் புடை சூழ் தெங்கின் என்று கூறிக்கொண்டாரென்க. வீழ் முதிர்ந்தது என்று குறித்து முப்புடைத் திரள் காய் என்றார். இளகுதல்—அசைதல்.

"வெளில் இளக்குங் களிறு" (பட்டினப்பாலை. 172)

என்பதனு லுணர்க. இதனுற் குழிசி யசைதல் அளவிற் கொள்க. உரைகாரர் இந் நயனெல்லா நோக்காது பானை அடுப்பினின்று அசைந்து வீழும் படி வீழுமென்றார். அங்ஙனங் கூறின் இது வளங் கூறிய தாகுமோ; ஆராய்ந்து கொள்க.

பன்மர நீளிடைப் போகி என்றது போதற்கு நீழல் வழி காட்டியவாறு.

நன்னகர் தோறும் விண்ணைத்தோய் மாளிகைக்கு விளங்கிய சுவர் சுற்றிய நாடு எ—று. சுவருடுத்த என்றதனுற் சூழ் சுவராதல் காண்க. நகர் தோறும் மாளிகைகள் சமனில வெளியில் எடுக்கப்பட்டுச் சூழ் சுவருடையன என்பது கருத்து. "ஒண்சுவர் நல்லில்"

என்பது இவர் பட்டினப்பாலை. சுவரில்லாதது வீடாகாது என்பது தெரிய நிற்கவும் ஒண்சுவர் நல்லிற்குக் கூறியது அது சூழ் சுவர் என்பது அறிவித் தற்கு என்க. வாடாவள்ளி—வள்ளிக்கூத்து.

"வாடா வள்ளி" (புறத். சூத். 5)

என்று தொல்காப்பியனூர் ஆண்டார். "வாடா வஞ்சி மாநகர்", 'வாடாத் தும்பை வயவர்" என்பன போலக் கொள்க.

நாடு வளம் நிறைந்தது என்பது அதன்கண் வாழ்வார் மகிழ்ந்து கூத்தாடுதலின் அறியப்படு மென்பது, கொண்டு வள்ளியின் வளம் பல தரூஉ நாடு என்றூர். அந் நாடு ஒன்றிரண்டல்ல பலவென்றது காட்டி இவற்றையுடைய திரையன் செல்வ மேம் பாட்டைக் குறித்தார். ஆண்பாற்கும் பெண்பாற்கும் பொதுவாகியது வள்ளிக் கூத்தாதல் உணர்ந்து கொள்க.

371—75. நீடுகுலைக் காந்தளஞ் சிலம்பிற் களிறு படிந் தாங்கு — சிலம்பில் நீடு குலைக் காந்தளிலே களிறு படிந்தாற்போல, பாம்பணைப் பள்ளியமர்ந் தோன். காந்தள் முகிழ் பாம்புத் தலையணந்தனைய தாகக் காணப்படுதலான் நீடுகுலைக் காந்தளைப் பாம்பணையாக உவமித்தார். இறைவனைக் களிறுக் கூறுதல்

"ஆய்ச்சி யுரலோ டார்க்கத்
தறியார்ந்த கருங்களிறே போலநின்று
தடங்கண்கள் பனிமல்குந் தன்மையானை"
(பெரிய திருமொழி, 2,10,6)

எனக் கலிகன்றியாரும்,

"என்னுனை யென்னப்ப னெம்பெருமான்"

எனச் ச'-கோபரும் பாடியருளுதலான் அறியலாம். காலை நீட்டித் தலையி லேற்றலாற் கடவுளைக் களிறென்று பெரியோர் நினைப்பர்.

"கடிசுனைக் கவிழ்ந்த காந்தளங் குலையினை
யருமணி யவிருத்தி யரவுநீ ருனல்செத்து"
(குறிஞ்சிக்கலி. 9,)

என்புழிக் காந்தட் குலைக்குப் பாம்புத் தலை உவமையாதல் காண்க.

"அணர்த்தெழு பாம்பின் றலைபோற்
புணர்கோடல் பூங்குலை யின்ற புறவு"
[என்பது கார் நாற்பது 11;. ].

படம் எடுத்துள்ள பாம்பணையே நினைதலால் நீடுகுலைக் காந்தள் என்றார். பள்ளியமர்ந்தோன் — சேக்கையை விரும்பினேன்.

"வெஃகாவிற் றுயிலமர்ந்த வேந்தே"
(திருநெடுந்தாண்டகம்).

என்பர்.

"ஆடவர்க ளெவ்வா றகன்றொழிவார் வெஃகாவும்
பாடகமு மூரகமும் பஞ்சரமா—நீடியமால்
நின்று மிருந்தான் கிடந்தா னிதுவன்றோ
மன்றூர் மதிட்கச்சி மாண்பு."
(யாப். விருத், மேற்கோள் 363)

இப் பாட்டு எதிர் நிரனிறை. இதனால் இத் திருவெஃகா என்பது கச்சியுட் பல தலத்துள் ஒன்றாதல் காணலாம்.

வெயில் — ஞாயிற்றின் வெங்கதிர். நுழைபு அறியா — நுழைந்தறியப்படாத பொதும்பர். பொதும்பருள் நுழைந்தால் வெயிலறியப்படாது எ-று. அங்ஙன மறியப்படாமைக்குப் பொதும்பரின் செறிவேயன்றி இதுவுமோர் ஏதுவென்று குயின் நுழை பொதும்பர் என்றார், மேகத்தில் நுழைந்துள்ள பொழில் வெயிலறியாமையானும் குயிலின் நுழைதலானும் இதன் குளிர்ச்சி புலப்படுத்தார். உரைகாரர் குயினுழை பொதும்பர் என்பர்.

"குயினென் கிளவி யியற்கையாகும்" (சொல். எழுத். 336)

எனத் தொல்காப்பியனார் கூறுதலால் இச் சொல்லின் பழைமை நன்குணரலாகும். சீனதேயத்து ஆமாய் (Amoy) மொழியில் குய், இன் என்னுந் தொடர் மிக்க கரிய நீராவி என்ற பொருளில் வந் துள்ளது ஈண்டைக்கு நினையலாம்.

375. குறுங்காற் காஞ்சி சுற்றிய நெடுங்கொடி — குறிய தாளினையுடைய காஞ்சி மரத்திற் சுற்றிய நெடிய கொடியையுடைய.

பாசிலைக் குருகின் — பச்சிலை மாதவியின். புன் புற வரிப்பூ — புறம் புல்லென்ற அழகிய மலர் உறைப்ப என்க. காஞ்சியின் றளையும் முறியும் பறித்து மகளிர்

அணிவராதலின் அவர் பறித்தற்குத் தக்க குறிய கால் கூறினர். மாதவியும் அவர் சூடும் பூவாகும் தளிரும் பூவும் ஓரிடத்தே கிடைத்தல் குறித்தார்.

*376—380.* கூவியன் காரகற் பாகொடு பிடித்த நூலிழை வட்டம்—அப்ப வாணிகன் கரிய அகலி லுள்ள வெல்லப் பாகொடு சேர்த்துப் பிடித்த நூற்ற இழை போன்றுள்ள தேங்குழ லுருண்டை. இழை போல் மெல்லிதாகவுஞ் சிறியதாகவும் பிழியப்பட்ட தனுல் தேங்குழல் நூலிழை யெனப்பட்டது. புறங் கரிய அகலிற் காய்ச்சிய பாகொடு பிடித்த வட்டம் என்க. பாகு அகலைவிட்டு வேருய்க் குளிர்ந்தால் உருண்டையாகப் பிடித்தல் இயலா தாகலின் காரகற் பாகொடு என்முர். பாகொடு பிடித்த நூலிழை வட்டம் என்றதனு லிஃது இடியப்பமாகா தென்க. அது பாகொடு பிடிப்ப தாகாமையும் உணர்க.

நிழல் தாழ்வார் மணல்—நிழல் தங்கிய வார்ந்த மணலில். நிழல் ஒளியுமாம். "நிலவு மணல்" என்பது புறம் (17). நீர் முகத்து—நீர் தங்கிய இடத்து. இழை வட்டம் பால் கலந்தவை போல் உறைப்ப—தேங்குழ லுருண்டை பாலிற் கலந்தன போல மலர்கள் வீழ்ந் தழுந்தும்படி.

புனலானது மரங்களின் காலைக் கழுவிச் சென்ற சோலைகள் தோறும் புனல் பெருகி மரங்களின் காலி னளவின் ஏறி வடிந்தது குறித்தார். கால் கழீஇய என்பதனுற் பொழில் தாய்தாயபடி குறித்தார்.

381—85. கழுகின் சூல் வயிற்றன்ன நீலப் பைக்குடம்—கழுகிடைக் கொண்ட மடல் வயிற்றை யொத்த நீல நிறத்தையுடைய வடிவாகிய குடம் "கள்ளின் இரும்பைக் கலம்" என்பது மதுரைக் காஞ்சி (223) ஆண்டு இரும்பை என்றாற்போல ஈண்டு நீலப்பை என்றார். இருமை—கருமை; இதனைப் பச்சைக் குப்பி என்பது தோலாற் செய்த குப்பி யாதல் பற்றி என்க. இதனாற் பைங்குடம் என்ற பாடம் எழுதினர் பிழைப்பு என்க. பை—தோற்பை. குடம் தொலைச்சி—குடத்திற் கள்ளை உண்டு தீர்த்து.

நாளும் பெருமகிழ் இருக்கை மரீஇ — தினமும் பெரிய கள் மகிழ்ச்சியின் இருத்தலைப் பொருந்தி

"நாட்கள் ளுண்டு நாண்மகிழ் மகிழின்" (புறம். 123.)

என்ப. குடம் போக்கி மரீஇ என்றதனால் இவ் வாறு கொள்ளப்பட்டது.

சிறுகோட்டுத் திங்கட் குழவியை கோள் நேர்ந் தாங்கு—கேதுக்கோள் தீண்டினாற்போல. கேதுவைச் செம்பாம்பெனவும் இராகுவைக் கரும்பாம்பென வுங் கூறுதல் சோதிட நூல் வழக்கு.

"இளம்பிறை யாயக்காற் றிங்களைச் சேரா
தணங்கரு துப்பினரா", (நாலடி. 241.)

என்பவாதலின் உரைகாரர் இதனை இல் பொருளுவமை என்றார். இது மகரவாயமைத்த நுதற் குவமை. பிறையாகக் கூறுதல் வடிவானும்

அன்றி ஒளியானும் ஆம் என்பது தோன்றச் சுடர் நுதல் என்றார். பாம்பு தீண்டின் இருள்படுமாதலிற் சுரும்பு சூழ்தவால் அதனைக் குறித்தார்.

*386—390.* நறவு பெயர்த்தமைத்த நல்லெழில் மழைக்கண் — தேனையே வடிவுமட்டில் மாற்றி அமைத்த நன்மையும் எழிலும் குளிர்ச்சியுமுடைய கண் என்க "மதிரேக்ஷணு" (சாகுந்தலம்) என்பது வடநூல் வழக்கு. உரைகாரர் நறவுண்டலாந் குளிர்ச்சியையுடைய கண் என்பர். நறவு—நறவம்; பூவிதழ் என்பதுமுண்டு. " நறவிதழ் மதருண் கண் " என்னும் பரிபாடல் (7—63, 64.; 8—75) காட்டுவர். இவற்றுள் ஏற்பன கொள்க. கட்குடந் தொலைச்சி மகிழிருக்கை மரீஇ. நறவு பெயர்த்தமை கண்மடவரல் மகளிரொடு பகல் விளையாடித் துறக்கம் ஏய்க்கும் துறைபிற் செவ்வி கொள்பவரோடு அசைஇ என்றியைக்க. பள்ளியமர்ந்தோ ணுங்கட் பொதும்பரின் மலர் உறைப்பப் புனல் கால் கழீஇய பொழில் தொறும் குடந் தொலைச்சி என்க.

*388—89.*

> "பகல் விளையாடிப் பெறற்கருந் தொல்சீர்த்
> துறக்கமேய்க்கும்
> பொய்யா மரபிற் பூமலி பெருந்துறை,"
> [பட்டினப். 103—105.]

இவையே இவர் பட்டினப்பாலையுள்ளும் வருதல் காண்க. பெறற்கருந் தொல்சீர்த் துறக்கம்—தன்னைப் பெறுதற்கரிய தொன்மையான சீர்த்த இயல்புகளை ஏதுவாகவுடைய துறக்கம் என்க. அருந் தொல்சீர்

உடையாரன்றிப் பிறராற் பெறற்கருமை குறித்த வாறும். அருஞ்சீர் — எல்லார்க்கு மாகாமை கருதி. தொல்சீர் — பலபல பிறவி தொட்டு வருதல் பற்றித் தினமும் அமிழ்தமுண்டு அர மகளிருடன் இன்பமே துய்த்தலான் கட்குடந் தொலைச்சி நாளும் மகிழிருக்கை மரீஇ மடவரன் மகளிருடன் விளையாடும் பெருந்துறைக்கு உவமித்தார்.

செவ்வி கொள்பவர் — காலந் தப்பாமல் அதன் பதனறிந்து பயனைக் கொள்பவர் என்பது கருதி.

அசைஇ — வாழ்த்தி வழிநடை வருத்தம் வீட இளைப்பாறியபின். இளைப்பாறிய பின்னர் வாழ்த்த வேண்டினர். மனம் ஒரு நிலைப்பட்டு வாழ்த்தற்கு உடம்பும் துணையாயினதாதல் கருதினமையால் இன்னிய மியக்க வேண்டுதல் நினைக. அருந்திறற் கடவுள் — கடவுள் என்றதனால் நித்தர்க்கு மேலோ னென்பதும், திறற் கடவுள் என்றதனால் முத்தர்க்கு மேலோன் என்பதும், அருந்திறற் கடவுள் என்றத னாற் பத்தர்க்கு மேலோன் என்பதும் கருதினர், மூவகை யுயிர்க்கும் மேலானமை காட்டியவாறு.

துறக்க மேய்க்குந் துறை அசைஇ அவ்வயிற் (அத் திருவெஃகாவில்) கடவுள் வாழ்த்திச் சிறிது நும் இன்னியம் இயக்கினிர் கழிமின்; உடலெடுத்ததற்குக் கடவுளை வாழ்த்தலும் யாழ்வல்லாராதற்கு அவ்வயின் இன்னியம் இயக்கலுமே பேறு என்று அவை புரிய வேண்டியது காண்க. துறக்கமேய்க்கும் துறையிற் கடவுள் ஆதலான் அதற்கும் மேலான வீட்டையுந் தரவல்லனாதலின் அவன்கட் பயன் கருதாம லிவை

புரிய வேண்டியதாம். சிறிதியக்கினிர் கழிமின் — அச் சிறிதினும் மகிழ்ந்தருள் கூருங் கடவுள் என்பதுபற்றி. கருங்கோட்டு இன்னியம்—கரிய வளைந்ததாகிய யாழ். "யாழ்கோடு செவ்விது" என்றார் திருவள்ளுவனாரும் (குறள்:279). இன்னியம் இயக்கி — இன்னிய நரம்பினை யியக்கினிர் என்பதுமாம். 'நரம்பிலிதியக்கி' என்பது மதுரைக் காஞ்சி (657). வாழ்த்தி — நெஞ்சானும் வாயானும் வாழ்த்திக் கையால் இன்னிய மியக்கிக் கழிமின் என்றதனாற் றிரிகரணமும் ஒருப் படுதல் குறித்தார். நெஞ்சாலும் வாழ்த்தலுண் டென்பது,

"பூம் பாடகத்து ளிருந்தானை யேத்துமென் னெஞ்சு"
[இயற்பா. 7. 13. 6.]

என வருதலான் அறிக. இனி வாழ்த்தி இயக்கினிர் கழிமின் — இவ் வழியெல்லாம் நுமக் கினிதாகக் காத்துக் கொடுபோந்து தானும் எளியனாய்த் தொழக் கிடத்தலால் அந் நன்றியை நினைந்து அவனை வாழ்த்தி அவனுக்குத் தொண்டாகச் சிறிது இன்னிய மியக்கினிர் கழிமின் என்றதுமாம். யாழினை நெடும்போ திசைத்தலால் மழை பெய்யுமென்ப வாதலின் அம் மழையானனையாமைக்குச் சிறிதென்றா ரெனினுமாம். இவ் வுண்மையை மலைபடுகடாத்துள்,

"பராவரு மரபிற் கடவுட் காணிற்
றொழாஅநிர் கழியி னல்லது வறிது
நுமமியந் தொடுத லோம்புமின் மயங்குதுளி
மாரி தலையும்" [மலைபடு. 230—4].

இனித் திரையன் நெடுநகர் வரைப்புக் கூறுகின்றார்.

393—395. காழோர் இகழ்பத நோக்கி—பரிக்கோற்காரர் இகழ்ந்த அமையம் பார்த்து. காழ்-கோல். இகழ்பத நோக்கிக் கீழ் கவளம் மந்தி கவரும் என்க. யானையை நோக்கித் தின்னும்படிக் குத்து மமையம் அவர் கீழுள்ள கவளங்களை இகழ்ந்த பதமென்க. கீழ்ந் நெடுங் கையானை நெய்ம்மிதி கவளம்-நெடிய துதிக்கையுடைய யானைக்குரிய நெய் வார்த்து மிதித்த கீழுள்ள கவளங்களை. நெடுங்கீழ் கையானை — கீழே தாழ்ந்த நெடிய கையினையுடைய யானை என்பதாம். கடுஞ்சூல் மந்தி கவரும் காவிற் களிறு கத னடுக்கிய வெளிறில் கந்தின் — கன்னியாய் முதற்சூல் கொண்ட பெண் குரங்கு கவர்ந்துகொள்ளுஞ் சோலையினையும்.

395—400. களிறு கதனடக்கிய வெளிறில் கந்தின் — ஆண்டுக் களிற்றின் சினத்தைத் தன் அசையா வலியான் அடக்குதற்குக் காரணமான வெளிறில்லாது வயிரமான தறியினையும். கவளந் தீற்றுங் களிறு மதக்களிறென்பது கதனடக்கிய என்பதனுற் குறித்தார். அதனுற் காழோர் பரிக்கோலாற் குத்தித் தீற்ற வேண்டுவதாயிற்றென்க. நெய்ம்மிதி கவளத்தையும் வெறுத்தல் தன் மதச் செருக்காலென்று கொள்க. மிதிகவளம் என்றது கையாற் பிசைய இயலாத மிகுதியைக் குறிப்பித்தது. யானை வயிறு பெரிதாதல் நினைக 'கடுஞ்சூன் மந்தி' 'கடுஞ்சூல் நாகு' (முல்லைக்கலி. 10) என்புழியும், "கடுஞ்சூன் முண்டகம்" என வருஞ் சிறுபாணாற்றில் நச்சினார்க்கினியரும் முதற்சூல் என்று கூறுதலால் முற்பட்ட சூலும் அதுவேயாதல் உணர்க. காவிற் கந்தின் — காவின்கணுள்ள கந்தினையும் என்பதும்

ஆம். கடுஞ்சூல்—முதிர்ந்த சூல் எனினும் ஈண்டைக்கு ஏற்கும். சூன் முதிர்தலால் உயர் மரங்களின் ஏறல் செல்லா மந்தி கவளங் கவரும் என்று களவினைப் பொறுத்தற்கு ஏதுக் காட்டினர். உணவை வெறுக்கும் யானைக்கு ஓர் கவளமின்மையாற் குறையின்மையும் கடுஞ்சூன் மந்தி வயிறு நிறைதலும் நினைந்துகொள்க. குரங்கிற்குப் பண்ணியம் நல்கலின் நாவலந்தீவிற் றென்றுதொட்ட வழக்காதலான் இதனிச்செயல் பொறுத்தருளப்படுமென்க. பரிபாடலிற்

"குரங்கருந்தும் பண்ணியங் கொடுப்போரும்" [19-38]

என வருதலா லிவ் வுண்மை யுணர்க. இது நகர்ப்புறச் சோலை கூறியவாறு.

திண்டேர் குழித்த குண்டுநெடுந் தெருவின் — திண்ணிய தேர்கள் ஓடுதலாற் குழிக்கப்பட்ட பள்ளத்தினையுடைய நெடிய தெருக்களையும். குழித்தற்கு வேண்டிய திட்பத்தாற் றேரினை விசேடித்தார்.

படை தொலைவறியாமைந்து மலிபெரும் புகழ்க் கடைகால் யாத்த பல்குடி கெழீஇ—தான் தொட்ட படை வறிதே தொலைதலறியாது மெய்யின் வலி மலிந்த பெரும் புகழின் எல்லை அளக்கப்படாது பறைந்த வீரக்குடிகள் பல நட்பிற் பொருந்தி. படை தொலைவறியாமையாற் கலத்தின் வேறலும் மைந்து மலிதலான் மெய்யின் வேறலும் குறித்தார். பட்டினப் பாலையுள்ளும்,

'கையினுங் கலத்தினும் மெய்யுறத் தீண்டி
... .... மிகல் மொய்ம்பினோர்" [பட்டினப். 70,71]

என்பது காண்க.

இளிப் படை தொலைவறிந்து மைந்து மலிந்த பெரும் புகழெல்லை யெனினு மமையும். இது தொல்காப்பியனுர் கூறிய

"படையறுத்துப் பாழிகொள்ளும் ஏமம்" (தொல், புறத். 17)

என்பதாகும். எதிர்ந்தவன் கையிற் படை தொலை வறிந்து அவனொடு மெய்யான் மைந்து மலிந்த பெரும் புகழெல்லை என்றுலும் பொருந்தும்.

புகழ்க்கடை கால் யாத்த—புகழின் அளவெல்லை மறைந்த

"கடையழிய நீண்டகன்ற கண்ணுளை" [பரிபாடல். 11, 46]

என்புழிப் பரிமேலழகர் கடையழிய—எல்லையற என வுரைத்தது கொண்டு தெளிக. கால்யாத்தல் — மறைத்தல் என்பது. "வறைகால் யாத்த" என்புழிக் கூறப்பட்டது. மைந்துமலி பல் குடி என்க. பல்குடி என்றது நால் வகைத்தானைக் குரியராய்ப் பல குடியின ராதல்பற்றி. கொடையும் கோளும் — பண்டங்களை விற்றலும் கொள்ளுதலுமாகிய இரு செயற் பகுதியும். வழங்குநர்த் தடுத்த — இயங்குவாரை நெறியிடம் போகாதபடி தடுத்த வாயில் அடையாத காவற் காடு சூழ்ந்த தோட்டத்தினையும். இதனுற் கச்சியின் வெளியில் வாணிக நிகழும் பேட்டினைக் கூறினுர். கச்சிப் பேட்டு நன்னுகையார் என்பது முதலாக வரும் பெயர்களா னுணர்க.

பேட்டு என்பதே இக்காலத்துப் பேட்டை என வழங்குவது. இக்காலத்துச் சந்தை போலத் தினமு நிகழும் வாணிகத் தலமென்று கொள்க. இது மிளை

சூழ் படப்பையில் நிகழ்வதென்க. எப்போதுங் கொடையும் கோளும் நிகழ்தலால் அடையாவாயில் உடையதாயிற்று.

"கொள்வதூஉ மிகை கொளாது
கொடுப்பதூஉங் குறை கொடாது" [210]

என இவரே பட்டினப் பாலையின் வழங்கலால் ஈண்டுக் கொடையும் கோளு மங்ஙனமாதல் உணர்க.

வழங்குநர்—இயங்குநர். "வழங்குநர்த் தடுத்த" "உண்ணுநர்த் தடுத்தமா" "ஆள் வழக் கறுத்த கண்ணுள்" என்புழிப்போல வழங்குதல் நடந்து சேற லாதலறிக. வழங்குதல்—நடத்தல்.

"பலர் வழங்காச் செப்பம்" [மலைபடு. 197]

என்ப. பல்லூராரும் பண்டங்களைக் கொண்டுங் கொடுத்தும் செல்லுமிடனாதலின் ஊர்க்குளில்லாது மிளைசூழ் படப்பையில் இப்பேட்டு அமைவதாயிற் றென்க. இவ்வூரில் எந் நிலப்பொருளும் தொக் கிருத்தல்,

"கச்சி படுவ கடல்படா கச்சி
கடல் படுவ வெல்லாம் படும்"

402—405. நீனிற வுருவின் நெடியோன் கொப்பூழ் — நீல வண்ண வடிவுடைய நெடியோன் உந்தியிலுள்ள அபாம்ஸ: என்பது இறைவன் ஆயிர நாமத்துளொன்று. இதற்குப் பொருள் குறளல்லாத வன் என்பது. உந்தித் தாமரைப் பொகுட்டின் என்க. நான்முக வொருவற் பயந்த பல்லிதழ்த் தாமரைப் பொகுட்டின்—நான்முகங்களுடைமையால் ஒப்பற்ற

வனைப் பெற்ற பல இதழ்களையுடைய தாமரையி னுடைய கொட்டைபோல. காண்வரத் தோன்றி — காணுதலுண்டாகத் தோற்றஞ் செய்து. சுடுமண்ணோங் கிய பெருநகர் வரைப்பின் — செங்கலால் உயர்ந்த புறப்படை வீடாகிய வரைந்துகொள்ளப்பட்ட இடத்தில், தோன்றி ஓங்கிய நகர் வரைப்பின்கண் என்க. திரையன் பிரமன் வழியினனாதலின் அவனிருக் கும் படைவீட்டைப் பிரமனுள்ள தாமரைக் கொட்டையாகக் கூறினார்.

"முந்நீர் வண்ணன் பிறங்கடை யந்நீர்த்
திரைதரு மரபி னுரவோ னும்பல்"

என்று இவர் முற்கூறியது நினைக.

"பிரம னாதியா வாராநின்ற பல்லவகுலம்"

என்பது சாசனம் (S. I. I. Vol. IV. No. 135.)

*406—410.* இழுமென் புள்ளினீண்டு கிளைத் தொழுதி — இழுமென்னும் ஓசையினையுடைய திரண்ட சுற்றத் தொகுதியினையுடைய. கொழுமென் சினைய கோளியுள்ளும் — கொழுவிய மெல்லிய கிளைகளையுடைய பூவாமற் காய்க்கு மரங்களிற் சிறப் பித்துப் பழமிக் கூறும் பலாப்போல — பழத்தால் மேலாகப் புகழப்பட்ட பலாமரம் போல. புலவுக் கட லுடுத்த வானஞ் சூடிய மலர்தலை யுலகத்துப் பலர் தொழ — புலவு நாற்றமுடைய கடலை ஆடையாக வுடுத்த உலகத்து என்க. வானத்தைத் தலையிற் சூடிய பரந்த இடத்தையுடைய உலகத்து. உலகத்துள்ளும் பலர் தொழ—அவ்வானத்தினும் கடலினும் பயன்மிக

அளித்தலான் என்றார். உலகில் தன்னையே யுள்ளும் பலர் வந்து வழிபட.

"பழுமர முள்ளிய பறவை போல
.... .... வந்தனன் பெரும" [ ]
"பழுமர முள்ளிய பறவையின்" [பொருந, 64]

எனப் பொருநாற்றினும் வந்தது.

"பழுமர முள்ளிய பறவை" [புறம் 370]

என்பதனை ஈண்டைக்கேற்ப நினைக.

"நிழலில் நீளிடைத் தனிமரம் போலப்
பணைகெழு வேந்தரை யிறந்தும்
இரவலர்க் கீயும் வள்ளியோன்" [புறம். 119]

என்றதன்கண் மரம்போல ஈயும் வள்ளியோன் என்றார்.

"பயன்மர முள்ளூர்ப் பழுத்தற்றாற் செல்வ
நயனுடை யான்கட் படின்" [குறள், 216]

என்பதும்

"பழுமரம்போற்
பல்லார் பயன்றுய்ப்பத் தான்வருந்தி வாழ்வதே
நல்லாண் மகற்குக் கடன்" [நாலடி, 202]

என்பதும் இக் கருத்தே பற்றியன.

"கொடுமென் சிறைய கூருகிர்ப் பறவை
அகலிலைப் பலவின் சாரன் முன்னிப்
பகலுறை முதுமரம் புலம்பப் போகும்" (குறுந். 352)

என்புழி இவரே பறவை பலவின் சாரல் முன்னுதல் கூறினர். இழுமென் புள்ளின் தொகுதி யைச் சினையின்கணுடைய பலா அப்போல என்றார்.

இழுமென் யாழ்ப்பாணரைத் தன்னிடத்துக்கொண்டு ஊட்டும் இயைபு குறித்து. பொகுட்டிற் காண்வரத் தோன்றி ஓங்கிய நெடுநகர் வரைப்பிற் பழமிக் கூறும் பலாஅப் போலப் பலர் தொழ மூதூரகத்து மேல்வந்த ஒன்னுத் தெவ்வ ருலேவிடத் தார்த்துக் கச்சியோனே கைவண்டோன்றல், என்று கிடந்தபடியே இயைக்க. காவிற் கந்திற் றெருவிற் பல்குடி கெழீஇ அடையா வாயில் மிளைசூழ் படப்பையை யடுத்துப் பொகுட்டிற் காண்வரத் தோன்றி ஓங்கிய நெடுநகர் என்க. பல்லவ மொழி பாகதத்திற் பலவ என்று வழங்கப்படுமென்று மயிடவோலுச் சாசனங் காட்டுவராதலின் இவனைப் பலவுபோ லுள்ளனன் என்பதும் ஓர் நயமேயாகும். ஈண்டு "விழவு மேம்பட்ட பழவிறன் மூதூர்" என்றது திருவெஃகா முதலாகப் பல வூர்களைத் தன் சேரிகளாகக் கொண்ட பேரூரை என்பது பொருந்தும். பழவிறன் மூதூர் — பழமையாகவே விறலாற் சிறந்த பல்லூர்களுந்தோற்றற்கு முன்னரே தோன்றிய ஊர்; "நகரேஷு காஞ்சி" என்னும் வடமொழி வழக்கால் இதன் சிறப்பும் பழமையு முணரலாம்: பல சேரி விழவானும் மேம்பட்ட விழவுடை மூதூரில் ஐவர் போல உடன்று மேல்வந்த ஒன்னுத் தெவ்வ ருலே விடத் தார்த்துக் கச்சியோனே கைவண்டோன்றல் என்க.

412. 420. அவ் வாய் வளர்பிறை சூடியாடு மழையையுடைய யந்திவானத்தைக் கடுப்ப வெண் கோட் டிரும்பிணக் குருதி யிர்ப்ப என்க. அவ்வாய் வளர்பிறை — அழகிய இடத்து வளர்கின்ற பிறை அழகிய இடம். வானம். அதனைச் சூடிய அசைகின்ற

மேதகையுடைய செவ்வந்தி வானத்தை ஒப்ப வெள்ளிய கொம்பினையுடைய கரிய களிற்றுப் பிணங் களைச் செவ்விய நெய்த்தோர் இழுத்துச் செல்ல. வளர்பிறைகொம்பிற்கும் மழை இரும் பிணத்திற்கும் அந்திவானம் குருதிக்கும் உவமையாக வந்தன. கரிய யானைத் திரளை ஈரினம் ( ) என்பவாதலின் இரும்பிணம் என ஒழிந்தார். எண்கினிரினம் (அகம். 267) என்பதுங் காண்க. ஈரைம்பதின் மரும்பொருது களத்தவிய — துரியோதனுதியர் நூறு பேரும் போர் புரிந்து பொருத களத்திலே பட. குருதி யீர்ப்ப களத்தவியப் பேரமர்க் கடந்த ஐவர்போல என்க. பேரமர்க் கடந்த ஐவர்போல — பெரும்போரை வென்ற பாண்டவரைப் போல. கொடிஞ்சி நெடுந் தேர் ஐவர் என்றது மஹாரதர் ஆதல்பற்றி, கொடிஞ்சி தாமரை முகைபோற் செய்து தேர்த் தட்டின் முன் வைப்பது. ஆராச் செருவின் ஐவர் — அமையாத போரினையுடைய ஐவர். ஐவர் போல மூதூர் மேல் உடன்றுவந்த ஒன்னுத் தெவ்வர். நூற்றுவரும் அவியப் பேரமர்க் கடந்த ஐவர்போல உடன்று.மேல்வந்த பொருந்தாப் பகைவர். மூதூரில் ஐவர்போல உடன்று தன்மேல் வந்த தெவ்வர் எனினும் அமையும். ஐவரை உவமித்தது உடன்று மேல்வந்த தெவ்வரின் பெருவீரம் பற்றி மட்டுமன்றி எண்ணுமியையுடைமை கருதி என்றுநினைக.மூதூர் உடன்று மேல்வந்த தெவ்வராவார் சேரரும் பாண்டியரும், சோழரும், சளுக்கரும், கங்கரும் என ஐவர் என்று துணிக.

> "பொலம்பூ ணைவ ருட்படப் புகழ்ந்த
> மறமிகு சிறப்பிற் குறுநில மன்னர்"
>
> (மதுரைக். 775—6)

என்பதனுல், பொலம்பூ ணவர் பேரரசருண் டென்றும் அவருட்பட்ப் புகழு மறபிகு சிறப்பினை யுடைய குறுநில மன்னரும் உண்டென்றும் உணரக் கிடத்தல் காண்க. ஈண்டுப் பாண்டியரைக் கூட்டின் அறுவராவரெனின் பெரும்பாணிலும் திரையனைக் கூட்டினும் அங்ஙனமேயாதல் காண்க. பாண்டியனை ஒழிந்த ஐவர் சேரர், சோழர், பல்லவர், சளுக்கர், கங்கர் ஆவரென்க.

இங்ஙனங் கொள்ளாது ஒன்ருருலேவிடத் தார்த்துப் பலாஅப் போலப் பலர் தொழ விழவு மேம்பட்ட மூதூராகிய கச்சியிடத்தே பேரமர்க் கடந்த ஐவர் போல இருக்கின்றுன் திரையன் என்று கூறின், பலாமரம் போன்றது கச்சியாகவும், ஐவர் போல இருக்கின்றவன் திரையன் ஒருவனுகவும் கொள்ள நேரும். நூற்றுவரும் அவியப் பேரமர்க் கடந்த ஐவர் போல உடன்று மேல்வந்த தெவ்வர் ஐவருலேவிடத்து ஆர்த்துக் கச்சியோனே என்றது இத்திரையன், துரோணன் புதல்வனுகிய அசுவத் தாமன் மகன் மரபினுேராகிய தொண்டையோர் மருகனுதலால் இவன் குலவென்றிக்கு இயையக் கூறியதாகுமென்க: நூற்றுவரைக் கொன்ற ஐவர் அசுவத்தாமனுக்கு உலேந்த செய்தி வியாசபாரதத்துக் கண்டது. நூற்றுவரை ஐவர் வென்றுர் என்றுர் என்று கூறி அவ்வைவர் போல் மேல் வந்த ஐவர் தெவ்வர் திரையன் ஒருவனுக்கு உலேந்தார் என்று இவனைச் சிறப்பிக்கு நயமும் நன்குணர்க. பலாஅப் போலப் பலர் தொழ என்க.

*421—25.* நச்சிச் சென்ருேர்க்கு ஏமமாகிய அளியுந் தெறலும் — தன்னை விரும்பிப் புக்கார்க்குக்

காவலாகிய அருளலும் தன்னை விரும்பாது தன்கட் புகார்க்குக் கேடாகிய தெறுதலும்; எளிய வாகலின் — தான் செயற்கு எளியனவாதலான்.

பொருந்தோர் நாட்டு மன்றங்கள் பாழ்படா நிற்க வும், நச்சினூர் நாடு நன் பொன்பூத்துப் பொலியா நிற்கவுங்கண்டு தன்னெடு நட்புக்கொள்ளுதலை இரந்து விரும்பினவரும், தன் வலியைத் துணைக்கொள்ளுதலை இரந்த வேறு துணை யில்லாரும் செவ்வி பார்க்கும் செழுநகர் முற்றத்து என்க. மலைந்தோர் மன்றம் பாழ்படல் கண்டு துப்புக்கொளல் வேண்டினரும், நயந்தோர் தேஎம் நன்பொன் பூப்பக் கண்டு நட்புக் கொளல் வேண்டினரும் என எதிர்நிரை நிரையாக்கி உரைக்க. இவ்விருதிறத்தாரும் வேண்டுதல் அளியும் தெறலும் எளிய ஆகலின் என்று கூறிக்கொண்டா ரென்க.

426 — 430 மலையின் வீழருவி கடலிற்சென்று புக்காற்போல என்பது திரையன் என்னும் பெயர்க் கியையக் கூறியதாகும். நன்னன் சேய் நன்னனைப் பெருங்குன்றூர் கிழார் பாடியவிடத்து இங்ஙனங் கூறுது,

" மீமிசை நல்யாறு கடற்படர்ந் தாங்கு,
யாமவணின் றும் வருதும் " (52)

என மலைபடு கடாத்திற் கூறியதனுல் இதனியையபு உணரலாகும். யாறுகட்குக் கடலே கதியாயினூற் போல நயந்திசினோர், துணையிலோராகிய பல்வேறு வகைப்பட்ட இவர்க்கெல்லாம் திரையனே கதியென்று காட்டியவாரும். இனி இவர் அவன்

முற்றத்துக் காத்திருக்குமாறு கூறுகின்றுர். மேற்பலர் தொழுக்கச்சியோன் என்றதற்கேற்பப் பணிந்த மன்னரைக் கூறினர். மன்னர் குழீஇச் செவ்விபார்க்கு முற்றத்து என்க.

இமையவர் — இமைத்தலில்லாது வெறுமையே யுள்ள இமையினையுடைய தேவர். உறையுஞ்சிமயச் செவ்வரை — வந்து தங்குஞ் சிகரங்களையுடைய தலைமை வெற்பனை. செம்மை — தலைமை "தாவரங் களுள் இமாலயமாவேன்" என ஸ்ரீ கீதையுள் வருதல் காண்க. கங்கை பொன்கொழித் திழிதருதல் கூறுத லான் இஃதிமயமாதல் தெளிக. உரைகாரர் மேரு வென்பர். வரையை வெண்டிரை இழித்தற்குக் காரணமான கங்கை எனவும், விளங்கு சுடர் நெடுங் கோட்டுப் பொன்னைக் கொழித்திழிதருங் கங்கை எனவும் போக்கருங் கங்கை எனவுங் கூறிக்கொள்க. வரையை வெண்டிரை கிழித்த என்றதனுற் கங்கை இமயமலையின் மேலே நெடுந்தூரம் ஊடுகிழித்தோடு தலைக் குறித்தார். நெடுங்கோட்டுச் சுடர் பொன் கொழித்திழிதரும் என்றதனுல் உயர்ந்த உச்சிகளிலும் பெருகி ஏறி ஆண்டுள்ள பொன்களைக் கொழித்துக் கொண்டு தரையில் இரங்குதலைக் குறித்தார். போக் கருங் கங்கை — புணையின்றிக் கடத்தற்கருமை குறித்தார்.

432 — 5 கங்கைப் பெருநீர் போகுமிரியன் மாக்கள் — கங்கை வெள்ளத்தைக் கடக்க நினைக்கும் குடி. பெயர்ந்தோடு மாக்கள். இரியன் மாக்கள் — கெட்டோடு மாந்தர். பெருநீர் — வெள்ளம்.

ஒருமரப் பாணியிற்றூங்கி யாங்கு — ஒற்றைத் தோணியால் சேர்ந்த தாமதநிலையிற் றூஙளிவரும் வரைத் துஞ்சினாற்போல. பாணி — காலதாமதம். இதனுரையில் "விடுகின்ற தோணி ஆகையாலே" என்றிருப்புதை விடுகின்ற தோன்றி யாகையாலே எனத் திருத்திப் படிக்க. விடுகின்றது ஒன்றியாகையினாலே எ. று. தோன்றி என்று படிக்காது தோணி என்று படித்த பாடம் பிழைப்பாகும். "விடுகின்ற தோணி யாகையினாலே" என்று கூறுவது பாணிக்கு ஏது வாகாமை நோக்கிக் கொள்க. நூலில் ஒருமரம் என்றதனையே விளக்குதல்கண்டு இதனுண்மை யுணரலாம்.

434—5. (மன்னர்) தொய்யா வெறுக்கையொடு துவன்றுபு குழீஇ—தளராத திறைப்பொருள்களோடு நெருங்கித் திரண்டு, செவ்வி பார்க்குஞ் செழுநகர்—அமயம் பார்த்திருக்கும் வளநகர் முன்றிலையுடைய வளநகர். முன்றில் — வாயின் மாட முற்றம் ஆகும். முற்றத்துப் பொன்றுஞ்சு வியனகர் என்க.

436—440. பெருங் கையானைக் கொடுந்தொடி படுக்கும் கருங்கைக் கொல்லன் — பெரிய கையினை யுடைய வளைந்த கிம்புரியை உண்டாக்கும் வலிய கையினையுடைய கொல்லன் — இரும்பு விசைத் தெறிந்த கூடத்திண்ணிசை வெறிஇ — சம்மட்டியால் உரத்து மோதிய பட்டடையின் எடுத்த திண்ணிய ஓசையை அஞ்சி. கூடம்—பட்டடை

"எறிதற்குப் பட்டடை" (குறள். 821),

என்ப. சம்மட்டியை இரும்பென் றொழிந்தார்; இரும்புத் திரணையே யாதலால், கூடத்திற் பட்ட

பின்னே ஓசையுண்டாதலாற் கூடத் திண்ணிசை என்றார். போர் யானைக்கோட்டிற் றொடி செறிப்பது பகைவர் மதிலைப் பாய்தற்கட் கோடு சிதையாது வலிதாதல் கருதி என்க. ஒன்னாருலைவிடத் திருத்தலால், தன் போர் யானையின் தொடி திருத்த வேண்டிய அமயமாதல் நினைந்தார்.

"நீண்மதி லரணம் பாய்ந்தெனத் தொடிபிளந்து
வைந்நுதி மழுகிய தடங்கோட்டி யானை"
(ஐங்குறு. 444)

என்பதனுற் றொடி திருத்தப்பட வேண்டுதல் உணர்க. நந்திக் கலம்பகத்தும் கதிரொளிய வெண் மருப்புக் கனவயிரஞ் செறித்தலால்,

"மதுரை கொலோ ,'
என வருதல் காண்க.

மாடத் திறையுறை புறவின் செங்காற் சேவல் இன்றுயி லிரியும் பொன்றுஞ்சு வியனகர் — அஞ்சி மாடத்து இறப்பில் உறைகின்ற புறுச் சாதியின் செங் காலையுடைய சேவல் பெடையுடனுள்ள இனிய துயிலை விட்டுப் பறந்து போதற்குக் காரணமான பொன் தங்கும் அகலமான கோயிற்கண் என்க. உரைகாரர் இடையிலுள்ள "இறையுறை" என்பதை மட்டும் எடுத்து வியனகரோடு இயைத்தார். நெடுநல் வாடையுள்

"மனையுறை புறவின் செங்காற் சேவல்" (நெடுநல். 45)

என்ற பாடங் காணப்படுதலான் கிடந்தபடியே புறவிற் கேற்றுவதே ஆசிரியர் கருத்தாமென்று

கொள்க. மாடத்திறை—மாடத்தில் இறப்புப்போற் ருழ விட்டுச் சாந்து வழித்த தாழ்வாரம். யானைக்குத் தொடி படுத்தலாற் புறவினின் றுயிலிரிதல் கூறியதனுல் இன்பத்தினும் வீரத்தினையே மிகுத்துக் கொண்ட பாட்டுடைத் தலைவ னியல்பு குறிப்பிற் கொள்ள வைத்தார். தொல்காப்பியனுர் தலைவிலையப் பிரிந்து போர்ப் பாசறையிற் புக்கிருத்தல் உடன்படுத லால் இது வழுக்காருதல் உணர்க. பதிற்றுப் பத்துள்

"மாமலை முழக்கின் மான்கணம் பனிப்ப" (50)

என்னும் பாட்டினுட் செங்குட்டுவன் காம வேட்கையினும் போர் வேட்கை மிகுத்துக் கூறியவா றென்று பழைய வுரைகாரர் கூறுதலுங் காண்க.

"ஒண்சுடர் போன்ற மன்னவ னந்தி"
(நந்திக்கலம்பகம். ).

என்பது இம்மரபில் வந்தவனைப் பற்றியது.

441—445. கீழ் கடலெல்லையின் முந்நீர் நடுவட் பகலைச் செய்யுஞ் சூரியமண்டிலம் ஒளி பரப்பி எழுந்தாற்போல கீழ் கடலெல்லையிற் சம்பா நாட்டுச் சாசனத்திற்

"கௌர வார்ணித்யுதி" (பெரு நீரொளி)

என்று இக் குலத்தரசரை வழங்குதல் காண்க. இவன் குலம் கடலிற் பிறந்த கடல்கெழு மகளிர் வழி யாதலால் இயைபு நினைக.

முறை வேண்டுநர்க்குங் குறை வேண்டுநர்க்கும் அருளி—முறை யிரந்தார்க்கும் குறை யிரந்தார்க்கும்

அருள் செய்து. வேண்டினர்க்கு வேண்டுப வேண்டுப வருளி — தன்னால் விரும்பப்பட்டார்க்கு அவர் இரவாமலே அவர் வேண்டுவனவற்றை அவ்வப் பொழுதே அருள் செய்து. இடைத்தெரிந் துணரும் இருள்தீர் காட்சி கொடைக்காட்சி. இங்ஙனம் தன்கட் டமக்கு வேண்டுவன சொல்லாதாரிடை அவருளந் தெரிந்து அவர்க்குற்றது தன்னதாக உணரும் மயக்கந் தீர்ந்த பேரறிவுடன் வேண்டினர் தமரெனினு மமையும். இவர் சொல்லாமலே நல்கலால் இருள்தீர் காட்சி கூறினர்.

"எல்லார்க்கு மெல்லா நிகழ்பவை யெஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் றொழில்" (குறள். 582)

என்றது காண்க. உரைகாரர் வேண்டினர்க்கருளி என்புழி 'வேண்டினர்க்கு' என்பதனை எடுத்துக் 'கொடைக் கடனிறுத்த' என்பதனோடு கூட்டி யுரைத்தார். அருளி என்னும் வினை அடுத்துள்ளதைத் தள்ளி மாட்டெறிவது சிறப்பாகாது. வேண்டுநர், வேண்டினர் என வேறுபடுத்த நயமும் நினைக. வேண்டுநர் — அப்போது வேண்டுகிற்பவரென்றும் வேண்டினர் — தன்னை முன்னமே வேண்டினோர் என்றும் அறியக்கிடத்த லுணர்க, பரிமேலழகர் முறை வேண்டினர் வலியரா னலிவெய்தினர் குறை வேண்டினர் வறுமையுற்றிருந்தார் (குறள். 386) எனக் கூறுதலானறிக.

*446—450.* கொடைக் கடனிறுத்த கூம்பா வுள்ளத்து — வேள்வி, கொடை, தலம் எனப்பட்ட கருமங்களுட் கொடை யென்னும் கடப்பாட்டினைச் செய்து முடித்த; குவியாத உள்ளத்துடன் — மலர்ந்த

உள்ளத்துடன். உரும்பில் சுற்றமோடிருந்தோற் குறுகி — கொடுமையில்லா மந்திரச் சுற்றத்தோடு இருந்தவனை அணுகி. கைவண் ரேன்றலாகிய இருந்தவனை என்க. வியனகர்க்கட் சுற்றமோ டிருந்தோற் குறுகி என்றது அவன் சுற்றமோடு அணைமிதமர்ந்த பின்பு குறுகுக என்று கூறியதாம். "உரும்பில் சுற்றம்" (550) என மலைபடு கடாத்தும் வந்தது.

பொறிவரி வேட்டாங்கு. பொறிவரிய புகர்முகம் தாக்கிய வயமான் — பொறிகளை யுடைய வண்டு சூழ்ந்த புள்ளிகளையுடைய முகமுள்ள மதயானையைப் பாய்ந்த சிங்கம். பொறிவரி — பொறிவண்டு.

> "வரியே வண்டெனப் படுமே"
> (பிங்கலம், விலங்கு)

"யானை மதந் துதைந்த வண்டு" (கம்பரா. ஊர்தேடு. 217).

> வரிஞிமிறார்க்கும் வாய்புகு கடாத்துப்
> பொறிநுதற் பொலிந்த வயக்களிற் றொருத்தல்.

(அகம்—78.) என்ப. கொடுவரிக் குருளை கொள வேட்டாங்கு — உடம்பில் வளைந்த வரிகளையுடைய வேங்கையின் குட்டியைப் பாய்ந்து கொள்ள விரும்பி னாற் போல என்க; இவ்வடிகளின் பொருள் இஃதே என்பது பதிற்றுப்பத்துள்.

> "இரும்புலி கொன்று பெருங்களி றடூஉம்,
> அரும் பொறி வயமா னனையை" (75)

என வருதலா னுணர்க. தொண்டையர் தமக் குப் பகைவராகி வடக்கணுள்ள கங்கருடைய கொடி

யாகிய யானையைப் பாய்ந்து அங்ஙனமே தெற்க ணுள்ள சோழர் கொடியையும் பாய்ந்துகொள்ள விருக்கும் நிலையைக் குறித்தார் என்று நினைக. தொண்டையராகிய பல்லவர்க்குச் சிங்கக் கொடி என்பதும் நினைக.

மஹா பாரதத்திற் பல்லவர் குலத் தலைவனான அசுவத்தாமனுக்குச் சிங்க வாலடையாள முண்மை காணலாம். (துரோண பர்வம். 871.) யாப்பருங் கலவிருத்தி மேற்கோளில்,

> " எல்லைநீர் ஞால முதலாய வேழுலகம்
> வல்லனாய் முன்னளந்தா னல்லனே — சொல்லுங்கால்
> வேட்டானை வீய வியன்புலியை வெஞ்சமத்து
> வாட்டானைக் கூட்டழித்த மால் "

என வருவதும் இக்கருத்தையே தெளிவித்தல் காண்க. இது பல்லவன் பாட்டாதல் உணர்க. ஆனை வீய வேட்டு வியன் புலியை வெஞ்சமத்து வாளு டைய தானைக் கூட்டோடு அழித்தமால் ஏழுலகமும் அளந்தானல்லனோ என்று பொருள் கொள்க. தானைக் கூடு — சேனையின் வியூகம். சரக்கூடம் என்பர். சோழன் தொண்டையனோடு பொருத தையும் சான்றோர் பருந்துபடப் பாண்டி லொடு பொருத இசை வெங்கிள்ளி" (நற். 141) எனக் கூறுதலானும் இவ்வுண்மை துணியப்படும். ஈண்டுப் பாண்டில் எருது; எருத்துக் கொடியுடைய பல்ல வனைக் குறித்தது. பல்லவனை எருத்துக் கொடி யுடையவ னென்பது விடையேறு வலத்துயர் வைத்த பிரான்" (நந்திக் கலம்பகம்.) என வருவனவற்றால் உணரலாம்.

" கயலெழுதிய விமய நெற்றியி
னயலெழுதிய புலியும் வில்லும் " (ஆய்ச்சி)

என்னுஞ் சிலப்பதிகாரத்துப் புலியும் வில்லு மென்றது அவற்றை யுடைய அரசரை என அரும்பத வுரைகாரர் கூறுதல் காண்க.

இத்திரையன் ஆளும் இவ்வமயம் இவ்வாசிரிய ரானே பாடப்பட்ட திருமாவளவன் இளையனாக இருந் தான் எனக் கருதல் பொருந்தும். இச்செய்தியை அவனைக்

"கொடுவரிக் குருளை கூட்டில் வளர்ந்தாங்கு"

என இவரே பாடுதலான் உய்த்துணரலாகும். இதன்கட் சோழனைப் புலிக் குட்டியோடுவமித்தது கண்டு தெளிக.

இவ்வாறே இப்புலவர் பெருமான் உண்மை வரலாறுகளை அழகு பொலிய அணிந்துரைக்கும் சிறப்பு அறிஞர்க்கெல்லாம் வியப்பும் உவப்பும் தருவ தாகும். உரைகாரர் "வயமானுடைய கொடுவரிக் குருளை" எனக் கொண்டு சிங்கத்தினுடைய வளைந்த வரிகளையுடைய குருளை" என வுரைத்தார். சிங்கத் திற்குக் கொடுவரியின்மை அவர் நினைந்திலர்.

"கொடுவரி யிரும்புலி" (குறுந்-215) (அகம்-27,92.)

எனப் பல்லிடத்தும் வருதல் காண்க.

பகைவர் கடிமதி லெறிந்து குடுமி கொள்ளும் வென்றியல்லது — பகைவர் காவன் மதில்களை யழித்து அந்நாட்டு முடியைக் கொள்ளும் வென்றியை யல்லாமல்.

வினை உடம்படினும் ஒன்றல் செல்லா தொண்டையோர் மருக — அம்முடியரசர் பணிந்தொழுகும் வினையை உடன்படாராயினும் அதற்கு ஒன்றுதல் செல்லாத வலிய வாளைத் தடக்கையிலுடைய துரோண குலத்தவர் வழியிலுள்ளவனே. துரோண குலம் தொண்ட குலமென வழங்கப்படுமென்பது துரோண காகம் தொண்ட காகம் என வழங்குதலான் அறியலாம். நாவலந்தீவில் மைதிலிமொழியில் துரோணகாகம் தொண்டகாகம் என வழங்கும். தொண்டையர் துரோணன் முதலாகக் குல முறை கூறுதல் பல்லவ சாசனம் பலவற்றினுங் கண்டது. இனி ஈண்டுப் பகைவர் குடுமி கொள்ளும் வென்றியல்லது வினையுடம்படினும் ஒன்றல் செல்லாத துரோண குலத்தவர் என்பது துரோணர் துருபதனைப் பாண்டவரான் வென்றபின்னர் அவன் துரோணர்க்குப் பணிந்தொழுகுவதாகக் கூறிய பின்னரும் உடன்படாது அவன் நாட்டைக்கொண்டு அவனுக்கு ஒரு பாதியை நல்கி அப்பாதியை அஹிச்சத்ரமெனப் பெயரிட்டு ஆண்ட பாரதகதையையே என்பது நன்கு இயைதல் காண்க. வலிய வாட்டடக் கையாற்பெற்ற கொள்ளையான துப்புர வினையுடைய தொண்டையோர் என்க.

455—60. மன்னர் மன்ன — வீரர் மதிக்கும் வீரனே. மறவர் மறவ — கொடியர்க்குக் கொடியவனே. செல்வர் செல்வ — செல்வமுடையோர் தம் செல்வத்தினு மேம்பட மதிக்கும் செல்வமாயவனே. செரு மேம்படுந—போரில் மேம்படுபவனே,

வெண்டிரைப் பரப்பில் — வெளிய அலைப் பரப்பாகிய கடலில் இருந்த. கடுஞ்சூர் கொன்ற — கடிய சூரனைக் கொன்ற. கடியனுதலாற் கொன்ற என ஏதுப்பட வந்தது. பைம்பூட் சேய் பயந்த மா மோட்டு—பசிய பூணினையுடைய குமரக் கடவுளைப் பெற்ற பெருமையையுடைய வயிற்றினையும். சேஎய் இளையோனுதலாற் பைம்பூண் கூறினர். இளமையி லணிந்த பைம்பூண் களையாத நிலையிலே சூர் கொன்றது குறித்தது. இளமையிலே போர் வென்ற பாண்டியனைப் 'பசும்பூட் பாண்டியன்' என்பது காண்க. (அகம். 338). அத்தகையோனைப் பயந்த செல்வி என்றார் அவனைப் பெற்றதே பெரும் பேறுதலான்.

துணங்கையஞ் செல்வி—தன்னை வழிபட்டாடும் துணங்கைக் கூத்தினையுடைய அழகிய செல்வி. செல்விக்கு அணங்கு நொடித்தாங்கு: — செல்விக்கு ஒரு பேய் நொடி சொன்னாற்போல. நொடித்தல் — விநோத மொழி கூறல். 'புதல்வரை மருட்டும் பொய்ந்நொடி' என்பது பெருங்கதை. (1. 33. 72.)

> "பெருங்காட்டுக் கொற்றிக்குப்
> பேய்நொடித் தாங்கு" என்பது கலி (கலித். 80)

L. 469—5. தண்டா விகை—பல்கால் வேண்டி வருந்தாது நல்கும் கொடையையுடைய — தண்டல் வருந்துதல் (பொருநாறு 104). நின் பெரும் பெயரேத்தி — அத்தகையிலுள்ள நின் பெரும் புகழை ஏத்தி. "பெரும்பெயர்ப் பறம்பே" (புறம். 113) என்ப. வந்தேன் நெடிது வாழிய என — வருதல்

செய்தேன் நீ நீடு வாழ்க என்று சொல்லி. பாணன் ஈண்டு வருதற்கே ஏத்துதல் ''ஆறலை கள்வருள்ள பாலையிற்'' 'செவ்வரை நாடர் சென்னியம்' எனச் சொல்லிப் போகச் செய்தலா னறியலாம்.

இடனுடைப் பேரியாழ் முறையுளி கழிப்பி— இடப் பக்கத்திலுள்ள பெரிய யாழை உறை கழித்து.

கடனறி மரபின் — யாழ்த் தெய்வத்திற்குச் செய்யும் கடப்பாடறிந்த முன்னோர் வழியின் வகை யாற் றொழுது துதித்து. திரையனைக் கண்டபோதே பெரும் பெயரேத்தி வந்தேன் பெரும வாழிய நெடிது என்று வாழ்த்தியதனுல் இது யாழ்த் தெய்வத்தையே வாழ்த்துவதாகக் கொள்க. நின்னிலை தெரியா அளவை— நிற்கும் நிலையினைத் தெரிதரு முன்னே. நின்னிலை—நின்னுடைய நிற்றலையெளிநு மமையும். வாழ்த்தி என்னும் எச்சம் நிலை என்பதில் நில் என்னும் வினை கொண்டது: அந் நிலையென்று சுட்டுதலால் வாழ்த்தி நில் நிலை என்பதே ஆசிரியர் கொண்டதாக நினையலாம்.

அந்நிலை — அப்படி நிற்கு நிலையிலே. நாவலந் தண்பொழில் வீவின்று விளங்க.—நாவன் மரத்தைத் தனக்கு அடையாளமாகக் கொண்ட அழகிய அருளுடைய உலகு கேடில்லாது பொலியவேண்டி. நில்லா உலகத்து நிலைமை தூக்கி — நிலையில்லாத உலகத்து நிலைக்கு மியல்பு இன்னதன் கண்ணதென்று நிறுத்துத் துணிந்து (493). அன்றே விடுக்கு மவன் பரிசில் என்க. 'நாவலந் தீவு' என்ற பெயர்க் காரணத்தை,

"திங்களி நாவ லோங்குமித் தீவினுள்"
(மணி. பாத்திரம். 20)

என வருதலானறிக. நாவலங் தண்பொழில் வீவின்று விளங்க அன்றே விடுக்குமவன் பரிசில் என்றதனுல் இவன் செய்யும் அறம் இவ் வுலகு வாழக் கருதிச் செய்வதென்பது குறித்தார்.

466—470. பொழிலிற்றுன் வீவின்று விளங்கப் பரிசில் விடுக்கும் என்பதும் ஆம். அந்நிலையிலே விளங்கத் தூக்கி — அந்நிலை யனுகல் வேண்டி. ஆண்டுத் தானுள்ள நிலையில் கிட்டுதலை வேண்டி.

"தன்னுழைக் குறுகல் வேண்டி" (390)

என்றுர் புறத்தும்.

நின்னரைப் பாசியன்ன சிதர்வை நீக்கி — நின் இடையிலுள்ள பாசிபோன்ற கந்தையை நீக்கி. வெண்புகை போன்று விளங்குகின்ற நூல் ஆடையை.

"பாசிவேர் புரை சிதாஅர் நீக்கி" (புறம். 392)

என்ப.

"எவதரைத் திரும்படு சிதாஅர் நீக்கித்
தனதரைப் புகைவிரிந்தன்ன பொங்குதுகி லுடுத்து"
(புறம். 398)

என வரும். இரும் 'பேரொக்க லொருங்குட னுமீஇ — கரிய பெரிய சுற்றத்தோடு சேர உடலுக் கியைய உடுக்கச் செய்து; உரைகாரர் படி சேர உடுக்கப்பண்ணி எனக் கூறுதலான் அவரும் உடன்

உடலூடீஇ என்ற பாடமே கொண்டது துணியலாம், உடல் படி என்பது,

"படிச்சோதி யாடையொடு பல்கலனுய்ப் கலந்ததுவோ"
(திருவாய்மொழி. 3, 1, 1)

"நினையா ரவன் மைப்படியே" எனவும் வருவன வற்ருல் அறிக. இங்ஙனமன்றேல் ஒடு, ஒருங்கு, உடன் என்ற மூன்றும் சேர நின்று பொருள் சிறவாமை காண்க.

"அணி யெல்லா மாடையிற் பின்"

என்பவாதலான் முற்பட உடுத்தல் கூறினர்.

471—5. கொடிய வாள் சிதைத்த வடுக்கள் ஆழ்ந்த வலிய கையையுடைய மடை வல்லவன்.

சமைத்த பல்வகை ஊனின் கொழுவிய துண்டங் களும். வல்லவ என்பது வடமொழியில் மடையன் பெயர். கதுவல்—சிதைத்தல்.

"மன்னெயில் கதுவு மதனுடை நோன்ருள்"
(பட்டினப்பாலை. 278)

என இவர் கூறுதல் காண்க.

அரி செத்து உணங்கிய பெருஞ் செய்ந்நெல்லின். அவற்பதத்துப் பச்சையி லறுத்த அரி ஈரஞ் செத்து உலரவிட்ட பெருமையையுடைய செவ்விய நெல்லி னுடைய. தெரிகொளரிசி திரள் நெடும் புழுங்கல்— தெரிந்து பொறுக்கிய அரிசிக் குவியலாலாகிய முனை முரியாதனவும் இடை முரியாதனவுமான சோறு. அரிக் காய்ச்சலிட்ட செந்நெல்லின் பொறுக்கரிசிச்

சோறு. எ—று. அரிசித் திரள் என்றார் பலருண்ண வேண்டி யாக்குதலான்.

"தமக்சென் றுலேயேற்றூர்" (ஆசாரர். 39)

என்பது நினைக. இங்ஙனங் கொள்ளாது அரிஞாயிறென்றும் உவமையென்றும் பலவாறு உரைகாரர் கூறுதல் காண்க.

அருங்கடித் தீஞ்சுவை யமுதொடு பிறவும் — அரிய காவலில் வைத்துப் போற்றிய இனிய சுவையுடைய அமுதனைய உண்டிகளோடு பிற ஐந்து சுவையுள்ளனவும். எறும்பு புகாது பாதுகாக்க வேண்டுதலான் அருங்கடி கூறினர்.

476—480. விருப்புடை மரபிற் கரப்புடையடிசில் — உண்டார்க்குப் பின்னும் வேட்கை உண்டாக்குதலையுடைய முறைமையிற் றலையாப்புக் கரத்தலையுடைய அடிசிலை. தலையாப்பு — பாத்திரங்களின் மூடி. ஈ மொய்க்காதபடி தலையாப்புக் கரத்தல் வேண்டினர். இவ்வுழித் தலையாப்புப் பரத்தலையுடைய என்பதனைத் தலையாப்புக் கரத்தலையுடைய எனத் திருத்திக்கொள்க.

"வறைகால் யாத்தது வயின்றொறும் பெறுகுவிர்" [133]

என்று இவரே முன்னர்க் கூறுதல் காண்க. கால் யாத்தது—மறைத்தது என உரைகாரர் கூறுதல் காண்க.

மீன் பூத்தன்ன வான்கலம் பரப்பி — வான மீன்கள் இரவின் மலர்ந்தாற்போன்ற வெண்கலத் தாலங்களைப் பரக்க இட்டு.

ஒவ்வொருவரையும் தந்தை மகவினைப் பார்ப்பது போலப் பிள்ளை முறை பிள்ளை முறையாக இனிது நோக்கி, ஒவ்வொருவர்க்கும் முகன் இனிது காட்டி.

ஆனுவிருப்பின் - நீங்காத விருப்பத்துடன் அவருண்டற்கண் தனக்குள்ள ஆனுவிருப்பின் என்க. தான் நின்று ஊட்டி - தான் எதிர்நின்று இன்சொல்லால் உண்ணச்செய்து, உண்டவர் வயிறு நிறைந்த பின்னும் தன்விருப்பினுற்றான் சிலவற்றை உண்ணச் செய்தலைக் கூறினர்.

இருள் வானிற் றிங்கள் போலும் அழலவிர்ந்த வெள்ளித் தாமரையை. நீடிரும் பித்தை பொலியச் சூட்டி - நீண்ட கரிய தலை மயிரில் விளங்கச் சூட்டி' நீடிரும்பித்தை கங்குல் வானமாகவும், திங்கள் வெண் பொற்றாமரையாகவும், கொள்க. பைம் பொற்றாமரைப்பூச் சூடுதலே பெருவழக்கு. சிறுபான்மை வெண் பொற் பூவுஞ் சூடுதல் உண்டென்பது இதனாலறிக. மங்குல் வானத்து - இருள் வானில் 'மங்குல் ஞாயிறு' (பரிபாடல். 13, 1.) என்புழி இருளைக் கெடுக்கும் ஞாயிறு என்பர்.

481 - 85 ஆடுவண்டிமிரா அழலவிர் தாமரை- சூழலும் வண்டுகள் ஒலியாமல் பொற் கொல்லர் ஊதுலைத் தீயின் மலர்ந்த தாமரை வடிவாகிய வெண் பொற்பூ. மங்குல் வானம் நீடிரும் பித்தைக்கும் திங்கள் வெண் பொற் பூவிற்கும் உவமையாய் வந்தன. இனிப் பொற்பூவே பாணர்க்குச் சூட்டுதல் வழக்கென்று நினையின், திங்களேய்க்கும் அழலவிர் தாமரை தனக்குப் பகையாகிய திங்கள் தன்னைக் குவிக்க இய

லாதபடி தான் தாமரையாகவே பொருந்தக் காட்டி மருட்டும் அழலவிர் தாமரை என்று கூறுக. ஏய்த்தல் இப் பொருட்டாதல் பதினெண் கீழ்க்கணக்கினுள் ஒன்றாகிய பழமொழியுள் "காப்பாரே, போன் றுரைத்த பொய் குறளை - ஏய்ப்பார்" (193) என வருதலான் அறிக. இருள் வானத்துத் திங்கள் என் றது அவ்விருளிற் றாமரையைக் குவிக்க வல்லதாதல் பற்றி என்க. திங்களேய்க்குந் தாமரை என்பது "மதிமயக்குறூஉ நுதல்" (குறுந். 226) என்புழிப்போல வந்தது.

வலியுடைய கடலை முகந்த பருவகாலத்து மேகத் தில், பகலிற் பெய்த மழைத்துளியுடன் மின்னல் மேலே சென்றாற்போலப் புனைந்து பின்னிய கரிய கூந்தலிடம் விளங்கப் பொற்பூவாற் றொடுத்தலமைந்த மாலையை விறல்பட ஆடும் பாணிச்சியர் பூண.

486 - 490 நூலோர் புகழ்ந்த மாட்சிய - குதிரை நூல் வல்லவர் புகழ்ந்த மாண்புடையன. மால்கடல் வளை கண்டன்ன - திருமாலுடைய பாற்கடலிற் சங் கத்தைக் கண்டாற்போன்ற வெள்ளிய பிடரி மயிரை யுடைய குதிரைகள். "பால்திரண்டனைய மெய்ய" என் றார் கம்பரும். மெய் பாற்கடலாகவும் உளை அதன்கண் வளையாகவுங் கொள்க. குதிரைக்கு உயர்ந்த நிறமா கிய வெண்மையைச் சிறப்பித்தவாறு. துணைபுணர் தொழில் புரவி நால்குடன் பூட்டி - இனத்தொடு ஒத்து வினைசெய்தலையுடைய புரவி நான்கினையும் ஒருங்கு பூட்டி.

அரித்தேர் நல்கியும் அமையான் - காற்றை ஒத்த தேரைக் கொடுத்தும் கொடை நீங்கானாகி.

பொருந்தாத பகைஞர் போரைக் கெடுத்து உலை விடத்து ஒழித்துவிட்ட இவுளி. இவை ஏறுகுதிரைகள். ஒழித்த இசும்பு செல் இவுளி - பகைவர் விட்டுப்போன ஏற்றிழிவுகளிற் செல்லும் குதிரைகள். தேரூராத ஏற்றிழிவுகளில் ஏறிச்செல்லற்கு இவுளியொடு பக்கரையும் நல்கியவன்று. இசும்பு - ஏற்றிழிவு. இசும்பு செல் இவுளி என்பது இயற்கைக் கியையும். விசும்பு செல் இவுளி என்பர் உரைகாரர். பசும்படை தரீஇ - பசிய சேனமுந் தந்து. அன்றே அவன் பரிசிலுடன் விடுக்கும் என்க.

491 - 5. இனிய தாளத்தில் கின்னர மிதுனம் பாடும் தெய்வத் தன்மையுடைய மலைச் சாரலிடத்து. மயில்களாடும் மாமகள் நெருங்கிய குறுங் காடுகளையுடைய.

496 - 500. முசுக்கலை பாய்ந்து உதிர்த்தலால் மலர் வீழ்கின்ற பெருங் காட்டினையும். பெண் குரங்குகள் குப்பைகளைச் சீத்து வாரும் மானும் புலியும் வினைமடிந் துறங்கும் முற்றத்தினையுமுடைய.

தெய்வத் தன்மைக்கேற்பப் பறவையும் விலங்கும் பணிசெய்தல் கூறிப் பகையின்மை புலப்படுத்தார். பாடுதல், ஆடுதல், பூவுதிர்த்தல், சீத்தல் இவை தெய்வ வழிபாட்டிற் குரியனவாதல் நினைக. கின்னர முரலும் என்றதனால் மஞ்ஞை ஆடுதல் கொள்ளப்பட்டது. ஆலுதல் ஆடுதற்கு ஆதல் "கரை நின்றாலு

மொரு மயில்" (மணிமே. 4, 11), "மயிலால ... குயில்களிசைபாட" (சிலப். கானல்வரி. 26) என்னு மிடங்களிற் காண்க.

முற்றத்தே செம்மையான தீயைப் போற்றிய மனன சீலமுடையோர்.

498 - 9. வெள்ளிய கொம்பினையுடைய களிறுகள் கொணர்ந்து தந்த சமிதைச் சுள்ளிகளாலே வேள்விசெய்யும். இதனால் யானை பாகவதரை வழி படல் குறித்தார்.

500. இலங்கருவிய ஒளிறுமலை கிழவோன். இலங்கும் அருவிகளையுடைய புகழாலொளிரும் வேங் கட மலையை ஆளும் உரிமையுடையோன். எ. று.

வென்வேற்றிரையன் வேங்கட நெடுவரை (அகம். 85) என்பதனால் இங்குக் குறித்த மலை வேங் கடமாதல் தெளிக. மலை கிழவோன் அன்றே விடுக்கு மவன் பரிசில் என்று கூறப்புக்கவள், அவன் மலையைத் தெய்வத்தன்மையால் இங்ஙனம் தெளியக் கூறினான். அவன் பொருள்தர விருப்பது போலச் செல்லின் அருள்தரும் மலையும் உடையன் என்று இவ்வுலகம் அவ்வுலகமாகிய இரண்டறமும் பயன்பட இருக்கும் அவன் மேன்மை தெரிவித்தவாறும்.

"வேங்கடத்துச் செல்லின் அருளியுமாழியவன்" (புறப். வெண். 9, 42) என ஐயனாரிதனாரும் கூறு தல் காண்க. இங்ஙனம் இப்பாட்டு ஆற்றொழுக் காகப் பொருள் கொள்ளக் கிடந்து மாட்டெறிய

வேண்டாது பொருட் பொலிவிற் சிறந்து பயில் தொறு மின்பம் பயக்கும் நயமுடையதாதல் கண்டு கொள்க. 'கங்குலும்' என்ற வெண்பாவிற் கடலார்ப் பதூஉம் திரையனை யான் பயந்தேன் என்னுஞ் செருக்கின் பயனும் என்று கொள்க. கடல்ஃயான் பயந்தேன் என்றது திரையன் முந்நீர் வண்ணன் பிறங்கடையினுல் அந் நீர்த்திரை தருமரபிற் ருேன்று தல் பற்றி யென்றுகொள்ளத் தகும். இதைப் பற்றி முன்னே கூறினேன்.

---

